# பகவத் கீதை.

1, 2 அத்தியாயங்கள்.

தமிழ் பாக்கள்.



ஆக்கியோன்,

மஹரேஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All rights Reserved.] 1940. [விலை அணா 4

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

1, 2 அத்தியாயங்கள்.

## தமிழ் பாக்கள்.



ஆக்கியோன்,

**மஹரேஷி கிருஷ்ணஜி,**

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All rights Reserved.] 1940. [விலை அணா 4

---



உ

# இந்த கட்டிடந்தான்
## :: கீதா பவன் ::

குத்துக்கல்தெரு,
கல்லிடைக்குறிச்சி.



இந்த கட்டிடத்தில் எந்நாளிலும் மஹரேஷி கிருஷ்ணஜி, மாலை 3-மணிக்குமேல் 5-மணிவரை கீதாபிரசங்கம் செய்வார் கீதா வாக்கியங்கள் சம்பந்தமாக எதாவதுகேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியவர்கள் அச்சமயத்தை உபயோகப்படுத்திக்கொள்ள கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

மேலும் இந்த கீதை என்ற தமிழ் கிரந்தமானது 1112-ம் ஆண்டு சித்திரை-மீ பஞ்சமி தினத்தன்று எழுத ஆரம்பிக்கப்பட்டு சித்திரா பௌர்ணமி யன்று பூர்த்திசெய்யப்பட்டது.

12-வது அத்தியாயம் 'பக்தியோகம்' என்ற பாகத்தை மட்டும் சுமார் 5000 பிரதிகள்வரை அச்சடிக்கப்பட்டு பொதுஜனங்களுக்கு இனாமாக வழங்கப்பட்டிருக்கிறது.

இப்போது கீதையின் 18 அத்தியாயங்களையும் 12 புஸ்தகமாக அச்சடித்து மாதந்தோறும் பொதுஜனங்களுக்கு கொடுக்கப்படும். ஒவ்வொரு தனிப்பிரதியின் விலை அணா 4-மட்டும். மொத்தமாக 12 பிரதிகளுக்கும் ஆர்டர் கொடுப்பவர்களுக்கு ரூ. 2-8-0 விலைக்கு கொடுக்கப்படும்.

பொதுஜனங்கள் இந்த தமிழ் கீதையை வாசித்து தாய்ப்பாலை குழந்தை விருப்பமுடன் பருகவதேபோல் நமது தாய் பாஷையான தமிழின்மூலம் கீதா ரஸத்தை பருகுமாறும், பருகிமனச்சாந்தி பெறுமாறும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இப்படிக்கு,

கல்லிடைக்குறிச்சி,<br>1, ஜூலை 1940. } உங்களில் கலந்துள்ள, கிருஷ்ணஜீ

(மனோதத்துவமறியும் சம்பந்தமாக பழகப்பிரியப்படுவோர்கள் தாம்பிரபர்ணிக் கரையில் கட்டுபட்டுள்ள 10 எகர் விஸ்திரணமுள்ள யோகாச்ரமத்தில் தொண்டராகச் சேரலாம். விபரத்திற்கு மேல்கண்ட விலாசத்திற்கே எழுதவும்.)

# முகவுரை.

உலகம் தோன்றி உலகமாந்தர் அறிவுபெற்ற காலத்து உலகானுபவத்தில் நடைபெறும் ஜனன மரணங்களினால், மரணபீதியும் ஜனன கஷ்டத்தையும் மனிதர்கள் அறிந்தோர்களாய் பசிப்பிணியும் நோய்ப்பிணியும் மனப்பிணியும் அனுபவத்தில் கண்ட மாந்தர்கள் இவைகளுக்கெல்லாம் காரணம் கண்டுபிடிக்க முயன்று எல்லா சிருஷ்டிக்கும் ஆதிசக்தி ஒன்று இருக்க வேண்டுமென்று முடிவுக்கு வந்தனர்.

தங்களுக்கு கஷ்டம் வந்தகாலத்தில் அதைத்தவிர்த்துகொள்ள முயன்று மனித பிரயத்னங்களால் தடுத்துக்கொள்ள முடியாத நிலை ஏற்பட்ட காலத்து நடப்பவை நடந்து தீருமென்றும் அப்படி செய்விப்பதற்கு ஓர் அனாதி சக்தி உலகத்தை ஆள்கின்றதென்று மனிதர்கள் தெரிந்து கொண்டது, தன் அறிவினால்தான். உலகம் தோன்றிய காலந்தொட்டு முதன்முதல் மனித சமூகத்தை அறிவில் உயர்த்திய நமது பாரத தேசம் ஆதிசக்தி விசாரத்தை தன்னால் கூடிய அளவு விருத்திசெய்து கொண்டுவந்திருக்கிறது.

இவைகளை ஊன்றி ஆலோஜிக்குமிடத்து உலக மாந்தர்களுக்கு உலகவாழ்வு ஏற்படவேண்டுமானால் உணவு முதலியவை எப்படி சரீரத்திற்கு இன்றியமையாததோ அதுபோல் மனச்சாந்திக்கு தெய்வ உணர்ச்சியும் இன்றியமையாததாய் அமைந்துள்ளது.

ஆகவே உலக மாந்தர் நடந்துகொள்ள வேண்டிய திட்டங்களை ஏற்படுத்திய முன்னோர்கள் தாங்கள் காணும் மனித சமூகத்தின் புத்தி சக்திக்கு தகுந்தபடி ஓர்மதம் அமைத்துகொண்டு அதின் மூலம் மனித சமூகவாழ்வை இன்பமயமாக்கினார்கள். ஆகையினால் எந்த மதமானது அந்த மதத்தை அனுஷ்டிக்கும் ஜனங்களுக்கு இன்பத்தை கொடுக்கவில்லையானால் அந்தமதம் அம்மனிதன் சம்பந்தப்பட்டமட்டிலும் நிஷ்பிரயோஜனமாக அமைகின்றது. அம்மனிதனும் தான் அறிந்துகொண்டதில் மனச்சாந்தி பெறாமல் வேறுவேறு உணர்ச்சியை தேடியலைகின்றான். இப்படித்தேடும் கோடான கோடி ஜனங்களை தன்னுளடக்கி கொள்ளத்தான்.

பகவத் கீதையில்.

எப்பக்தனுடையவும் ஏற்ற விருப்பப்படியே
அப்பக்தனருமையில் செய் அத்தொழுகைதனை யேற்று
இப்பவத்தை கடப்பதற்கு இசைந்ததோர் வழியாக்கி
ஒப்பியவன் கொண்ட ஒவியமது ஆவேனுன்
[என்றருளியிருக்கின்றார்]

ஆகையினால் ஈசனையடைய மார்க்கம், வகுப்போரை பொறுத்திருக்கிறதே தவிர ஈசனை பொறுத்ததாயிருக்கவில்லை. உலக சிருஷ்டியில்பட்ட எல்லோருக்குமே மோக்ஷமளிக்க கங்கணம் கட்டிகொண்டிருக்கும் பகவானை, தேடவேண்டிய பொருப்பு ஜீவவர்க்கத்தை பொருத்திருக்கிறது. ஆகவே ஜீவர்களுடைய புத்தி சக்திப்படி ஈசனை பிரார்த்திப்பது வேண்டுமே தவிர இம்மார்க்கத்தில் தான் மோக்ஷமடையலாம் அம்மார்க்கத்திலடைய முடியாது என்று சொல்வது அறிவுடையோர் செய்கையன்று இவைகளெல்லாம் நன்கு ஆலோஜித்தே கீதாசாரியனை சாக்ஷாத் எம்பெருமான்.

பக்தியோடு பழமதையோ பூ இலை ஜலமதையோ
சக்திப்படி எவரேனும் சாற்றும் நான்கிலொன்றை
முக்தியளிக்க வல்ல முதன் மூர்த்தி யெந்தனுக்கு
சொக்க மனத்தோடு சமர்ப்பிக்க நான் ஏற்பேன்

என்றருளியபடி, பக்தியோடு என்றதினால் எச்செய்கை செய்தாலும் பக்திதான் முக்கியம். மேலும் கொடுப்பது புஷ்பமோ, பூவோ இலையோ, அல்லது ஜலமோ எதுவாயிருந்தாலும் சரி, அவைகள் பரிமாணத்தை பொருத்தோ அல்லது அளவை பொருத்தோ அல்ல, கொடுக்ககூடியவை சிறியதானாலும், பெரியதானாலும் பக்தியை பொருத்துஎன்று ஏற்படுகிறது. கொடுப்பது என்பது யாருக்கு, ஏற்பவருக்குகொடுப்பது என்று ஏற்படுகிறது. முக்தியளிக்க வல்ல முதன்மூர்த்தி என்றதினால் கேவலம் செம்பாலும் கல்லாலுமைத்த உருவங்களுக்கல்ல உங்களால் கொடுக்கப்படும் வஸ்து துன்பமுறும் ஜீவகோடிகளுக்கு போய்சேரவேண்டும் காணப்படும் ஜீவகோடிகளே பரமாத்மா ஸ்வரூபமானதினால் அவர்களுக்கு கொடுக்கபடுவது தண்ணீர் தழை, பூ, கனி எதுவானாலும் அவர்கள் சந்துஷ்டியுடன் பெறுவது நான் ஏற்பதாகவே முடியும்.

ஆதலால் உலகமாந்தர்கட்கும் ஜீவகோடிகட்கும் உன்னால் இயன்றதை யளி. அவர்கள் அதினல் சந்தோஷம் உறுவர்.

இன்னமும் யோஜிக்கவிடத்து தண்ணீர், தழை, பூ, கனி என்றதினுல் உலகத்தில் காணப்படும் எல்லா ஜீவபேதங்களுக்கும் உன்னுலியன்ற உதவி செய்யென்று ஏற்படுகின்றது.

ஜீவபேதங்களென்றுல் மரங்கள் ஜீவனுடையது. அவைகளை காப்பாற்ற தண்ணீர் கொடு. மரம் சந்துஷ்டியடைய பரமாத்மா வாகிய எனக்கு சந்தோஷம் தழைகளால் பசு முதலிய ஜீவப்பிராணி கள் சந்துஷ்டியடையும் புஷ்பம் முதலிய மூலம் ஊர்வன, பறப்பன முதலிய இனங்கள் சந்துஷ்டியடையும். கனிவர்க்க மூலம் மானி டர்கள் சந்துஷ்டியடைவர். ஆகையால் கொடுப்பது எல்லா ஜீவர் களுக்கும் இருக்க வேண்டுமென்று கருத்து.

ஆதலால் சமரஸமென்றுல் மனித சமூகத்திற்கு மட்டுமல்ல. ஜீவவர்க்கங்களையும் பொருத்திருக்கிறது.

இப்படி ஒவ்வொரு பாவின் விருத்துரையை வரைவது என்பது முகவுரையாகாது இப்படிப்பட்ட அழகும் அர்த்தமுமுடைய பாக்கள் பல கீதையிலுள.

இவைகளை நமது தமிழகம் தெரிந்துகொள்ள வேண்டு மென்ற எண்ணத்துடன் வடமொழி பாக்களுக்கு கூடிய மட்டிலும் அதினுடைய அர்த்தம். சுவை முதலானதுகள் குன்றுமல் தமிழில் பாக்கள் செய்து சுமார் 500, பாக்களுக்கு மேல்கொண்ட திராவிட தமிழ் கீதை பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. அன்பர்களை ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

எந்த பரம் பொருள் இந்த கீதையை என்னகத்திருந்து எழுத தூண்டிற்றே அதே பரம்பொருள் எங்கும் எல்லாரிடத்தும் நிறைந்திருப்பதால் அப்பரம் பொருளே எல்லோருக்கும் மனச் சாந்தியைத் தரட்டும்.

மஹரிஷி கிருஷ்ணஜி.

---

# பகவத் கீதையின் புகழுரை.

எல்லா உபநிஷத்தையும் எழிலாவெனக் கொண்டு
வல்லான் கோபாலனே மதிப்புடை கறப்போனாகி
வில்லான் விஜயனிங்கு மடுவூட்டும் வத்ஸனாக
சொல்லால் கீதையிங்கு சுவை பாலாச்சுதன்னே

எல்லா உபநிடதங்களையும் அழகிய பசுவாக அமைத்துக் கொண்டு, உலகத்தை படைத்து அளித்து அழிக்க வல்லானான சாக்ஷாத் கோபாலனே (கடவுளே) உலகு மதிக்க கறப்போனாக அமைந்து, வில்விடும் சக்தியில் பெரியோனான அர்ச்சுனனை கேட்குமாறு அமைத்துகொண்டு இவ்வுலகமாந்தரெல்லோரும் உஜ்ஜீவிக்கும் வண்ணம் இக்கீதா உபதேசமென்ற இச்சுவையுள்ள பாலை உலகத்திற்கு ஈய்ந்தார் கடவுள்.

**கருத்துரை.**

கீதை எல்லா உபநிடத்தின் ஸாரத்தை, தன்னுளடக்கியுளது. சொன்னவர் (கடவுளே) ஆதலால் வேதமே.

கேட்பவர் அர்ச்சுனன் ஸம்சியமறகேட்கும் சக்தியுடையோன்.

**பாலாயமைந்தது** உபநிடஸாரம், பசுவினிடத்தில் அமைந்திருப்பது என்ன? சுவைதரும் பால், வெண்மையான நிறமுடையது அதுபோல் சுத்தமான ஸாரத்தையுடைய உபநிட வாக்கியங்களையுடைத்தானது.



# :-: பகவத் கீதை. :-:

தமிழ் பாக்கள்

ஆக்கியோன்: மஹரேஷி கிருஷ்ணஜி
பாரத்வாஜ குலோத்பவன்,
கல்லிடைக்குறிச்சி.

1. தற்மமிகு குருபூமியிடை தம்பி சுதரோடு நம்மவரும்
வற்மம்தீர் செய்யுத்தம் செப்பு சஞ்சயாயென
கற்மமே பெரிதாக கருத்தினில் கொண்டந்த
திர்தாட்டிரன் வினவுதலும் சஞ்சயன் சொல்லுற்ருன்.

2. இருபுரமும் நின்ற சைன்யம் இருதிசையும் கண்ட பின்பு
துரியோதனனும் செப்புவான் துரோணரே நோக்குமென
துருபத தேசன் மைந்தன் துஷ்டதூய்மன் பேரான்
பெருமையோடு வகுத்தந்த பாண்டவ சைன்யமதை

3. பீமனர்ச்சுனனிகர் புருஜித் குந்திபோஜன்
பாமரரியுமந்த பாபந்திர் காசிராஜன்
சோமனை பழிக்கவல்ல சுபத்திரா புத்திரருடன்
தோமரம் பிடித்து நிற்கும் துரோபதை தமயனையும்

4. மருபதம் வேண்டிநிற்கும், மாண்புடை சைப்பிய ராஜன்
துருபத தேசத்தந்த துங்கமிலதி பதியும்
த்ருடங்கொண்ட யுதாமன், யுத்த மௌஜா
திருஷ்டகேதுபால் நீரும், த்ருஷ்டிதனை கொள்வீரே

5. நம்பக்கம் வல்லவர்கள் நாமமதை நவில்கின்றேன்
தம்பக்கம் ஜயங்கொள்ள தக்கமையுள்ளோரவர்
எம் குருவே எங்களுக்கு எழும் வெற்றியே யென
நம்பிக்கை கொண்டவரும் நம்மையே சார்ந்துளர்கள்

6. பாட்டனர் பீஷ்மருடன் பலசூரர்களும்
காட்டின குண்டலத்தான், கர்னனுமிங் குண்டு
சூட்டிய மாணிக்கமுடன், சூரனசுவத்தாமாவும்
மாட்டிமடிக்கவல்ல மான்ய கிருபருமுளார்

7. பீஷ்மர் நம்தலைவர் பீமனவர் தலைவன்
ஏஷ்யம் நீரவீர் எம் குருவே எமக்காக
தாக்ஷண்யத்துடனீரும் தலைவரை காத்திடுவீர்
மாக்ஷிமை நமக்குண்டு மங்கள ஒலிகேண்மின்

## இதுவரை துரியோதனன் வாக்கு
(பின்வரும் 3 பாக்கள் பொதுவாக்கு)

8. சிங்கத்தின் ஒலியே போல் சங்கத்தை பீஷ்மரூத
அங்குள்ளா ரெல்லாரும் அவைதனை முழக்கினர்கள்
எங்குமே இச்சப்தம் எதிரொலிக்கவேதான்
சங்கநாதம் செய்தார் சாக்ஷாத் பகவானும்

9. பாண்டவ சகாயி பாஞ்சஜன்யமூத
காண்டீபனுமங்கு கொண்டதேவதத்தமூத
போண்டர சங்க மதனை பலபீமனூதிடவும்
ஆண்டத்தருமரும் அனந்தவிஜய முழக்கினர்

10. சங்க நாதம் செய்தார்கள் சாம்ப்ராட் பெருகிவர
தங்கள் தங்கள் சங்கம்தனை, தனித்தனி வேந்தரெல்லாம்
எங்கும் எதிரொலித்து எதிரி நெஞ்சஞ்சிடவே
மங்களமதுண்டாக மேகநாதம் செய்தார்கள்

### இதுமுதல் 10 பாக்கள்
### அர்ச்சுனன் சம்சியம் கூறப்படுகிறது.

11. அர்ச்சுனனது சமயம் அழகுநாதனை நோக்கி
திர்தராட்டிர புத்திரர்கள் துர்யோதனுதியர்கள்
கருத்துப்படி நம்மவரும் காத்து இங்கிருக்கின்றோம்
செருக்குள்ள யிவரிடை செலுத்துவீர் தேரென்றான்

12. அரங்கத்தின் மத்தியில் அர்ச்சுனன் தேர்நிற்க
மரங்களின் கிளைபோல, மரபினரைக் கண்டு
கரங்களால் போற்றவல்ல, காரண மானோர்களின்
சிரங்களை துணிப்பனோ சரங்களை விடுத்தென்றான்

13. பெந்துக்களை கொன்று நான் பேரின்பம் பெறுவனோ
பெந்துக்களன்றி நான் போகவாழ்வு வாழ்வனோ
பெந்துக்களுக்காக வன்றோ பேரரசு பெறுவதுவும்
பெந்துக்களே வேண்டின் போர்தனை வேண்டேனென்

14. என்னை கொன்றாலும் ஏனமில்லைகாண்
தன்னையேகொன்று தரணியைவிரும்பிலேன்
மன்னனைகொன்று மாக்ஷிபெறவேண்டிலேன்
பன்னரும் பாபந்தான் பாதகரைகொல்வதுவும்

15. மாதவாமருண்டுமே மார்க்கமது தப்பினேனும்
பாதகரிவர்சாக பலநாசம் செய்திடேன்
ஆததாயியிவர்சாக ஆத்மலாபமடைந்திடேன்
காதர்களேயாயினும் குலநாசம் கொடிதன்றோ

16. குலநாசமதால் நம் குலாசாரம் கெடும்
குலமாசாரம்கெட குலமனாசாரமாகும்
குலமனாசாரமாக குலஸ்திரிகள் கெடுவர்
குலஸ்திரிகள் கெடவே குலமன்யமதாகும்

17. ஆதிகுலப்படியே ஆசாரம் கொளல்வேண்டும்
சாதிசேர்க்கையால் சபிண்டமொழியும் காண்
நாதியற்று நாங்கள் நரகத்தில் படுவோமோ
சாதல் மேலன்றோ சாதியை விடுவதிலும்

18. குலத்தை நசிப்பிவித்து குவலயம் பெருக்கிடுதல்
நலமென்றெண்ணியே நாணின்றி நிற்கிறேன்
பல பாபம் செய்யினும் பாரினில் பழியாரேல்
குலநாசம் செய்வதினும் கொடும்பாபம் வேறுண்டோ

19. ஆயுதமும் நான் வேண்டேன் ஆனந்தமும் கொள்ளேனுன்
ஆயுதமிலாதயெனை அற்பமாய் மதித்திந்த
ஆயுதம் தரித்துள ஆததாயிகொன்றிடினும்
சாயுஜ்யம் வந்திடுமே ஜன்மமும் தீர்ந்திடுமே

20. இவ்வித முறைத்துமே இளகியமனதோடு
எவ்விதம் மீள்வேனுன் இரணகளம் விட்டென்று
அவ்வழியும் காணமல் ஆயுதமதை யெரிந்து
சவ்வியசாசி யமர்ந்தான் சாரதியுளதேரில்

இவ்விதம் உரைக்கும் அர்ச்சுனன் வாக்கு தர்ம விரோதமென யாரும் சொல்லமாட்டார்கள். தன் பெந்துக்களை கொல்வது என்பது மகத்தான பாபச் செய்கைதான். மேலுமிங்கு ராஜ்யம் வேண்டாமென்று வைத்துவிட்டால் பந்து ஜனங்களோடு அநேகரை கொல்லாமல் கார்க்கலாம். அர்ச்சுனன் சொல்வதுபோல் (12-வது பாவின்படி) மரங்களின் கிளைபோல, மரபினர்களைக் கண்டு கரங்களால் போற்றவல்ல காரணமானோர்களை சிரங்களை துணிப்பனோ, சரங்களை விடுத்தென்றான். தன் பாட்டனரான பீஷ்மரையும், தன் ஆசார்யன் துரோணரையும் எதிர்பக்கல் நிற்கக்கண்ட அர்ச்சுனன், சொல்லும் நியாயத்தை யாரும் தவறு என்று சொல்லமுடியாது. ஆனல் இந்த இடத்தில் நியாயத்தில் நியாயமும், தர்மத்தில் தர்மமும் உபதேசிக்கப்படவே, தர்மத்தையே செய்துகொண்டிருப்பதாக சொல்லும் அர்ச்சுனனுக்கு மேலான தர்மம் உபதேசிக்கப்படுகிறது. தர்ம மார்க்கம் தெரியாத ஒருவனுக்கு தர்மோபதேசம் செய்வது எளிது. ஆனலிங்கு தர்மமே தன் கடமையெனக் கொண்ட பார்த்தனுக்கு அவன் செய்ய நினைப்பது தர்மமாயினும் இதினினும் மேலானதென ஓர் தர்மம் உபதேசிக்க சாக்ஷாத் பகவானே பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறார். இரண்டாவது அத்தியாயத்தில் அவர் சொல்வதை கேட்போம்.

1-வது அத்தியாயம் முற்றிற்று.



# இரண்டாவது அத்தியாயம்.

---

1. துக்கத்தால் சோர்ந்தானை சோகத்தையுடையானை
பக்கத்திலமர்ந்துள்ள பரமாத்மா பார்க்கலுற்று
அக்ஞானமது கொண்டாயே அபகீர்த்தியடையாயோ
இக்காலிலிக்குழப்பம் ஏனென்று இயம்புவாரே

2. பயத்தை கொள்ளாதே பழியுண்டாகிவாய் நீ
ஐயத்தை கொளயிங்கு சேர்ந்த மனகுழப்பம்விடு
நயமுண்டர்ச்சுனனே நியாயத்தையுணர்வாயே
அயராமல் ஆண்மையுடன் அதைரியத்தைவிடுவாய் நீ

## அர்ச்சுனன் வாக்கு

3. புஷ்பத்தால் பூஜித்து பக்தி செய்வதல்லால்
பீஷ்மர் துரோணருடன் போர் செய்யதகுமோ நான்
மாக்ஷிமிகு ஆசார்யனை மாளச்செய்வதிலும்
பிச்சை யெடுத்துண்பதில் பேருண்டு புண்ணியனே

4. பொருளாசை கொண்டுள பேராசிரியன் தனக்கு
பொருள் கொடுத்திங்கு பேரின்பம் பெறுவதல்லால்
அருள்கெட அவர்மடிய அஸ்திரமது தொடுப்பேனோ
பெரும்போகம் பெறுவதுவும், பேருலகம் போற்றுமோ தான்

5. எங்கள் குல எந்தலே இங்கிரு கக்ஷிகளில்
எங்கள் கக்ஷி ஜயித்தாலும் இன்பமில்லை தானறிவேன்
எங்கள் பெருவாழ்விற்கு எவர்களை கொல்லேமோ
அங்கவர்கள் கூறுவளார் அறியாமை நீக்கிநிவீர்

6. மாணைக்க வென்றென்னை மாளிப்பிர் மதுசூதனா
அணுக பிறந்தோர்கள் அறியாமை நீங்கிடவே
காணுத பாக்கியமதை கருத்தினில் படநீரும்
தோணத் தர்மமதை தொகுத்துரை செய்வீரே

## கிருஷ்ணன் வாக்கு

7. கிருஷ்ணமூர்த்தியிங்கு கிருபையுடனியம்புகிறர்
அருச்சுன கேட்டாய் நீ அவிவேகம் கொண்டாயே
பெரும்புத்தி யுள்ளோர்கள் பிறப்பிறப்பு மதிப்பரோ
செருவிற்கு வந்தெடுத்து தாக்ஷிண்யம் கொள்வரோ

8. எப்பவும் நானுண்டு எப்பவும் நீயுண்டு
எப்பவுமெதிர் நிற்கும் இவ்வரசர்களுமுண்டு
இப்பவசாகரத்தில்நாம் இடர் பட்டுள்ளோமே
தப்பவழி யொன்றுண்டு தாக்ஷிண்யமுள்ளோனே

9. ஆத்மா நசிப்பதில்லை ஆனந்தமுடைத்தது
காத்த வாலிபம் கௌமாரம் கிழமடையாதோ
மாத்து சரீரமும் மரணத்தின் தோன்றுவோ
ஆத்தும ஞானியிதில் அதிமோகம் கொள்வதில்லை

10. சிரிய வேற்றுமையை சிதோஷ்ணத்தில் காண்
பேரிய சுகதுக்கம் பெரியானை யணுகாது
காரியமகாரியமறிவர் கஷ்ட சுகம் ஒன்றேயென்பார்
பாரினில் காணுபவ எல்லாம் பகர் கனவெனகொள்வாய்

11. இகத்தில் காண்பனவெல்லாம் இருப்பனவேயன்றோ
அகத்திலிருப்பதுவும் அறியாமையன்றோ
அகத்திலறியாமையை அறவே நீக்கிடில் நீ
ஜகத்திருப்பை நீ செம்மையிலறிவாயே

12. இல்லாமை தனக்கு இருப்பிடமேயில்லை
அல்லில்லாமைக்கு அல்லாமையில்லை
எல்லாவற்றிலும் இயங்கியுள்ளதை நீ
அல்லாமல் செய்ய அருகனுவாயோ

13. நித்தியனுத்மா நீ கொல்லல்முடியாது
சத்தியமிதென்று சான்றோர் சாற்றுகின்றர்
முத்தியடையும் வரை முடிவென்பதேயில்லை
யுத்தத்திற் கெழுவாயே, யுதிஷ்டிர சோதரனே

14. இறந்தனவெல்லாம் இழந்தனவாகா
பிறந்தனவெல்லாம் பேதிப்பனவாகா
பிறப்புமிறப்பும் பேருடை மாற்றே
இறப்பை எள்ளுவர் இழியவராவர்

15. பிறப்பையுடை யானுத்மாவென்றும் பிறப்பையடையானுத்மா [வென்றும்]
இறப்பையடையானுத்மாவென்றும் எண்ணங்கொள்ளாய் [ஏழைநெஞ்சே]
பிறப் பிறப்பற்றவனுத்மாவென்று பேணிச்சொல்வார் [பேருரையாளர்]
குறைதலற்றவனுத்மாவென்றே கூறக்காணகேட்டிலேயோ நீ

16. நாசமற்றவன் நாதஸ்வரூபன்
பாசமற்றவன் பாபமற்றவன்
ஏசலற்றவன் என்றறிபவன்
நாசமுற்செய்கை நாடுவாருளரோ

17. கந்தலே கழித்து நீ கதருடைதறிப்பதே போல்
தொந்தமுள் ஜீவன் தேகத்தை விடுதலாகும்
பந்தமது உண்டாகி பாண்டத்தை விட்டாலும்
அந்தமுள் சரீரத்தில் அமைவானக்கணமே

18. ஆயுதம் கொல்வதில்லை ஆணவம் வெல்வதில்லை
தேயுவும் எறிப்பதில்லை தேடியும் காண்பதில்லை
வாயுவும் வெருட்டியேதான் வரள செய்வதில்லை
பாயுந்தண்ணீரால் பரிந்திவன் நனைவதில்லை

19. வெட்டுவேன் என்றுரையின் வெட்டுதல் முடியாது
கட்டுவேன் என்றறையின் கட்டுதல் முடியாது
எட்டுவனே நினைவிற்கு எட்டவும் மாட்டானுவன்
சட்டென பார்ப்பதற்கு சதுர்யுகம் போதாது

20. மண்ணிற் பிறந்தாரெல்லாம் மறணமுறுவதியல்
விண்ணிற் மறைந்தவரும் விரைவில் பிறவி கொள்வர்
எண்ணியிதையறிந்தார் ஏழமையுருவரோதான்
கண்ணில் கண்டயிந்த காரியம் செய்வாயே

21. மாயையே தேகங் கண்டாய் மித்தியில் வாழ்தல் கண்டாய்
மாயையிலயிக்குமிந்த மரணத்தை வெறுக்கற்ப்பாலோ
தாயை பிரிந்த பின்னும் தரணியில் வாழ்வதில்லையோ
காயை விரும்பி நீயும் கனிதனை துறக்கற்பாலோ

22. ஆச்சிரியமென்பானொருவன் அதிசயமென்பானொருவன்
ஆச்சரியம் கண்டேனென்பான் அதிசயம் கண்டேனென்பான்
மாச்சிரியத் தோடிவர்கள் மருளப்பார்ப்பாராகில்
நீச்சிவர்களுரை நிலையாதப்பமேதான்

23. தேகமது நசித்தாலும் தேகி நசிப்பதில்லை
ஏகனுயிருந்தேயவன் எங்கும் தோன்றுகின்றான்
பாகனுயிருந்தாலும் பகுத்துரை பகருகின்றேன்
தாகம் தீர்ப்பதற்கு தண்ணீரே வேண்டுமென்றே

24. க்ஷத்திரியனின் தர்மம் யுத்தம் செய்தலேயாம்
அத்தர்மமிப்பொழுது அணுகியிருக்ககாண்
எத்தர்மம் பேசுதற்கு எளிதேயாகுமய்யே
இத்தர்மம் உன் தர்மம் இசைந்திருக்க இகழ்வாயோ

25. இசைந்த தர்மமதை இக்கணமே கொள்வாய் நீ
அசைந்தலைந்திங்கு ஆணவமிழக்காதே
திசையெங்கும் தேடினுமே சம்பவமிதுண்டாமோ
வசைமொழிக்காளாகி வான்வாயிலிழக்காதே

26. உன்னியோஜியாமல் உயுத்தத்தை விட்டிடில் நீ
உன்னதென்றதர்மம் ஒழியுமக்கணமே
பின்னின்றெல்லோரும் புகழ்தனை பிறித்திடுவர்
தன்னிகழ்ச்சியுடன் நீ தரணியில் வாழ்வாயோ

27. தன்னையடைந்தாரிடம், தற்புகழ்ச்சி செய்தோர்கள்
பின்னையடைந்தாயென்று பேசிமகிழ்ந்திடுவர்
என்ன கீர்த்தி எய்தினன் ஏழ்மை விஜயனென்பர்
மன்னர்க்கிதை பார்க்க மரணமே மேலென்பர்

28. சத்துரு வாயாலே சதிவார்த்தை கேட்டிடினும்
அத்திரு வாயிலவன் ஆவிபோவதே மேல்
இத்திருச் செருவில் நீ இஜ்ஜீவனையிழந்தாலும்
உத்தமருலகில் நீ அவினாசியாவாயே

29. ஜயமதையடைந்திடிலோ ஜகத்தினையாண்டிடுவாய்
ஜய அபஜயங்களை சமமாக கொள்வாய் நீ
துயர சுகங்களை சமமாக கொண்டு நீயும்
அபராமலிக்கணமே அமர்செய்ய எழுவாயே

30. அர்ஜுனா உந்தனக்கு ஆத்மதத்துவம் சொன்னேன்
கர்மபந்தமின்னதென காலத்திலறியவேண்டும்
கர்மபந்த மொழிந்திடவே காலமது காட்டும்
தர்மத்தை கேட்பின் நீ செய்யோகமறிதல் நன்று

இதுவரை ஆத்ம லக்ஷணமும் சரீரம் பிறவி மரணம் இவைகளையறிந்து மனிதன் நடந்து கொள்ளவேண்டிய கடமை சொல்லப்பட்டது. 8 முதல் 19 வரை ஆத்மஸ்வரூபமும் 20, 21, 22, 23, பிறப்பிறப்பு பற்றியும் 24 முதல் 29 வரை நேர்ந்திருக்கும் தர்மத்தையனுஷ்டிக்கவும் கூறப்படுகிறது. 31 முதல் 38 வரை 8 பாக்கள் நிஷ்காமிய கரும விசேஷம் கூறப்படுகிறது. கீதாதத்துவத்தின் முக்கியமான பாக்கள் கூர்ந்துபடிக்கவும்.

31. பலத்தை விரும்பாமல் பார்தனில் செய்காரியம்
ஜலத்துளியினும் சிறியதேயானாலும்
நிலத்தில் பெரிதாக நியதியோர் கூறிடுவர்
பலத்தில் பெரிதாகி பவபந்தமறுத்திடுமே

32. கருமபேத முறைப்பர் கடையது காணுதார்
கரும காரியமதால் சொர்க்கமே கிட்டுமென்பர்
கரும் பலனில் சொர்க்கம் சாற்றப் பெரிதாமோ
பெரும் ஜன்மங்களால் பேரானந்தமுண்டாமோ

33. சத்வாதி முக்குணங்கள் சத்வேதம் சொல்லுமய்யா
நித்ய நிலையடைவதற்கு நிர் ஆசை முக்கியமாகும்
சத்வ நிலையடைவதற்கு தள்ளுயோக க்ஷேமம்
இத்துயரின்பம் தள்ளி இக்கணமே அமர்புரிவாய்

34. கூப ஜலத்தில் குளித்தல் குடித்தல் போலவேதான்
பாபமதை தீர்க்கும் பகர்வேதோக்த கர்மம்
பூபநதி ஜலத்தாலே பூவுலகம் செழித்தல் போல்
பாபந்தீர் சஜாஷ்டியும், தந்திடும் அகாமியகருமம்

35. கருமத்திலாசை கொள்ளு கருத்தில் பலன்தள்ளு
கரும பலத்யாகமே கருதும் குணமுடைத்து
கர்த்தா நானென்றறி கருமம் செய்வாய் நீ
கருமம் செய்வதையே கடனெனக் கொள்வாயே

36. பலயிச்சையில்லா கர்மமதால் பாபபுண்யம் நசிக்கக்காண்
தலத்திலிது நசிக்குமேல் தவயோகம் கூடுங்காண்
நலத்தில் செய்யோகமதே ஞானத்தையளிக்கு மென்று
குலத்தில் பெரியாய் நீ குணமுடன் கொள்வாயே

37. ஞானயோகமதை, நியதில் பெற்றார்கள்
தான தவம் வேண்டி தனித்திருப்பார் காண்
ஆனதவ யோகத்தின் அருள்சுரக்கவே தான்
ஈனயிப்பிறப்பிறப்பு எளிதிலொழியுங்காண்

38. தேகமே ஆத்மாவென்ற சிந்தனை யொழிந்திட்ட
பாகமே வைராக்கியம் பாலிக்கும் தன்மைகாணாய்
ஏகப்பொருளையறியா ஏங்கியுள உன்நெஞ்சம்
மோகப்பொருளைப் பற்றி மோனஞானம் விடுவாயோ

39. கேசவாயியம்பென்று கேட்டிருந்தவர்ச்சுனனும்
பேசத் தொடங்கியே, பேதமை நீங்கிடவே
பாசம்பல நீக்கும் பாரகத்தில் அயர்நீக்கும்
தேசுடை ஞானிதன் சுவரூபமேதென்றான்

## கிருஷ்ணன் வாக்கு

40-முதல் 13-பாக்கள் மனோதத்துவமும், மனதிற்கும் இந்திரியங்களுக்குமுள்ள பந்தமும் கூறப்பட்டு ஆத்மரக்ஷணத்திற்கு மனச்சாந்தி முக்கியமென கூறப்படுகிறது.

40. மனத்தாசை முற்றிலுமகற்றியே மனத்திலாத்ம லயிப்பு
[யுடையாலும்]
மனத்தில் துக்கமய சுகங்களை மதியாத மௌனத்தாலும்
சினத்தை பயத்தை விருப்பை, சிந்தையால் தொடாதாலும்
இனத்தை மோனஞான யோகியெனக் கொள்வாயே

41 ஆமையும் தன்கால்களை அமைத்து அடக்குமாப்போல்
ஊமையாம் உள்ளறிவுள்ள ஊணிந்திரியங்களை
தாமதமின்றியே சல்தியில் உள்ளடக்கி
காமமன்றியிருப்பான் கியானமுடைத்தான் தான்

42 கிரகிக்காயிந்திரியங்கள் கிரமமே தன்னுடைய
புரக்காலடங்கியே புனிதம் பெற்றிருக்கும்
துறக்காதயிச்சையிங்கு துரிதத்திலடங்கியே
பரமாத்ம தெரிசனத்தால் பயனுறும் தன்மை காண்பாய்

43. மோக்ஷத்தையிச்சித்து முயற்சி செய்வானை
தாக்ஷிண்யமன்றியந்த தாபேந்திரியமழித்துவிடும்
சூக்ஷமத்தையறிந்திங்கு சுவரூபமிலா பரந்தனை
மாக்ஷியுடன் மானித்தல் மகிமையுடை ஞானமேயாம்

44. பிரவஸ்துவை சிந்தித்தால் பற்றுதலுண்டாகுங்காண்
நரர் பற்றுதலடைந்திடில் நாடுமாசையதினிலே
பிரகங்காசையதிகரிக்க பாபமாம் கோபமுற்றுண்டாம்
அரங்கெட்ட கோபத்தாலே அறிவின்மையடைதலரிதோ

45. அறிவின்மையடைந்தார்க்கு ஆனநினைவின்மையமையுங் காணாய்
குறித்த நினைவின்மையாலந்த கேடுபுத்தி உதித்தல் காண்பாய்
அறிவுகெட்டு அச்சம் கொண்ட ஆணவ மொழிந்துதானும்
பிறிதொரு உபயோகமிலா புருஷனாய் பவிப்பான் பாரில்

46. விருப்பும் வெறுப்புமுள விடமாந்தரேயானாலும்
இருப்புடையிந்திரியமதால், இன்பமேநுகர்ந்தாலும்
வெறுப்புடை காரியமதை வேறறுத்து மனச்சாந்தி
பொறுப்புடனே பெறுவானேல், பூஜ்யனிப் பூவுலகில்

47. மனச்சாந்தியுள்ளார்க்கு மனோதுக்கம் நீங்கும்
மனத்துக்கம் நீங்கிடில் மனதில் நிலைபுத்தியமையும்
தனதாத்ம சுவரூபமதை தானே காணவேண்டில்
தனதாசையிந்திரியங்கள், சுவாதீனம் கொளல்வேண்டும்

48. இந்திரியங்கள் சுவாதீனமிலாவிடில் அந்த ராத்மஸ்வரூப
[ஞானமில்லை]
இந்திரியங்கள் சுவாதீனமிலாவிடில் ஆத்மத்யான மற்ற
[வனவன்]
சொந்தாத்மத்யான மற்றவனுக்கு சுபரூபமுடைமனது
[தானுண்டோ]
அந்த நிலையற்ற மனமுடையோதான் அற்ப சுகம்பெற
[அறுகமோ தான்]

49. அடங்காதயிந்திரியங்கள் அலைகடல் காற்றேயென
தடங்காமல் கப்பல்தனை தாக்கியே செல்வதுபோல்
மடங்காமல் மனதையது மாறிபிழுக்கும் தன்மைகண்டு
இடங்கொடாமல்விம்மனதை ஏற்றத்தில் வைத்திருப்பாய் நீ

50. இந்திரியங்கள்தனை இயம்பும் விஷயம்விட்டு
தந்திரமாக நீயும் தவிர்த்துமேவிட்டாயானால்
மந்திரமேதும் வேண்டாம் மானில மாந்தர்கட்கு
சுந்திர ஞானமெய்தும் சுவரூப சேவை கிட்டும்

51. இரவில் வாழ்த்திருப்பான் ஞானி இதில் தவறில்லை காண்பாய்
பிர்மம் நிஷ்டனவன் புண்ணிய புருஷனவன்
சிரமமில் மனதுடையோனவன் சிரேஷ்ட என்னுடை
[யோனவன்]
அறமுடன் அகங்காரமற்ற அவைமெயல்லாம் திரிவான்காணே

52. பிர்ம்ம ஞான நிஷ்டைதனை பெருநரை செப்ப கேட்டாய்
சிரமமுடனிதை யறிந்தார் சமுசார மோஹ மறப்பார்
மரண காலத்துமவர் மான்ய நிஷ்டையினால்
பிரமலயமடையப சிறிதும் பின் தங்கார்காண்

பலத்தை விரும்பாமல் பார்தனில் செய்காரியம்
ஜலத்துளியிலும் சிறியதேயானாலும்
நிலத்தில் பெரிதாக நியதியோர் கூறிடுவர்
பலத்தில் பெரிதாகி பவமந்த மறுத்திடுமே

பலத்தை விரும்பாமல், என்றதினால் நற்பலன் தீய பலன் இரண்டையும் குறிக்கின்றது. ஆதலால் பலன் நல்லது அல்லது தீயது ஆனாலும் பலத்தை விரும்பாதே என்கிறார். நற்பலன் கொடுக்குமானால் மனமதினில் நாடுவது இயல். தீய பலனளிக்குமானால் மனம் நாடாது என்று சொல்லலாம். ஆனாலிங்கு அர்ச்சுனன் செய்யவேண்டியது யுத்தம் யுத்தத்தை செய்யும்பொழுது வெற்றி யென்ற நல்ல பலன்தான் வருமென்று சொல்வதிற்கில்லை. தோல்வி என்ற கெட்ட பலனும் ஏற்படலாம். யுத்தத்தை செய்யப்புகுவார்களானால் கஷ்டமே உண்டாகும்.

ஒருவேளை யுத்தத்தில் தோற்றுப் போவோம் என்று அர்ச்சுனன் நினைக்கின்றானோ எனில் அதுவுமில்லை. யுத்த பலனால் எற்படும் சந்தோஷம், அனுபவிக்க வேண்டியவர்களே இங்கு கொல்லப்பட்டால்தான் ஜயமென கொள்ளலாம். ஜயித்த பிறகு தான் உயிருடன் இருக்க விரும்புகின்றானோ எனில் அதுவுமில்லை. (1—அ. 19 பாவில்) ஆயுதம் தரித்துள் ஆததாயி கொன்றிடினும், சாயுஜ்பம் தந்திடுமே ஜன்மமும் தீர்ந்திடுமே என்பதிலிருந்து தான் உயிருடனிருக்கப் பிரியப்படவில்லை யென்றும் தெரிகின்றது. ஆதலால் அர்ஜுனன் தனக்கு ஓர்வித பலனையும் கொடுக்காத இந்த யுத்தத்தில் கலந்துகொள்ள விரும்பவில்லை. மேலும் கிருஷ்ணமூர்த்தி பலனை விரும்பாமல் யுத்தம் செய் என்கிறார். நற்பலன் என்பது ஜயத்தின் பிறகு இனத்தாருடன் கூடிவாழ்வதானாலும் அந்த கூடிவாழ்தல் என்ற காரணத்திற்கு, ஆதியான இனத்தார்களையே இங்கு கொன்றுவிடு. நற்பலனை உத்தேசித்து யுத்தம் செய்தலும் தீய பலன் ஏற்படப்போவதை உத்தேசித்து யுத்தத்தை விடுதலும் நன்றன்று என்பதை சொல்லத்தான் பலத்தை விரும்பாமல் பார்தனில் செய்காரியம் என்கிறார். "இப்படி பலத்தை விரும்பால் பார்தனில் செய்காரியம் ஜலத்துளியிலும் சிறியதேயானாலும் நிலத்தில்

பெரிதாக நியதியோர் கூறிடுவர்." பெரிதாக் கூறப்படுகின்றது என்பது மட்டுமல்லாமல் அப்படி செய்யப்படும் காரியமும் "பலத்தில் பெரிதாகி பவபந்த மறுத்திடுமே" என்றதினுல் பவபந்த மறுக்குமோர் மோக்ஷ நிலையை கொடுக்குமென்றும் சொல்லப் படுகிறது.

32, 33, பாக்கள் சொர்க்கம் பெரிதில்லை. மோக்ஷந்தான் பெரிது என்று சொல்லப்படுகிறது. நீ சொல்லும் தற்மகாரியத்தை யனுஷ்டித்தால் சொர்க்கம்தான் கிடைக்கும், ஆனுல் நீர் ஆசையாய் சுகம் துக்கமிரண்டையும் தள்ளி இந்த யுத்தத்தில் ஈடுபடுவாயானுல் மோக்ஷம் கிடைக்குமென்பது கருத்து.

34வது பாவால் வேதோக்தமான கருமம் அதாவது ஹிம்ஸா ஹிம்ஸை முதலான கர்மங்கள் யனுஷ்டித்தல் கிணற்று ஜலத்தால் ஒருவன் காலந்தள்ளும் சௌக்யத்திற்கும் உபமானம் ஆனுல் இந்த அகாயமிய கருமம் பெரியநதி தீரவாஸம்போல சௌக்யம்தரும். மோக்ஷம் நல்கும் என்று கூறப்படுகிறது.

35, 36, பாக்கள் கர்மத்தை செய் அதாவது உனக்கு (க்ஷத்திரியனுக்கு) ஏற்பட்ட கர்மம் யுத்தம் செய்தல் அதுவும் பலத்யாக தோடு செய்ய வேண்டுமென்றும் அப்படி பலத்யாகதோடு செய்யப் படும் கருமத்தினுல் ஞானம் சித்திக்குமெனக் கூறப்படுகிறது.

37,வது பா. "ஞானயோகத்தை, நியதியில் பெற்றோர்கள் தான தவம்வேண்டார். தனித்திருப்பார் காண்" ஞானம் என்றால் உலக யமைப்பை யறிதல் உலக அமைப்பு என்பது ஜனன மரணங்களின் மூலம் நடைபெறல் உலகமென்பது ஜனன மரணங்கள் மூலந் தான் நடைபெறுகின்றதென்ற ஞானத்தைபடைந்த யொருவன் க்ஷத்திரியனுயிருப்பானுகில் அவன் தான் உலகப் பொருப்பை எவ் வளவு ஏற்றகொள்ள முடியுமோ அவ்வளவு ஏற்றுகொண்டு தன் தர்மமாகிற யுத்தத்தைச் செயல்வேண்டும். தானம் தவமென்பது க்ஷத்திரியனைப் பொருத்ததல்ல வென்றும், தனித்திருப்பார் காண். என்று சொல்வதிலிருந்து ஞானமுடையார் செய்கை உலக நடை யிலிருந்து தனியாகயிருக்குமென கொள்ளவேண்டும்.

ஆனந்தவ யோகத்தின் அருள்சுரக்கவே தான்
ஈனயிப்பிறப்பு எளிதிலொழியுங் காண்

என்றதினுல் ஆனதவ யோகமென்பதற்கு க்ஷத்திரியன் உன்ஞலாகும் தவம் யுத்தம் செய்தல். அந்த யுத்தம் செய்தல் என்ற தர்மதை யனுஷ்டித்தால், அதுவே நீ செய்யத் தகுந்த யோகமாகும். அந்த யோகத்தை செய்து முடித்தால் அருள் சுரந்து, இப்பிறப்பு யொழிய, வழி கிடைக்கும், என்பது பகவான் வாக்கு.

33, தேகமே ஆத்மா என்ற சிந்தனை ஒழிந்திட்ட பாகமே வைராக்கியம், பாலிக்கும் தன்மை காண். என்பதை கெவனிக்க மிடத்து அர்ச்சுனன், பீஷ்மர், துரோணர் முதலிய தன் சகல பெந்துக்களை கொல்வதை பற்றியுள்ள மனவருத்தம் தீர தேகம் ஆத்மா வல்ல அவர்கள் ஆத்மாவுக்கு நீ செய்யும் கைங்கிரியம் அவர்கள் தேகத்தை நாசம் செய்வதே ஏனெனில் பீஷ்மர், துரோணர் இவர்கள் துரியோதனன் பக்கம் சேர்ந்து கொண்டிருப்பது தன் ஆத்மா ரக்ஷணக்கே. சக்கரவர்த்தியின் பிரஜையென எவ்வளவோ தர்மங்களை எடுத்து சொல்லியும் கேட்காத துரியோதனனை கைவிட்டால் துரியோதனன் இலக்ஷ்யத்துக்குழைத்தது ஆகாது துரியோதனன் இலக்ஷியம் கைகூடுமோ கூடாதோ என்று பார்க்கவேண்டிய கடமையில்லாத பீஷ்மர் துரோணுதிகள் தன் கடமை, துரியோதனனை சார்ந்து யுத்தம் செய்துவிட்டால் தனக்கு மோக்ஷம் நல்குமென்று அறிந்தே துரியோதனன் பக்கம் நிற்கிறுர்கள். ஆதலால் அவர்கள் விரும்புவது மோக்ஷம் அம்மோக்ஷம் அவர்கள் கொல்லப்படுவதிலிருந்து ஏற்படப்போகின்றது. ஆதலாலவர்கள் ஆத்மாவை சரீரமென்ற கட்டிலிருந்து நிவிர்த்தி செய் என்று சொல்வதற்கு சூசனையாக தேகமே ஆத்மாவென்றே சிந்தனை ஒழிந்திட்டபாகமே வைராக்கியம்மென்கிறுர். மேலும் அர்ஜுனு இவர்கள் கொல்லப்படவேண்டியிருக்கின்றதே என்று வருத்தமடையாதே அவர்கள் வேண்டுவதுயறிந்து அதை அவர்களுக்கு கொடு. உன் ஆசார்யன் வேண்டுவது பொருளல்ல, ராஜ்யமல்ல. பீஷ்மர் வேண்டுவதும் பொருளல்ல, ராஜ்யமல்ல. நின் பூசனையுமல்ல. பீஷ்மர் இராஜ்யம் விரும்பியிருந்தால் முன்னமேயே இராஜ்யம் வேண்டாமென்று சொல்லியிருக்க வேண்டாம். இவர்கள் தனித்தனியே இராஜ்யம் வேண்டுமென்று அபேக்ஷித்திருந்தால் அவர்கள் இராஜ்ய

மடைய சக்தியுடையோர்கள்தான் ஆதலால் இவர்கள் தேவை யறிந்து கொடுத்தால் தான், நீ கொடுத்ததாகஏற்படும். ஏகப் பொருளை பார்க்காமல் உன் நெஞ்சம் மோகப்பொருளை யடைவதா மோ மோன ஞானம் விடுவாயோ, என்றதினுல் ஏகமான வஸ்து விடம் போய்ச்சேரல் என்பதுதான் ஜீவனேக்கம்.

39, இவைகளை கேட்டறிந்த அர்ஜுனன் ஞானவிசாரம் வேண்டி ஞானிதன் இலக்ஷன மென்ன வென கேட்கிருன்.

40, முதல் 52 வரை பாக்கள் ஞானிதன் இலக்ஷணமும் ஞான மார்க்கமும் ஆத்ம விமர்சனமும் கூறப்படுகிறது. கூர்ந்து பாக்களை வாசிக்க கேட்டுகொள்ளப்படுகிறது. 40க்குமேல் உள்ள 13 பாக் கள் மனேதத்துவ நிலையைப்பற்றி கூறுகிறது. முக்கியமான பாக் கள் இரண்டு மூன்று தடவை ஊன்றிப் படிக்கப்படவேண்டும். அப்படி படிப்போர்களுக்கு கீழ்கண்ட குறிப்புகளும் ஒருவாறு உதவி செய்யும்.

ஞானியின் லெக்ஷணம் கூறுமிடத்து முதல் பா. (40)

மனத்தாசை முற்றிலுமகற்றியே என்று ஆரம்பிக்கப்படு கிறது. மனமானது பிரவஸ்துக்களையோ அல்லது பிற உணர்ச்சி களையோ அடைவதற்கு பஞ்சேந்திரியத்தை உபயோகப்படுத்தி கொள்ளும் அப்படி இந்திரியவசப்பட்டமனது, கொள்ளும் ஆசை யை முற்றிலும் விலக்கவேண்டும். அப்படி ஆசையை நீக்கு வோன்தான் ஞானி என்று சொல்லப்படுவான். மேலும் ஆசையை வெளியில் காணும் பிறவஸ்துவிடத்து செலுத்தாது உள்ளடங்கி யுள்ள ஆத்மாவிடத்து லயிக்கசெய்தால் ஆசைக்கு ஓர் போக்கு ஏற் படுகின்றது. அதோடு ஆத்ம சந்துஷ்டியும் கிடைக்கின்றது. மேற் சொன்னயிரண்டும் எளிதில் சொல்லிவிடலாம் எழுதிவிடலாம் அநு ஷ்டிப்பதெங்ஙனம் என்ற வினு வரவே அதற்கு பதிலாகத்தான்.

மனத்தில் துக்கமய சுகங்களை மதியாத மௌனத்தாலும்
சினத்தை பயத்தை விருப்பை சிந்தையால் தொடாதாலும்
என்று கூறுகின்ருர்.

துக்கமடைந்தாலும், சுகமடைந்தாலும் மதியாமல் மௌன த்தைக்கொள், துக்கமும், சுகமும் சரீரமடையும் உணர்ச்சி, இந்த உணர்ச்சியை அனுபவிப்பது மனதின்செய்கை. மனமானது தன்னுடைய வேலையினால் துக்கத்தையும் சுகமாக்கும், சுகத்தையும் துக்கமாக்கும். இவ்விரண்டையும் மதியாமல் மௌனத்தால் அனு பவிக்கவேண்டும். மௌனம் என்றால் மனம் ஒடுங்குதல் என்று ஏற்படும். மனமானது தன்னை ஒருவாறு கட்டுப்படுத்திகொண்டால் அடுத்தநிமிடம் மௌனந்தான். இந்த மௌனத்தை கைகொள்வார் கள் பலர். அதில் இன்று பிரத்யக்ஷத்தில் மஹாத்மா காந்தியவர்களை பார்க்கின்றோம். மனதைநடக்கு வோர்களுக்கு துக்கமும், சுகமும் ஒன்றாகவே அனுபவிக்கமுடியும். இந்த 40, 41-வது பாக்களில் ஞானியின் மனமமையவேண்டியவிதம் கூறப்பட்டது. 44, 45-வது பாக்கள் 46, 47-வது பாக்கள் 48, 49-வது பாக்கள் இதே பொருளைகொண்டு மறு வாக்கியங்களாலமைக்கப் பட்டிருக்கிறது. எதற்காக திருப்பிதிருப்பி சொல்லப்படுகிறது என்று சிலர் கேட் கலாம், பல மாறுப்பட்ட மனமுடையோர்கள் திருப்திபாகும் வண் ணம் வாக்கிய மாறுபாட்டால் பாக்கள் அமைக்கப்பட்டிருக்கிறது. சிலவாக்கிய சேர்க்கை மற்றோர் சிலருக்கும் ருஜிடன்படும் ஆகவே பொதுவாக கூறமிடத்து ஞானயோகத்திற்கு முக்கிய மான ஸாதனம் மனம் இந்திரியம் முதலிய அடங்குதலென ஏற் படுகின்றது. கடைசியாக அர்ச்சுனனுக்கு அவனுக்கு ஏற்பட்ட சந்தேகம் தீர.

50-வது பாவில்

இந்திரியங்கள்தனை, இயம்பும் விஷயம்விட்டு
தந்திரமாக நீயும் தவிர்த்துமேவிட்டாயானால்
மந்திரமேதும் வேண்டாம் மானிலமாந்தர்கட்கு
சுந்திரஞானமெய்தும் சுவரூப சேவைகிட்டும் என்றபடி

ஞானத்தையடைந்து பரப் பிர்ம்ம சுவரூபத்தையடைவதற்கு இந்திரிய நிக்ரஹம் முக்கியமென கூறுகிறார்.

இன்னும் பகவான் கூறுவதை 3-வது அத்தியாயத்தில் படிப்போமாக.

2-வது அத்தியாயம் முற்றிற்று.

---

# பகவத் கீதை.

3, 4 அத்தியாயங்கள்.

## தமிழ் பாக்கள்.



ஆக்கியோன்,

மஹரெஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved.) 1940. (விலை அணா. 4

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந் தோறும் வெளிவரும். முன்பணம் ரூ. 2-8-0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## 3-வது அத்தியாயம்.



இந்த அத்தியாயத்தில் "பகவான்" எல்லோரும் கர்மத்தை செய்து தீரவேண்டுமென்றும் கருமம் செய்தால்தான் ஞானம் சித்திக்குமென்றும் சொல்லுகின்றார். மேலும் ஞானத்திற்கு அடிப்படை கர்மம்தான் என்று உறுதிப்படுவதற்கு தானே கருமம் செய்யும் நோக்கத்தோடு உலகத்தில் தோன்றியிருப்பதை எடுத்து காட்டுகிறார். உணவு முதலிய வஸ்துக்களைப் பெற்று இச்சரீரத்தை வளர்த்துவதற்கும் கர்மம் வேண்டுமென்றும் இச்சரீரத்தின் சுகயிருப்புத்தான் ஞானத்திற்கு மூல காரணமென்றும் சரீரம் சுகயிருப்பில் இருக்க வேண்டுமென்றால் கர்மம் செய்ய வேண்டுமென்றும் அப்படி செய்யப்படும் கர்மம் பலத்யாகத்தோடுயிருக்கவேண்டுமென்றும் குறிப்பிடுகின்றார். "ஏன் பலத்யாகத்தோடு இருக்கவேண்டும் பலத்தை விரும்பித்தான் கருமம் செய்யமுடியும்" என்றால் ஓர் காரியத்தை செய்ய முற்படுபவன் தான் செய்யும் காரியத்தினால் ஏற்படும் பலாபலன்களை யோஜியாமல் செய்யமுடியுமா, அப்படி செய்யும்போது தனக்கு நன்மைதான் கிடைக்கவேண்டுமென நினைக்கமாட்டானா இதிலென்ன தவறு இருக்கின்றது என்று கேள்வி உண்டாகுமிடத்து ஓர் காரியத்தை செய்ய முற்படுபவன் அதை தன் கடமையென செய்யத்துடங்குவானானால் அதில் உண்டாவது நன்மையாக முடியும் அதை விட்டுவிட்டு அபலன்தான் கிடைக்குமென யோஜனையின்பேரில் முடிவுக்குவரின் காரியத்தைச் செய்யும் கர்மத்தையும் நிறுத்திவிடுவான். அதினால் ஒருவேளை பலன் கிடைப்பதுவும் நின்றுவிடும். தன் கருமத்தினால் பலன் கிடைத்தே தீருமென்ற நம்பிக்கையின்பேரில் 'செய்' என்பதற்குப் பதிலாகத் தான் பலன் கிடைப்பினும் கிடையாவிடினும் கருமத்தைச் செய் என்கிறார். இங்கு அர்ஜுனன் செய்யவேண்டுவது யுத்தம்; அது தான் க்ஷத்திரியனுக்கேற்பட்ட சுதர்மம்; அதே சுதர்மத்தை பனுஷ்டித்து அதில் பலன் கிடையாமல் போனாலும் கர்மம் செய்வதாலாகிய பலன் இல்லாமற் போகாதென குறிப்பிடுகின்றார். என்ன

பலன் கிடைக்கும் யுத்தத்தை செய்தால் ராஜ்யம் கிடைப்பது என்பது நற்பலன். அது இகத்தில் நன்று. ஒருவேளை தோற்றாலும், சுதர்மத்தை யனுஷ்டித்ததால் மோக்ஷம் நல்குமென குறிப்பிடுதல் தான் இவ்விடத்தில் முக்கியம்.

உதாரணமாக பயிர்த்தொழிலை எடுத்து கொள்வோம். பயிர் தொழிலென்பது முக்கியமாக சரீர சம்ரக்ஷணைக்காக வேண்டி உற்பத்தி செய்யப்படும் வஸ்துக்களே அதன் பலன். பயிர்தொழில் என்ற கர்மத்தை செய்ய வேண்டுமானால் அதினால் கிடைக்ககூடிய பலன் கிடைக்குமா கிடைக்காதா என்று யோஜிக்குமிடத்து மனித பிரயத்னமட்டிலும் போதாது பயிர்விளைவதற்கு மழை, தண்ணீர், சூரியவெப்பம் இவைகளெல்லாம் மனிதப் பிரயத்னத்தால் உண்டாவது அல்ல. எல்லா வருங்கால நிகழ்ச்சிகளையும் மனிதன் முடிவு செய்வதென்பது அசாத்தியம். ஆதலால் நாம் நம் உயிர்வாழ்விற்காக சில கர்மங்களை செய்தேயாக வேண்டும் அப்படி செய்யப்படும் கருமம் நம் பெரியோர்கள் செய்த கருமத்தை ஒத்ததாயிருந்தால் அனேகமாக நன்றாகவே முடியும் என்ற எண்ணத்தை கொண்டு தான் பயிர்தொழில் செய்யும் கருமத்தை செய்யவேண்டும். பயிர் பிழைப்பினும் பிழையாவிடினும் பயிர்த்தொழிலை செய்து கொண்டு போவதை பலத்யாக புத்தியென கொளல்வேண்டும். ஓர் வியாபாரியை எடுத்துகொள்ளுவோம் சாமான் கொள்முதலில் லாபசேதங்கள் ஏற்படுவது சகஜம். ஆனால் வருங்கால நிகழ்ச்சிகளை யோஜனைக்கு எடுத்துக்கொண்டு நஷ்டம்தான் உண்டாகுமென்றோ அல்லது லாபந்தான் உண்டாகுமென்றோ முடிவு கட்டி கொண்டால் வியாபாரம் செய்யமுடியாமலே போய்விடும். நஷ்டமோ லாபமோ எதுவரினும் நாம் செய்து கொண்டுபோவோம் என்பதிலும் பலத்யாகமுண்டு. அதே போல் ஓர் க்ஷத்திரியனும் யுத்தத்தில் ஏற்படும் பலாபலன்களை விசாரணை செய்ய துடங்கிவிட்டால் யுத்தம் செய்யாமலேதான் விட்டு விடவேண்டிவரும். இதே போல்த்தான் பிராமண கருமமும் பலத்யாகத்தோடுதான் செய்யவேண்டும். இவ்விடத்தில் பிராமண கர்மம் என்பது யாது, பிர்ம்ம ஞானத்தை உலகுக்கு சொல்லுபவன் பிராமணன் ஆகவே உலகத்தார்களுக்கு பிர்ம்ம ஞானத்தை எடுத்து சொல்லி உலகத்தையே கர்மம் செய்வதிலிருந்து வேறுபடாமல் காற்று உலக ஜனங்களிடமிருந்து தன் வாழ்விற்

குரிய வஸ்துவை பலத்யாக புத்தியோடு பெறவேண்டும். இவைகளை குறிப்பிடத்தான் நான்காவது அத்தியாயத்தில் பகவான்:—

குணகர்ம பேதங்கண்டு குலம் நான்கை படைத்தேனுன்
குணகர்ம பிரிவுப்படி குலம் நான்கை படைத்தாலும்
குணத்தில் கூடாநானும் குறிப்பில் பற்றற்றேனென
க்ஷணத்தில் யறிவாயிங்கு செய கர்த்தா நானேயென்று.

கர்மம் செய்வதிலும் குணபேதம் நான்கு என்று குறிப்பிடுவது மட்டுமில்லாமல் அதற்கு தகுந்தபடி குலம் நான்கும் தன் படைப்பு என்கிறார். ஆதலால் கடவுள் சிருஷ்டியிலேயே நான்கு வர்ணம் கூறப்படுகின்றது என்பது சித்தாந்தம். மனிதர்களை சிருஷ்டித்த கடவுள் நான்கு வர்ணங்களை சிருஷ்டித்ததாக சொல்லிக்கொள்வது புத்திக்கு ஒத்ததாகயில்லையென ஓர் சாரார் சந்தேகமெழுப்பலாம். ஊன்றி யோஜிக்குமிடத்து மனித சமூகம் நடந்தேறி முன் செல்லவேண்டுமென்றால் இந்நான்கு சமூகமும் இல்லாமல் முடியாதென சொல்லலாம். இப்படி பயிர்தொழில் செய்யும் மகாஜனங்கள் பயிர்தொழிலை செய்துகொண்டு நாட்டின் செல்வத்தை வளப்பவராக இருக்கவேண்டும்; நாட்டில் உற்பத்திசெய்யப்படும் வஸ்துவெல்லாம் அப்பயிர்தொழில் செய்யும் ஜனங்களுக்குமட்டும்தான் சேருமென்று சொல்லுவோமானால் பயிர்தொழில் ஒன்றினால்மட்டும் மனிதன் தேவை பூர்த்தியாகிவிடுமா? அவனுக்கு அதற்குமேல் எத்தனையோ வஸ்துக்கள் தேவை. அவைகள் உற்பத்தியாகுமிடத்திலிருந்து வியாபாரி கொண்டு சேர்க்கவேண்டும். இவைகள் சரிவர நடப்பதற்கு பாதையிட்டு பாதுகார்க்க க்ஷத்திரியன் வேண்டும். இது போன்ற தர்மங்களை பரப்புவதற்கு பிராமணன் வேண்டும். இந்த நான்கு தர்மத்தையும் செவ்வனே ரக்ஷித்தால்தான் மனித சமூகம் நன்கு நடந்தேறி செல்லும். இந்நான்கு சமூகத்திலும் அவரவர்கள் தொண்டையாற்றுவதில் போட்டியேற்பட்டால் கஷ்டம் விளையும் என்பதை முன்னிட்டு, "குலம் நான்கை படைத்தாலும் குறிப்பில் பற்றற்றேனுன்" என்கிறார். இந்நான்கு குலமும் மனித சமூகம் தேர்ந்தெடுத்தது. எனக்கு பற்று இதில் இல்லை என்கிறார்.

"க்ஷணத்தில் நீ யறிவாய் செய்கர்த்தா நானே யென்று"— என்று குறிப்பிடுவதிலிருந்து எல்லார் மனமும் ஒன்றுபோல் ஒரே

காரியத்தை செய்வதில்லை. வேறு பின்னபட்ட காரியத்தை செய்ய மனம் தூண்டும்போது அதில் புகுந்துகொள்வது மனித யியல்பு ஆதலால் உள்ளிருக்கும் அந்திராத்மா திருப்தியானுசாரம் மனிதன் செய்கையில் இறங்குகின்றான். அவ்வாத்ம சரூபம் நானே யானதினால் நானே செய்கர்த்தா என்கிறார்.

இவைகளை ஊன்றி யோஜிக்குமிடத்து கடவுள் உலக சிருஷ்டியை செய்து உலக தற்மத்தையும் நியமித்துளார். அத்தற்மானுசாரம் மனிதன் ஒழுக கடமைபட்டுளான். அம்மனித சமூகம் கடவுள் ஆக்ஞா தற்மத்திலிருந்து விலகி நடக்குமானால் அதை சீர் திருத்த கடவுளாகிய நானே வருகின்றேன் என்கிறார்.

பார்த்தா நீ யறிவாய் பண்புடனுரைப்பதையும்
பார்தனில் தற்மம் குன்றி பழி யதற்மந்தானும்
மேர்ப்படும் காலத்து மேவரை விட்டிங்கு
ஓர்த்தெடு ரூபத்தோடு உலகினில் தோன்றுவேனான்

ஆகவே உலக தற்மத்தை சீர்திருத்த கடவுளே வருகின்றார் என்றேர்ப்படுகின்றது.

அதுபோல் உலகு போக்கை முன்னமே திர்மானித்துள கடவுளின் விசாரம் சிஷ்டர்கள் பரிபாலிக்கப்பட வேண்டியது துஷ்டர்கள் சம்ஹரிக்கப்படவேண்டியது. தற்மம் ஸ்தாபிக்கப்படவேண்டியது. அதற்மம் ஒழிக்கப்படவேண்டியது. இத்தற்மங்களின் ஸ்தாபனார்த்தம்.

பார்தனில் சிஷ்டர்களை பரிபாலிக்கவேண்டி
சீர்பெறும் தருமத்தை செந்நிலைப்படுத்த நான்
தூர்த்த துஷ்டர்களை தொலைத்திடுவே யிங்கு
பார்க்கும் யுகந்தோறும் பார்தனில் தோன்றுவேன் நான்.

என்று கூறி, தன் அவதாரத்தை சூசிப்பிக்கின்றார் பகவான்.



1. ஞானமே கர்மத்தினும் சிரேஷ்டமென
நியாயமே ஜனர்த்தன தாமுரைத்தல்
ஈன இரக்கமிலா யிப்பிராணி ஹிம்ஸை
இக்ஷணமே இங்கு செய்யும் கருமமதை
ஏனய்யா யேவுகின்றீர்
எக்காரணம் கொண்டீரிதை சொல்லும்
மானம் பெரிதென்றுரைக்கும் மதுசூத
மோக்ஷம் நல்க வகையே தென்றான்

2. நிஷ்காம கருமத்தின் நியதிதனை யியம்புகின்றேன்
நிஷ்டை யிரண்டாலும் நீ முக்தி பெறுவதற்கே
கஷ்டமில்லை யிதில் காண்டீப உந்தனுக்கு
இஷ்டமுடன் கேளென்றான் யசோதை புத்திரனும்

3. ஞானம் சித்தியாக கருமம் செயவேண்டும்
த்யானத்தால் ஞானத்தை தனியில் பெறலருமை
செயா கருமமது சேர்க்காது மோக்ஷமதில்
நியாய மீதென்று நியதியில் கொளல்வேண்டும்

4. கருமத்தை செய்யாமல் காணுலகு தானுண்டோ
கருமத்தை எக்கணமும் கிரமமே செய்வார்க்கு
பெருமாசை த்வேஷமிவை பேருள குணங்களன்றோ
அரும்பிரயாசை கொண்டாலும் அடக்கலறிதே தான்

5. விஷய நினைவுடனே வேண்டும் கருமம் விட்டாலும்
விஷம தன்றறிவாய் விவேகமிலச் செய்கை
விஷய நினைவற்று விசேஷ ஞானத்துடன்
கடனென செய் கருமம் காத்திடும் மோக்ஷமதை

6. நித்தியமாய் செயல் கருமம் நியதியாய் செயல்வேண்டும்
சத்தியமிதை யறிந்தால் சரீர சம்ரக்ஷணைக்கே
பத்தியமாய் சொன்னேனிதை பார்த்தா நீ யறிந்தால்
சித்தமது சுத்தியாகி சீருள ஞானியாவாய்

7. காம்மிய கருமமதை காமிகள் செய்வார்கள்
காம்மியத்தை விரும்பாமல் கருமமதை செயல்வேண்டும்
சோம்பி திரிவோர்கள் த்வேஷிபார் கருமமதை
நாம் செய்யு மெக்ஞமதில் நம்பிக்கை கொளல்வேண்டும்

8. எக்ஞத்தை செய்து நீங்கள் எஜஸ்ஸுடன் வாழுங்கள்
அக்ஞானமதை யகற்றி ஆண்மை யளிக்குமென்று
மெக்ஞான பிர்ம்மாவும் மேன்மையுட னுரைத்தார்
எக்ஞத்தால் எல்லோருக்கும் இஷ்டபோகம் கிட்டுமென்றார்

9. சிரேஸஸை யுண்டாக்கும் சிரத்தையுடனே நீர்
சிரேஷ்ட யெக்ஞமதால் தேவதையை போற்றிடுவீர்
சிரேஷ்ட மெனயிதை யறிந்து தொகுத்திடுவீர் பரஸ்பரத்தில்
நரேந்திரர் நாமென்று நானிலந் தொழுதிடவே

10. அருளுடன் பெற்றந்த அன்னாதி வஸ்துக்களே
பெரும் வயிற்றிற்கே பேணித் தின்பானே
பெருமையுடன் நமக்களித்த பேணும் தேவதை கட்கு
திரும்ப கொடாதவன் திருடனிகருகானே

11. செய் யெக்ஞமதில் சேர்த்த பொருள்களதனை
மெய்த் தேவர்கட்களித்து மீதியைத் தானுண்டால்
செய் பாபம் பலதீர்ந்து தொல்வினை ஒழியுங்காண்
செய்வன எலாமுண்ணில் துயருடைய பாபியாவீர்

12. அன்னத்தின் ரஸத்தாலே ஆனது இவ்வுலகு
உன்னிய மேகந்தான் ஊனுக்கு கந்தந்த
அன்னத்தை யளித்துதவும் அறியாதவ னுமுண்டோ
மன்னு மெக்ஞமதே மழைதனை பொழியுங்காண்

13. செய்கையே எக்ஞமாகும் செய்கையே வேதம் சொல்லும்
செய்கை சொலும் வேதமும் தெரிபிர்மமதேயாம்
மெய்யாம் பிர்மமதுவும் மேதினி யெலாம் வியாபித்தே
மெய்யா மெக்ஞமதை வளை சக்கரத்தாலறிவாயே

இதுவரை கருமமே ஞானத்திற்கு அடிப்படை என்று கூறப்பட்டது மேலும் மனிதகருமமும் தெய்வீக கருமமும் சேர்ந்துதான் உலகம் நடத்தப்படுகின்றதெனவும் ஆதலால் உலகத்தில் ஞானியும் கருமம் செய்ய கடமைபட்டுளான் என்று குறிக்கப்பட்டது. பின் வரும் 14, 15-பாக்கள் ஞானிக்கு கருமம் வேண்டாமென குறித்தாலும் 16, 17, 18-வது பாக்கள் உலக போக்கை குறிப்பிட்டு கருமத்தையே ஞானியும் செய்து கொண்டுபோக வேண்டுமென குறிப்பிடுவதிலிருந்து ஞானமடைந்தவன் கருமம் செய்யினும் கருமம் செய்யாவிடினும் ஒன்றானால் கருமம் செய்துகொண்டு போவதே சிரேஷ்டமென கருத்து.

14. கருமம் செய்ய வேண்டாம் கருத்தினில் பிரீதியோடு
தருமா மாத்மாவிடை திருப்தியுங் கொண்டானேல்
மர்மமில் சந்தோஷம் மதிக்கவே யுண்டாகி
கர்மம் செயா தோஷமது கணத்திலு மனுகாதவனே

15. கணத்திலு மணுகாதவனே கர்மம் செய்காரியம் தானென்
சுதனத்திலவன் மனமும் சூழ்வாத்மா யிடையிருக்க
பணத்தில் தேட்டிலவன் புகு மனமில்லானாய்
குணத்தில் பெரியோனாய் கூடுமிடம் சேர்வானே

16. ஜனகாதி பெரியோர்கள் ஜன்ம ஞானமடைந்தவாறு
மனகாய மடக்கியவர் நிஷ்காம கருமம் செய்தார்கள்
ஜனங்களிடை பிறந்த நீயும் செயல் செயயோக்கியனேயாம்
ஜனப் பிரயோஜன மதையுன்னி ஜயமடைய யுத்தம் செய்வை

17. பெரியான் செய் காரியமதை பேருலகு போற்றுங்காண்
சரியான காரியமென்பர் சாஸ்திரமதுவே என்பர்
தெரியாதோ உந்தனுக்கு தேடு சம்பத்து எனதேயாம்
தெரிந்த என் கருமமிங்கு தெளிவுற செயாதென்னே

18. கர்மம் நான் செய்யாவிடில் கடைப்பிடித்தே யுலகு
கர்மம் செய்யா என்னுடனே கணத்தில் சேர்ந்தப் போதே
தர்மம் ஈதென்றெண்ணி சாதிதனை யழித்திடுவர்
மர்மத்தில் ஜாதியழிவை விரும்பிலாய் நீயுமன்றோ

19. ஞானமிலாதொருவன் நியாயபலம் வேண்டித்தான்
ஆனகரும செய்து ஆனதைப் பெறுவான்காண்
ஞானமுள்ளொருவனோ நினைவில் பலா பேக்ஷையன்றி
மான கருமம்செய்து மானிலத்தில் வாழ்வானே

20. தான்பேணு கருமமதை தரணியோருக் கோதாமல்
என் பேணி செயல்வேண்டும் என்று மேவினவிடில் நீ
சூன் இலா ஞானமதை சுளுவினில் காணுதார்
தான் செயும் கருமமதால் சீர் ஞானம் பெறவேதான்

21. பிரகிருதி குணத்தாலிந்திரியங்களே பேணிச்செய் கரும பாடு
நராகங்கார மதினாலே நான் செய்வதாய் தான் கொள்வர் [களே
சரபுத்தி யில்லாமல் சத்புத்தி யுடையோர்கள்
பிரகிருதி குணத்தாலே பிரவர்த்திக் கிருதென்பர்

22. கர்மத்தை விட்டான் ஞானியென கசடரிடம் கூறிவிட்டால்
கருமத்தை விட்டேயவனும் கசடனுகவே யிருப்பான்
கருமத்தை செய்தேதான் ஞானம் பெற வேண்டுமென
கருமத்யாக ஞானியும் காட்டிடல் வேண்டுமய்யே

23. நானென்றதை யொழித்து நம்பி இக்கணமே நீ
ஏனென்று கேட்காமல் எற்பித்து என்னிடமே
தானென்றெ தொழிய தத்துவத்தை யறிந்தாய்
மானென மருளாமல் மாயையை கடந்திடுவாய்

இந்தப்பாவை ஊன்றி வாசித்து ஒவ்வோர் வாசகர்களும் ஆழ்ந்து அறியவேண்டுவதை உத்தேசித்து கீழ்கண்ட சிற்சில குறிப்புகள் வரைவது இன்றியமையாதது.

நானென்றதை யொழித்து நான் செய்கிறேன் நான் கொல்லு கிறேன் அல்லது கொல்வேன் நான் சக்தன் நான் பாபம் புண்யத் திற்கு உரியவன் என்ற எண்ணங்களினால் தன்னை அடிமைப் படுத்தி கொள்வதை யொழித்து "நம்பி இக்கணமே" நான் இந்த ஜகத்தில் எத்தனையோ ஜீவகோடிகளில் ஒன்றுதான் இத்தனை ஜீவ கோடிகள் நடத்தி செல்வதற்கு ஓர் தர்மம் ஏற்பட்டிருக்கின்றது. அத்தர்மானுசாரம் சென்றால்தான், நானென்றது ஒழியும் என்று

நம்பி இக்கணமே 'ஏனென்று கேளாமல் ஏற்பவித்து என்னிடமே' தான் செய்யும் கரும பலனிலுள்ள பலன் என்ன கெதியடையுமோ என்ற விசார மற்றவனாய் பூர்ண சுப பலன்தான் கிடைக்குமென்ற நம்பிகையுடன் என்னிடம் (கடவுளாகிய என்னிடம்) ஏற்பவி. சமுசி யமுறாதே; திரும்பி பாராதே, சர்ச்சை செய்யாதே.

"தானென்ற தொழிய தத்துவத்தை யறிந்தாணாய்"

இப்படி என்னிடம் ஏற்பவிக்கப்படுவதிலிருந்து தானென்ற அகம் பாவம் ஒழிய தத்துவ தெரிசன மடைந்தவனாய்.

"மானென மருளாமல் மாயையை கடந்திடுவாய்"

மானனது எப்பவும் பயந்த சுபாவத்தோடு மருளமருள பார்த்து திகைப்பதே போல நீயும் திகைப்பை யடையாமல் மாயையை கடந்திடுவாய். உனக்கும் கடவுளுக்கும் மத்தியில் ஏற்பட்டிருக்கும் மாயை என்ற திரையை நீக்கிடுவாய். திரை நீங்கவே ஞானமுண்டா கும். ஞானமுண்டாக மோக்ஷம் சித்திக்கும்.

24. என் வார்த்தை ஈசன் வார்த்தை என்றறிந்தே தான்
என் வார்த்தைப்படி நடப்பான், எப்பாபத்தையும் வென்றிடு [வான்
இன் சொல்பல பேசி இப்படி நடவாதான்
வன் சொல்லுக்குள்ளாவன் வஞ்சனையுடை யுடையோனவன்

25. பூர்வ கர்மமிங்கும் புண்ணிய ஞானியை விடுமோ
எர்க்கு மிந்திரிய நிக்ரஹம் இவன் பால் செய்வதென்னை
பார்க்குமிப் பிறவிதானும் பாபசேஷ பயனன்றோ
யார்க்குமி துண்டென்று யாதவனுரை செய்வானே

26. ஆசை கோபமிரண்டும் அவ்விந்திரிய சேஷ்டையே தான்
பூசை செய்திதினை புனிதம் செய்யவேண்டாம்
ஆசை த்வேஷமிரண்டும் ஆத்ம ஞானிக்காகா
ஓசை யடங்கும்வரை உண்மையில் நிறுவகதலே மேல்

27. அன்னிய தருமமதை அவாக்கொண் டனுஷ்டித்தல்
மன்னு முலகமதில் மாக்ஷிதனை, தந்தானும்
பின்னதினால் நீ பீடையுருவாய் காண்
தன்னதாம் தருமமே, சிரேஷ்டமாம் மரணத்தேயும்

28. விர்ஷணிவம்சம் வந்த விமல சிரேஷ்டவானே
கர்வத்தைத்தான் தொலைத்து, கடுகு பாபமும் செய்யானை
இர்பவத்தில் உத்பவிக்க ஏது சக்தி ஏவுமென
அர்ச்சுனனிவண் கேட்க அமலனும் பதிலுரைவான்

29. காமக்குரோத லோபமதில் காமமே பிரதானமாகும்
காமத்தை காமிக்கும், காமியும் கோபங் கொள்வான்
காம கோபங்களே கோசங்கள் பாபத்திற்கு
காம கோசங்களே கடாக்ஷத்தை தடுக்குங்காண்

30. அழுக்கினல் கண்ணடியும் ஆசையால் ஞானமும்
பழு நெருப்பு புகையாலும் பாழாவதே போல்
முழுவதும் நிரம்பாத முற்றிலும் திருப்திதரா
எழுமாசை தன்னலே இஞ்ஞானமது கெடுமேகாண்

31. இந்திரியங்களில் மனம் புத்தி இரண்டும் காமத்தின் வேர்
சுந்திர மனதையிங்கு, தாழ்புத்தி ஏவுதலால்
சந்தியுள்ள யிந்திரியங்கள் சத்ஞானத்தை மறைக்குமிங்கு
பெந்துவாம் விஜயா நீ பெறுஞானம் விடுகாமம்

32. சிரேஷ்டமே தேகம் தேகத்தி னிந்திரியங்கள்
சிரேஷ்ட யிந்திரியமதில் சிறந்ததாம் மனதும்
சிரேஷ்டமாம் மனதில் சிரேஷ்டமாம் புத்தியும்
சிரேஷ்டத்திலாத்மாவே சிரேஷ்டமாகுங் கண்டாய்

33. சரிநிகர் பெருந்தோளாய், சிஷ்டமாமாத்மாவை
சரியா யறிந்து நீயும் ஜன்மமதை வென்றிடுவாய்
பரிபுத்தியுடை மனதை பாதிக்கா புத்தியினல்
துரிதத்தில் தொலைத்திடுவாய் சத்துருவாம் காமமதை

24-வது பாவில் பகவான் தன்வாக்கை எல்லோரும் நம்பி அதின்படி நடக்க வேண்டுமென்றும் அப்படி நடப்பவர்களுக்கு பாபந்தீர்ந்து மோக்ஷம் கிடைக்குமென்கிறுர்.

25-வது பாவில், "பூர்வ கர்மமிங்கும் புண்ணிய ஞானியை விடுமோ" என்பதிலிருந்து ஞானியும் கருமசேஷ பலனை அனுபவித்து தீரவேண்டும். "ஏற்கு மிந்திரிய நிக்ரஹம் இவன் பால்

செய்வதென்னே" என்பதிலிருந்து இந்த ஜன்மத்தில், இந்திரிய நிக்ரஹம் செய்து ஆசை த்வேஷம் நீக்கி சமத்துவ புத்தியோடு ஞானத்தை யடைந்திடினும் முன் ஜன்மத்தில் தான் செய்துள்ள சேஷ பலனுக்கு தகுந்தபடி எல்லா அனுபவமுமிருக்குமென தாத்பிரியம், 26-வது பாவில் ஆத்ம ஞானியிருக்கவேண்டிய நிலே கூறப்பட்டு 27-வது பாவில் அன்னிய தற்மத்தை யனுஷ்டித்தல் நல்லதன்று என்றும் தன் சுயதர்மம் எப்பவும் சிரேஷ்டத்தையளிக்கு மெனவும் குறிப்பிடுகின்றூர். 27-வது பா.

"அன்னிய தற்மமதை அவாக்கொண்டனுஷ்டித்தல்
மன்னு முலகமதில், மாக்ஷிதனை தந்தாலும்"

தான் செய்யவேண்டிய கருமம், அர்சுனன் முன் நிற்க, அதை விட்டுவிட்டு அன்னிய தற்மமான தொன்றை இங்கு அனுஷ்டிக்க முயலுவதில் ஓர்மாக்ஷி ஏற்பட்டாலும்.

"பின்னதினல் நீ பீடையுருவாய் காண்
தன்னதாம் தருமமே சிரேஷ்டமாம் மரணத்தேயும்"

தான் மரணமடையும் வரை, தன் தருமத்தை அனுசரிப்பவனே மேலோனென உலகில் கருதப்படுவான் என்று கருத்து.

29 முதல் 33 வரை பாக்கள் ஆசைதான் ஞானத்திற்கு விரோதி என்று கூறப்பட்டு இந்திரியங்களினும் சிரேஷ்டமான ஆத்ம தெரிசனத்தை ஞானத்தாலடைய வேண்டுமென கூறப்படுகின்றது.

மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.



# நான்காவது அத்தியாயம்.

## கிருஷ்ணன் வாக்கு.

1. நாசமற்ற நற்பலனை நாடியளிக்குமிப் யோகமதை
தேசுள சூரியனுக்கு, சொன்னேன் முன்னமே நான்
தேசுள சூரியனுமதை சொன்னான் மனு மைந்தனுக்கு
தூசில் மனு மைந்தனும் சொன்னான் இக்ஷுவாக்குக்கு

2. ராஜரிஷிகள் தானறிந்தார் ராஜபாரம்பரியமாய்
ராஜா நின்வரையது வாராத காரணமென்
தேஜஸுள்ளோர்கள், தெரிந்தறிந்த யோகமது
நாசம துற்றதினால் நவில்கின்றே னுந்தனக்கு

3. என் பக்தன் என் தோழன் இரகசியமறியவே நான்
அன்னாளில் நான் பகன்ற அரியதோர் யோகமதை
இன்னாளில் உந்தனக்கு எற்பட்டப்பயந்திர
என்னுயுரை யோகமதின் இன்ப நிலைபுணர்வாயே

## அர்ச்சுனன் வாக்கு.

4. உம்பிறப்பும் எம்பிறப்பும் உடனிருக்க நீரும்
உம்பர்க்கும் முதல்வனாய் உதித்திருக்கும் பவிதனக்கு
இம்மஹா யோகமதை எப்படி யுரைத்திருப்பீர்
எம்முனாரையுமென்றன் எழில் விஜபனிந்த

5. ஜன்மம் பல செல்வதை ஜயவிஜய நீ யறியாய்
ஜன்மம் மற்றவனே யானாலும் செயல் வேண்டுமென்றதினால்
ஜன்மமுற்ற பிராணிகட்கு, செய்திடவே நன்மையதை
அன்ய உதவியின்றி அவதரித்துளேனான்

6. பார்த்தா நீ யறிவாய் பண்புடனுரைப்பதையும்
பார்தனில் தர்மம்குன்றி பழிய தர்மந்தானும்
மேற்படுங் காலத்து மேவரை விட்டிங்கு
ஓர்த்தெடு ரூபத்தோடு, உலகினில் தோன்றுவேன் நான்

7. பார்தனில் சிஷ்டர்களை பரிபாலிக்க வேண்டி
சீர்பெரும் தருமத்தை செந்நிலை படுத்த நான்
தூர்த்த துஷ்டர்களை தொலைத்திடுவே யிங்கு
பார்க்கும் யுகந்தோறும் பார்தனில் தோன்றுவேன் நான்

8. என்னை யிவ்வித மறிவான் இப்பிறப்பிறப்பை யினியடையான்
என்னை யடைவான்வேண்டி எழுமாசை கோபந்தள்ளி
என்னை மனதிலெண்ணி ஞானம்தபசில் சுத்தனுகில்
என்னை யடைதலிங்கு எளிதிலமைபு மன்றோ

9. எவ்விதமென்னை நினைந்தாலும், எற்றபடி யனுக்ரஹிப்பேன்
செவ்விந்திர தேவர்களை செய் கருமபலன் வேண்டி
உவ்வு செய்வார்பார் உலகுள்ள மாந்தரெல்லாம்
கவ்வு கொண்டஉம்பரும் கடிதனில் பலனையிவர்

(செவ்வி = அழகிய; உவ்வு = தவம்; கவ்வு = பெருமை)

10. குணகர்ம பேதங்கண்டு, குலம் நான்கை படைத்தேனுன்
குணகர்ம பிரிவின்படி குலம் நான்கை படைத்தாலும்
குணத்தில் கூடா நானும் குறிப்பில் பற்றற்றுனென
க்ஷணத்திலென்னை யறிவாய் செய்கர்த்தா நானேயென்று

11. கருமங்களை நான் விரும்பவில்லை கருமபலத்தாசையுமில்லை
கருமங்களை விடாத பென்னை கட்டுவது முடியாதுகாண்
பெருமையுடை இத்தத்துவத்தை போற்றி தெளிந்துளாரென்
அருளை யடைந்தாராவர் அர்ச்சுனயிதை யறிவாய்

12. மோக்ஷபிச்சையுள்ள முன்னோர்களேயிந்த
நிஷ்பாம் கருமமதை செயல்புரிந்தே வந்தார்
மீக்ஷி வேண்டிநிற்கும் மெய்வில்லாள நீயும்
ஆக்ஷி பெறவேண்டியிதை ஆச்ரியத்தல் நன்றேநன்று

13. பண்டிதர்களில் பலர் பகர்ந்துரைக்க வல்லார்
அண்டி செய்கரும்ம் அகரும விபாகமதை
ஒண்டி உந்தனுக்கு சொல்லி உன்பாபத்தை தீர்க்க
பண்டு நானுரைத்தவாறு, பார்த்தா கேட்பாயிங்கு

14. கர்ம அகர்ம விகர்ம கெதி மூன்றினையும்
நிர்மல மனதுடையோனும் நிலவுதல் கடினமாகும்
கர்மத்தில் அகருமத்தை கடிதிலறிவான் தான்
கர்மத்தை அகருமத்திலும் காண்பானிலகுவில்யிங்கு

15. யாவனறிகின்றானோ அவன் விவேகமுடையான்
கூவும் மனச்சாந்தியும் கூடியிருக்கக் காணும்
தேவு கருமமெல்லாம் செய்தவனுவானவன்
நாவில் வன்மைபோதா நவில்வேன் இன்னும் கேளாய்

16. ஆசை சங்கல்பமின்றி அருளாக்னியில் சுட்ட
பாசமது வேண்டா பகருடை கருமம்செய்யும்
தேசுடையிவனையன்றோ ஜகத்தினில் மேன்மையாக
நாசமில் ஞானியெனவே நவில்வர் விவேகிகளும்

17. ஒருவரையும் வேண்டிநிற்கான் ஆத்மானந்த முடையான்
கருமத்திலாசை விட்டு கடுகாசையும் பலனிலில்லான்
கருமத்தை செய்வானேனும் கருமத்தை செய்தானுகான்
உருவமுடையிவனும் உண்மையில் ஞானியாவான்

18. மனதிலிந்திரியங்களை மடியாமலடக்கி யோனும்
தனமது சேர்த்தல்தனை தவிர்த்துமே நிற்போனும்
தினசரி வாழ்விற்காக சிறுதனமதை சேர்ப்போனும்
இனத்தில் கர்மம் செய்யினும் இவன் கர்மம் செய்தானுகான்

19. தான்வேண்டா பொருளினாலும் சிதோஷ்ண சுகவெறுப்பி
[னாலும்
ஊன்வேண்டும் உணவுதனை உண்ணினும் உண்ணுவிடினும்
தான் சந்தோஷம்கண்டு தொல்மாச் சிரியமில்லாதானும்
என் கருமம் செய்யவேண்டும் இயக்கினும் பெந்தமில்லை காண்

20. பல் அபிமானமதகற்றி பகருமாசை கோபம் விட்டானும்
சொல் சுபிட்ச ஞானமதினை சுப்பிரமமாயுடையோனும்
நல்மனமுடனே செய்யும் நவில்கின்ற கருமமதினை
சொல்லீசுவரார்ப்பணம் செயின் செயித்திடுவான் கருமபலனை

21. பிர்ம்மமே அவர்னமும் பிர்ம்மமே அன்னமும்
பிர்ம்மமே பிர்ம்மமும் பிர்ம்மமே பிராணனும்
பிர்ம்மமே ஹோமமும் பிர்ம்மமே யாவையும்
பிர்ம்மமே யாவையும் பிர்ம்மமே எல்லாவும்

22. இந்திராதி தேவர்களை எற்றிஸ்துதிப்பதையே
எக்ஞமாகக் கொள்வர் கருமிகளிற் சிலர்
அந்திராத்மாவை பிர்ம்மமத்தியினில்
ஹோமிப்பர் பிர்ம்மார்ப்பண மென்று
வந்தனை செய்திவரை ஞானயோகியென
வாதமில்லாமலறி வில் விஜயா நீ
இந்திரியமாம் கண்காதுகளடக்கியே
இவ்விஷயமற்ற யோகிகளுமுளர்

23. சுந்தரமாம் சில பிர்ம்மஞான சிஷ்டர்கள்
தனியிருப்பில் மனதை நிறுத்தியே
பந்தமிலா ஞானேந்திரிய கர்மேந்திரியமதை
பிராணவாயு முதல் தசாம்சம்தனை
அந்தமுடை பிர்ம்மாக்னிதனில்
ஹோமித்து நிற்பார் ஹிதமதுவேண்டி
வந்தனை செய்திவரனைவரையும்
வாதமில் யோகியெனக் கொள்வாய்

24. திரவியத்தால் செய்தானமதை சிலரெக்ஞமாகக் கொள்வர்
தூரவுள தூய்மையுளார்க்கு தவமே எக்ஞமாகும்
பிறப்புடை மாந்தர் சிலர் பாராயண எக்ஞம்செய்வர்
நரர் செய்யு மெக்ஞமெலாம் நல்விரத முடனிருக்குங்காண்

25. கும்பக பூரகரேசகத்தோடு கூடி பிராணாயாமம் செய்தலை
நம்பத்தகு மெக்ஞமீதென்று நாடிச்செய்வார் யோகியில் சிலர்
கும்பியிலிடு மாகாரமதினை குறைத்திந்திரிய மடக்குதலை
செம்மை செய் யெக்ஞமீதென்று தெளிந்துரைப்பா ரெக்ஞ
[மறிந்தார்

26. எக்ஞ சிஷ்டத்தையுண்பாரும் எஜஸ் பிர்ம்மமேயாவர்
எக்ஞம் செய்யாதவனுக்கிங்கு, இவ்வுலக சுகமேயில்லை
அக்ஞானத்தில் நின்றுழலும் அவ்வக் ஞானிதனக்கு
மெக்ஞானத்திலடையும் மேலுலகு தானுண்டோ

27. வேதத்தில் கூறியுள்ள வேதோக்த எக்ஞமதை
சாதகத்தில் நீ கொணர்ந்து சத்துவமாய் நீ செய்யில்
பாதகங்கள் பலதீர்ந்து பவித்திரமா மிவ்வுலகில்
போதமுள் ஞானியாவாய் புண்ணியவான் கருமம் தீர்வாய்

28. திரவியத்தால் செய்யெக்ஞமதிலும்
பரந்த ஞானயெக்ஞம் பெரிதேயாகும்
விரிந்துரைக்குமிவ் வெக்ஞமெலாம்
பிர்ம்ம ஞானத்தில் புகுதல் காண்பாய்

29. தத்துவத்தை தானுணர்ந்து தவறில் பிர்ம்மஞானி
சத்துவமாயுனக்கீய்ந்த சத்பிர்ம்ம ஞானமதில்
பத்து மோகத்தைத்தான் பற்றியே நிற்காமல்
எத்தனை ஜகத்தினையும் எளிதில்காண் என்னிடத்தே

30. நம்மிடையில் நீ காண்பாய் நன்றறி ஞானமதினை
உய்மிடை போதிக்குமந்த உண்மை குருவானவர்க்கு
செம்மையுடன் நீ செய்யும் சாஷ்டாங்க நமஸ்காரம்
இம்மையில் இப்பிறவிதீர்க்கும்; இதையறி அர்ஜுனா நீ

31. வண்டி நிறைந்த விறகு கூட்டமதை
அண்டியொரு அனல், அழிக்கும் தன்மைபோல
ஒண்டி ஞானமென்ற ஓடமதை கொண்டு நீயும்
கண்டிடு தாபசமுத்திர கரைதனையிலகுவிலிந்து

32. பாபத்தை போக்கியே பரிசுத்தமாவதற்கு
பரமாத்ம ஞானத்தின் வேறுள தோயிங்கு
கோபத்தை யடக்கியே சித்திதனை பெற்ற
கருமயோகியும் ஞானமாமதினை
லோபமின்றி யடைவானேனும்
வெகு காலமதாகுங் கண்டறாய்
சாபமில் ஞானமதையடைய வேண்டில்
தாணிதனில் முயர்ச்சிதனை செய்தல் நலமே

33. சிரத்தையுடன் குருமுகமாய் சேர்ந்தறிந்த ஞானி
பிர்ம்ம ஞானமாம் ஞானமதை பின்னமன்றி யடைவான்காண்
சிரத்தையன்றி குரு மொழியில் சம்சியமது கொள்வானும்
பரத்தினு மழிந்தானுய் பழியுறு வானிகந்தனிலே

34. பலயிச்சையின்றி பலத்யாக புத்தியோடு
தலத்தில் சேர்ஐயமதை தவஞானமதால் போக்கி
நலத்தில் செய்கருமமதை நம்மீசனுக்கர்ப்பித்தால்
பலமானயிக்கர்மங்கள் பிரண்டோடி விடுமேகாண்

35. பரதவம்சமதில் வந்தோனே பாரதவமரில் நிற்போனே
கரத்தில் தனுக்கொண்டு கருமயோகம் செய்திடுவாய்
பரத்தில் உனக்குண்டாகும் பூர்வசம்சியங்களை
அரிந்துமே தள்ளிடுவாய் ஆத்ம ஞானபலத்தாலே

நான்காவது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

## நான்காவது அத்தியாயம்.

### பாக்களின் விரித்துரை.

—(::)—

4-வது அத்தியாயத்தில் 12-வது பா.

மோட்ச யிச்சையுள்ள முன்னோர்களேயிந்த
தீட்சையாம் கருமமதை செயல்புரிந்தே வந்தார்

மோக்ஷத்தையே தான் அடைய வேண்டுமென்ற, குறியுடையவர்களும், ஞானத்தால் மோக்ஷமடைவதே சுலபமார்க்கம் என்றறிந்திருந்த போதிலும், ஞானிக்கு கர்மம் உண்டா, இல்லையா என்ற சம்சிய திர "தீட்சையாம் கருமமதை செயல்புரிந்தே வந்தார்" என்பதிலிருந்து கருமம் செய்துகொண்டு போவதையே தீட்சையென கொண்டு கருமம் செய்துகொண்டேபோனார்கள்.

மீட்சி வேண்டிநிற்கும் மெய்வில்லாளா நீயும்
ஆட்சிபெற வேண்டியிதை அவலம்பனம் செய்தல் நன்றே

"மீட்சி வேண்டி நிற்கும்" என்றதினால் தன்னுடைய பெந்து முதலிய சுற்றத்தார்களை கொல்வதை தவிர்த்து நின்றால் தனக்கு பாபமுண்டாகாதென்றும் அவர்கள் வேண்டுவதை அவர்களையடைய விட்டுவிட்டால் தனக்கு புண்யம் கிடைத்து மோக்ஷம் கிடைக்கும் என்று எண்ணங்கொண்டுள்ள, பார்த்தனை பார்த்து மீக்ஷி வேண்டி நிற்கும் மென்கிறார். என்ன மீட்சி? உலக பெந்தத்திலிருந்து மீட்சி. (விடுதலை.)

மெய் வில்லாளாயென்று குறிப்பிடுவதிலிருந்து க்ஷத்திரியன் நீ, உன்கடமை, யுத்தம் செய்தல், தர்மத்தை ஸ்தாபித்தல், குற்றம் செய்தோரை தண்டித்தல், இவைகளெல்லாம் மெய் வில்லாளனாகிய உனதுகடன்! மெய் வில்லாளனாகிய நீ, மீட்சி பெற வேண்டுமென்றால் மேற்கண்ட தற்மங்களை ஸ்தாபிக்கவேண்டும். கிரியைகளை செய்யவேண்டும். அதை செய்வதுதான் கடன். தற்மம் என்கிறார். "ஆட்சிபெற வேண்டியிதை அவலம்பனம் செய்தல் நன்றே"

தற்மத்தை ஆட்சி செய்யவேண்டியிதை செய்ய கடவாய் பெரிய பண்டிதர்களும், கருமம், அகருமம் விகருமம் இவைகளை தெரிந்துரைக்க, வல்லவர்களில்லை.

14-வது பா.

கர்மகர்மா, விகர்ம, கெதி மூன்றினையும்
நிர்மல மனதுடையோனும், நிலவுதல் கடினமாகும்

கர்மம், அகர்மம், விகர்மம் இவைகளை ஆராய்ந்தறிவது, அனுஷ்டிப்பது என்பதில் பண்டிதர்களாகட்டும் அல்லது, மனதூய்மையுடையோர்களாகட்டும் முடிவுக்கு வருவது கஷ்டம்.

கர்மத்தில கர்மத்தை கடிதலறிவான்தான்
கர்மத்தை அகருமத்திலும் காண்பான்இலகுவிலிங்கு

எல்லா கர்மமும் அகர்ம பலனை கொடாது: அகர்ம பலனென்றால், ஆத்மஞானிக்கு கர்மம் விதிக்கப்படவில்லை. அவ்வாத்மஞானி கர்மம் செய்துகொண்டு போகிறானென்றால் அதில் அகரும பலன் தான் சித்திக்கின்றது. ஆத்மஞானியால் செய்யப்படும் கருமம் உலக முன்னேற்றத்திற்காக செய்யப்படும் கருமமாகவேயிருக்கும்.

ஆசை த்வேஷ மற்றதாயிருக்கும்: கருமபலனிச்சை விரும்பாத கர்மம், அதுதான் அகர்மம்.

"கர்மத்தை அகர்மத்திலும்; காண்பானிலகுவிலிங்கு"

தான் ஒருபலனையும் கோராமல் உலகத்தோர் பொருட்டு செய்யப்படும் கர்மந்தான் அகருமமெனப்படும். உலகத்தோர் பொருட்டு செய்யப்படவேண்டிய கருமத்தை யார் ஒருவன் செய்கிறுனே, அவன் ஞானியெனப்படுவான். சாதாரணமாக இப்போது உலகத்தில் சர்வ த்யாகத்தையும் தேசத்திற்காக செய்யப்படுவது மேன்மையாக கூறப்படுகின்றது. அதில் முற்றிலும் உண்மையடங்கியிருக்கிறதென கொள்ளவேண்டும். ஏனெனில் தேசமென்பது ஒருவாறு உலகு என்று சொல்லலாம். தன் தேசத்திடத்தில் ஓர் விசேஷ அபிமானத்தை செலுத்தி அன்னிய தேசத்தார்க்கு அதிக கஷ்டம் விளைவிக்க உத்தேசிப்பவன் சாதாரண கர்மம் செய்பவனுகவும் கர்மபல இச்சையுடையவனென சொல்லலாம். ஆனுல் உலக முற்போக்கை முன்னிட்டு தன் தேசம் தன் வகுப்பிற்கு விசேஷ பலனை எதிர்பாராமல் உலக மாந்தர்கட்கு ஓர்விசேஷ நன்மை எற்பட முயலுபவன், அல்லது அதற்குவேண்டிய கர்மம் செய்பவன் ஞானியாக இருத்தல் கூடும் அவனுல் செய்யப்படும் கருமம் அகர்மம் எனவே கொள்ளவேண்டும். அப்படி செய்யப்படும் அகர்மத்திற்கு பாபமோ புண்ணியமோ கிடையாது. எற்கனவே மோக்ஷத்திற்கு காத்திருக்கும் ஜீவர்களுடைய செய்கை யெனவே கொள்ளவேண்டும் சுருக்கி கூறமிடத்து இவர்கள் ஞானிகளென்றும் இவர்களுக்கு மோக்ஷம் சித்தம் என்றும்,, தேகியான ஆத்மா' தேகத்தை விடுதலான இடைக்காலத்தில் இவர்கள் செய்யும் செய்கையே அகர்மமெனக் கூறலாம். இப்படி கர்மத்தில் அகர்மத்தையும் கர்மத்தை அகர்மத்திலும், பார்ப்பவனே சிரேஷ்டன். மேலும் இங்கொரு குறிப்பும் அவசியமானது.. முக்கியமாக இயேசு கிருஸ்துவின் மதமும் இதைச் சார்ந்ததே. இயேசு என்பது அந்த சமூக ஜனங்களின் பெயர் கிருஸ்த் என்பது. அந்த மதத்தின் மூல புருஷனின் பெயர். கீதையில் கண்ட கிருஷ்ண, என்ற பதம் தான் இங்கு கிருஸ்த் என்ற பெயராக காண்கின்றது. அந்த மஹாஞானியான இயேசு கிருஸ்துவே அகர்மத்தின், நிலையை நன்கு உணர்ந்த

வர். தான் சிலுவையில் அறையப்படுவதை யறிந்திருந்தும் உலக தற்மத்தை உத்தேசித்து தன்னே கடவுளின் புத்திரன் எனகூறிக் கொண்டார். கடவுளின் புத்திரன் என்ருல் தான் கடவுளின் சின்னம் என்று அர்த்தம். "ஆத்மாவே புத்ர நாமாஸி" என்ற வாக்கியத்திற்குக் கிணங்க தன்னேயே கடவுளின் ஓர் அம்சமென்ருர். மேலும் புத்திரன் சகல அம்சங்களிலும் பிதாவாகாமலும் சில அம்சங்களில் பிதாவாகயிருப்பானே அதேபோல் தன்னே கடவுளின் புத்திரன் என கூறியதோடு ஞானியான தான் உலகத்தாருக்கு தான் அறிந்ததை எடுத்து சொல்வதில் சுகதுக்கம் ஏற்பட்ட போதிலும் தன்கடமை என்ற கர்மத்தை அகர்மத்தை செய்து கொண்டே போனுர்.

33-வது பாவில் குருமொழியில் நம்பிக்கைக் கொண்டு சம்சியமில்லாமல் கர்மங்களே செய்துகெண்டு போகவேண்டு மென்பது குறிப்பு.

34-வது பா.

பனிச்சையின்றி பலத்யாக புத்தியோடு
தலத்தில் சேர் சமுசியமதை தவஞானமதால் போக்கி
நலத்தில் செய்கருமமதை நம்மீசனுக்கர்ப்பித்தால்
பலமான யிக்கருமங்கள் பிரண்டோடி விடுமேகாண்

இந்தப்பாவில் நலத்தில் செய்கருமமும் ஈசனுக்கு அர்ப்பிக்கப்பட்டால் கருமபலன் நசித்து விடுகின்றது. என்றது குறிப்பு.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

——(::)——

இனி பகவான் கூறுவதை ஐந்தாவது அத்தியாயத்தில் படிப்போமாக.

—[::::]—

# Dr. L. சங்கர் அவுஷதங்கள்.

-:: Dr. L. சங்கர் ::-

## பற்பொடியையே வாங்குங்கள்.

சுகந்த வாசனை! மிகுந்த குணம்!!

பல் வியாதிகளை உடனே நீக்கி பற்களுக்கு வெளுமையைக்கொடுக்கும்.

---

### அசோகம்.

ஸ்திரீகளுக்குரிய ரோகங்களில், பெரும்பாடு, ஸ்வேத குசும வியாதி, மாதவிடாயாவதிலேற்படும் வித்தியாசம், வாதைகள் முதலியவைகளை போக்குவதற்கு மிகவும் உபயோகமானது. மேலும் விசேஷமாக ஸ்திரீகளுக்கு மாதவிடாய் சரியாக ஆகாமலிருக்கையிலும் மற்றும் பலவித கர்ப்பப் பையின் கோளாறுகளிலும் மிகுந்த குணத்தைக் கொடுப்பதோடு பலத்தையும் அதிகப்படுத்தும். ஸ்திரீகளுக்கு பரமௌஷதம்.

அளவு:- கால் அல்லது அரை அவுன்ஸ், தினம் இரண்டல்லது மூன்று முறை, 1-அவுன்ஸ் ஜலத்துடன் போஜனத்தின் பின்.

விலை 8 அவுன்ஸ் புட்டி 1-க்கு ரூ. 2—0—0

---

### குழந்தை கட்டிகளுக்கு நிகரற்ற மருந்து.

"ஹெப்பட்டால்"

மூடுமந்திரம் ஏதுவுமில்லை. ஒவ்வொரு பாட்டிலின் மீதும் "ஹெப்பட்டாவில்" கலந்துள்ள மருந்துகளின் பெயர்களும், அளவுகளும் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆகவே யாவரும் பயப்படவேண்டியதில்லை. எல்லா டாக்டர்களும், இந்த மருந்து கலவையை பார்த்துக்கொண்டு நோயாளிகளுக்கு தாராளமாய் கொடுக்கலாம்.

"ஹெப்பட்டால்"

ஆங்கில வைத்திய முறையில் பட்டம் பெற்றவரும், ஆங்கில ஆயுர்வேத வைத்தியங்களில் சிறந்த அனுபவம் பெற்றவருமான ஒரு டாக்டரால் கண்டுபிடிக்கப்பட்டது. லக்ஷ்மி சங்கர் வைத்திய சாலையில் தயாராவது.

"ஹேப்பட்டால்"

உபயோகத்தால் ஆயிரக்கணக்கான குழைந்தைகள் பிழைத்திருக்கின்றன. போலிமருந்துகளேயும், விளம்பர தடபுடல்களேயும் கண்டு ஏமாந்து விடவேண்டாம்.

## இன்றே பரீக்ஷித்துப் பாருங்கள்.

"ஹெப்பட்டால்" நெ. 1. குழந்தைகளுக்கு வயிற்றிலுண்டாகும் கட்டிகளுக்கு நிகரற்ற மருந்து.

120 மாத்திரைகள் (ஒருமாத உபயோகம்) ... ரூ. **5—0—0**

தபால் செலவு வேறு.

"ஹெப்பட்டால்" நெ. 2. வயிற்றுக்கட்டி வியாதி முற்றிய பருவமாயிருந்தால், அதற்கான மருந்து.

120 மாத்திரைகள் (ஒரு மாத உபயோகம்) ... ரூ. **7—0—0**

## மஹரெஷியின் வாத நிவாரணி.

கை, கால், சந்திப்புகளில், வீக்கத்துடனும் அதிக வலியும், குத்துதலோடு கடுமையான காய்ச்சலுமிருக்கும். இதற்கு தகுந்த அவுஷதம் நமது வாத நிவாரணியே. அஷ்டாங்கிருத வைத்தியத்திலும், இங்கிலீஷ் வைத்தியத்திலும் குணமாகாத நோயாளிகளுக்கு, இந்த அவுஷதம் குணம் செய்திருக்கிறது. 7 மாத்திரைகள் 3½ நாட்களுக்கு கொடுக்கப்படும். 10 நாட்களில் பூரா குணம் கிடைத்து விடும் அனுபான முறையோடு விலை ரூ. 5 மட்டும். ஆர்டர் தரும் போது நோயாளியின் வயது, தேகநிலை முதலியவைகளை எழுதுக.

தீராத வயிற்று நோய்க்கு விபரமாக எழுதுங்கள், மருந்துகள் மூலமும், யோக முறையிலும், வைத்தியம் செய்யப்படும். ஆலோஜனைக்கு ரூ. 1 மட்டும்.

வெண்குஷ்டம்:— ஆரம்பத்திலேயே வைத்தியம் செய்து கொண்டால் குணமாகும். மருந்தின் விலை அணு 1. தான் ஆனால் நாங்கள் தயார் செய்தனுப்புவதற்கு ரூ. 5 தரவேண்டும். ரூ. 1 அனுப்பி, செய்முறை தெரிந்துகொண்டால் நீங்களே செய்து கொள்ளலாம்.

மஹரெஷி கிருஷ்ணஜி,
யோகாச்ரமம், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

5, 6 அத்தியாயங்கள்.

தமிழ் பாக்கள்.



ஆக்கியோன்:

மஹாரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved.) 1940. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந் தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ். கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கிதை.



## 5-வது அத்தியாயம்.

### அர்ச்சுனன் வாக்கு.

1. கருமங்களை விடுயென்றீர் கிருஷ்ணசுவாமியே நீர்
கருமத்தையே செய்யும் கருத்தினலேயிங்கு
கரும யோகத்தையே கருத்துடனுரைக்கின்றீர்
பெருமை இதிலேதென்று பேருரை செய்வீரே

### கிருஷ்ணன் வாக்கு.

2. இங்கு கருமம் விடுவதிலும் ஈசனுக்கர்ப்பித்தல் மேல்
பொங்கு மோக்ஷமதுவும் புனித யிரண்டாலுமுண்டு
உங்கருமம் விடுவதிலும் உத்தமமிங்கேதனில்
தங்கருமம் செய்து தானே ஈசனுக்கர்ப்பித்தல்

### விரித்துரை.

"இங்கு கருமம் விடுவதிலும்; ஈசனுக்கர்ப்பித்தல் மேல்" என்பதிலிருந்து, உன்னல் செய்யப்படும் கருமம் ஈசுவரப்பிரியமாயிருக்கவேண்டும். ஈசுவரனுக்கு அர்ப்பிக்கப்படவேண்டும் என்று ஏற்படுகின்றது. ஈசுவரனுக்கர்ப்பிக்கப்படும் செய்கை, ஈசுவர பிரியமாகவுமிருக்கவேண்டும். அக்கருமம் யாது? ஸதா ஒருவன் பகவானை த்யானித்து கொண்டிருக்கிறான் என்று வைத்துகொள்ளுவோம், அது ஈசுவரனுக்குப் பிரியமானதாக ஆகுமா? தியானம் செய்பவன் மட்டில் ஈசுவரனுடைய சர்வ சக்தியையுணருகின்றான் என்று ஏற்படும். வேறு எச்செய்கையால் ஈசுவரப் பிரியமேற்படும் என்று யோஜனை செய்யுமிடத்து, எஜமானனிடம் வேலை செய்யும்

ஓர் ஆள், அந்த எஜமான் நம்மை அருகிலிருந்து ஏவாதயிடத்து, அந்த எஜமான் எந்தெந்த வேலைகளை தனதாக செய்வானே, அதே வேலைகளை, அந்த ஆள் செய்து முடிப்பானுயின், எஜமானப் பிரியம் அவனுக்கேர்ப்படும். அதேபோல், பகவான் என்ற எஜமான் எந்த வேலையை உலகில் செய்வதாக ஏற்றுக்கொண்டிருக்கிறார் என்பதை 4-வது அத்தியாயம் 7-வது பாவில் கூறிய படி., சிஷ்ட பரிபாலினம்' துஷ்நிக்ரஹம், அதருமம் தொலைத்தல், தரும ஸ்தாபனம், இவைகளை உலகில், தான் செய்யும் செய்கையாக ஒப்புக்கொண்டிருக்கிறார். அந்த வேலைகளுக்கு நீயும், உன்னுலானதை செய்வாயானல் அவையெல்லாம், ஈசுவரப் பிரியமான வேலைகள். ஆகையால் "உங் கருமம் விடுவதிலும் உத்தமமிங்கேதனில் தங்கருமமதைச் செய்து தானே ஈசனுக்கர்ப்பித்தல்" ஆகையினுல் உனக்கு என்று வகுக்கப் பட்டிருக்கும் கருமத்தை செய் என்றே தாத் பிரியம்.

3. இச்சை யொழித்தவனுய் இகழ் துவேஷ மற்றவனுய்
நச்சைதனை விரும்பாமல் நாடுசுக மற்றவனும்
நிச்சியம் சன்னியாசியென நியதியுடனறிவாய் நீ
நிச்சியமவன் மீள்வன் நீண்டகர்ம கட்டினின்று

4. பல் வேறுவிதமாக பகருவர் ஞானயோகம்
சொல்வாரெல்லாம் சுயம் விவேகிகளல்லர்
சொல்லும் யோகமிரண்டும் செவ்வையுடனனுஷ்டித்தால்
பல்கும் மோக்ஷமது பகரச் சான்றுளதோ

5. சாங்கியர்களுமடையு மந்த சதுஷ்டய சம்பத்தை
ஆங்கி வருமடைவார்காண் அன கருமயோகிகளும்
சாங்கியம் கருமமிரண்டும் சாற்றும் பலனென்றே தான்
ஓங்கி யறிந்தோனே உண்மை யறிந்தானே

6. பரமாத்ம சன்யாசத்தை பற்றி வேண்டி நின்றார்க்கு
பிரயாசை யதிகமுண்டு பற்று யோகமிலாவிடில்
நிரந்தர மனத்தோடு நிர்க்குண பிர்ம்ம மடைதல்
பெரும் கருமயோகிக்கு பிரயாசையே யில்லையன்றே

7. இங்கு கருமயோகத்தில் இசைந்து நின்றானும்
சங்கை யேதுமிலா சுத்த மனதுடையோனும்
அங்க ஸ்வாதினமுடன் அடங்கு மிந்திரியமுடையானும்
எங்கு மாத்மஸ்வரூபங்கண்டே எளிதில் கடப்பன் கருமபந்தம்

8. ஆத்மாவின் தத்துவத்தை அகத்தறி கருமயோகி
ஆயாசத்தில் தங்கினும் சுவாசித்தாலும்
நேத்திர செய்கையோடு செவியால் கேட்டாலும்
நடந்து மவன் புசித்தாலும் முகர்ந்தாலும்
காத்திரத்தால் செய்யினும் பேசினும் விஸர்ஜித்தாலும்
கண்களை மூடினாலும் அன்றேல் விழித்தாலும்
பாத்திர சரீரத்தின் செய்கை யீதென்று
பாரினினி துணர்த்துவான் பவித்திரனவன்

9. துய்யத் தாமரையிலையில் துளிநீர் நிற்றல்போல்
செய் கருமபலனிச்சை தள்ளிச் செய்வதோடு
அய்யமின்றி யதின்பலனை அர்ப்பண மீசன்பால் செய்யின்
உய்வுண்டாம் பாபபுண்யம் உண்மையி லொட்டாதிவனை

10. மனதின் சுத்திவேண்டி மன்னு தேகத்தாலும்
மனதினால் புத்தியானால் மற்றபிமான யிந்திரியமதால்
கனவிலும் பலா பேக்ஷையின்றி கருமயோகியின் கருமத்தால்
நினைவில் மோக்ஷமதினை, நிஷ்காமியடைதல் காணாய்

11. ஒன்பது வாயிலுடைத்த உத்தம பட்டினந்தனில்
அன்புறு மிந்திரியங்களை அகமனத்தாலடக்கி
தன்கருமம் ஒன்றும் செய்யான் செய்தலையும் தடுத்து நின்று
பின்னிலை கருமயோகி பேரானந்தம் முறுவான் காண்

(கருமங்கள் செய்யாமலும் செய்ய எவாமலும் நின்று த்யானத்திலிருப்பவனை குறிக்கின்றது.)

12. உத்தம உலகத்துவந்த உண்மை மாந்தர் தமக்கு
மத்தியில் மதிக்கவல்ல மான்ய கருமமதினை
சுத்தியுடன் செய்வதற்கு சுவரூபமும் விதிக்கவில்லை
சித்தாந்தமேது இதனில் சுபாவ மென்றறிவாய்

13. இங்கீசனொருவன் செய் இப்பாப புண்யமதினை
அங்கீகரிப்பதில்லை யென்று அறிவா யர்ச்சுனனே
மங்கு அக்ஞானமதால் அதிமோகங் கொண்டிருக்க
இங்கு இம்மனிதர்கள் இளைபந்துளார் மோஹமதில்

இங்கு இந்த ஜன்மத்தில் மனிதர்கள் செய்யும் பாப புண்யங்களை ஈசன் அப்படியே அங்கீகரித்து அதின் பலாபலன்களை இந்த ஜன்மத்திலேயே கொடுப்பதில்லை. மறு ஜன்மத்திலும் அனுபமுண்டு என்றர்த்தம்.

14. பிர்ம்ம ஞானமதால் பூர்ணமடைந்த ஞானம்
பிர்ம்மத்தை சுவரூபிக்கும் பிரகாச சூரியனேபோல்
பிர்ம்ம மனமுடையோர் பிர்ம்ம நிஷ்டையுடையோர்
பிறப்பிறப்பை தொலைக்கவே பேரியவீடும் பெறுவர்

15. கல்வியால் வணக்கங்கொண்ட கற்றறி பிராமணனுடன்
புல்தனை தின்றுய்யும் புனிதப் பசுவின் பாலும்
நல்லுயர் யானை நாய் நாயினை தின்பான் பாலும்
சொல்பிரமம் சமமே என்பர், சொல்லறி ஞானியாவர்

16. மனமதினில் சர்வமும் சமமென்றறிந்தார்
மன்னு தேகத் தோடிருப்பினும்
ஜனன மரண ஸம்ஸாரத்திலவர்
ஜயித்தவரேயாவர் அர்ஜுனா கேள்
இனமதில் குற்றமற்ற பிர்ம்மம்
இஜ் ஜகத்தில் சமமே சர்வத்திலும்
மன நிஷ்டையுடையோ ரெல்லாம்
மாயந்கீர் பிர்ம்மமே யாவர்

17. நிஷ்டனும் பிர்ம்ம ஞானியவன் நிறைவிய புத்தியுடைத்தானகி
இஷ்டத்தையடைந்த யிடத்து இகத்தின்பம் கொள்வதில்லை
கஷ்டத்தையடைந்த யிடத்தும் கனவருத்தமும் கொள்வதில்லை
சிஷ்டர் வெறுமோகமதை சீறியே வெறுப்பான் யோகி

18. உலகியல் வஸ்துதனிலே ஊன்றுமாசை வெறுப்பான்
பலமுள அந்தக்கரணத்தில் பலிக்குமின்பம் காண்பான்
நலமாம் பிர்ம்மஞ் ஞானமதில் நல் மனதுடையோனகில்
சலனமிலா சுகமதினை ஜகத்தினிலடைவான் பாரே

19. கௌந்தேய நீயறிவாய் காணும் விஷய போகங்கள்
அந்திய மதிலிவையெலாம் அழிந்து துக்கமே யளிக்கும்
இந்த ஜன்ம மதிலாசை கோபம், இவையொழிந்து வேக
எந்த மனிதனுளனோ இவனேயிங்கு யோகியாவன் [மடங்கி

20. தன்னாத்மாவிடத்தே தழுவு சுகமுடையோனும்
தன்னாத்மாவிடத்தே தனித்து கிரீடிப்போனும்
தன்னாத்மாவிடத்தே சுகம் பிரகாச முடையோனும்
அன்னவன் பிர்ம்ம நிஷ்டன் ஆனந்த பூர்ணனவன்

21. கல்மஷ மற்றோரும் கன சமுசிய மற்றோரும்
அல்லல் தருமிந்திரியமதை அகமனத்தடக்கினோரும்
நல்லன நாடிச்செய்வார் நானில மாந்தர்க்கெல்லாம்
சொல் செவி என்பாரிவரை சுபம் பிரகாச சுரூபியாவர்

22. ஆத்ம தத்துவமறிந்தார் ஆசை கோபம் விட்டார்
எத்தும் பிர்ம்மமதிலே இலக்ஷிய லயமுமுடையார்
காத்திருத் தோடிருப்பினும் கருத்தினிலானந்தம் கொள்வர்
நீத்த சரீரம் நீங்க நிர்மல மோக்ஷமு மெய்வர்

23. யாக்கையதில் காணும் இந்திரிய விஷயங்கள் தனை
நீக்கமது செய்து நீயும் நேர் புருவமத்தியில்
நோக்குடை கண்ணதனை நுணிக்கியமைத்தேயங்கு
மூக்குள்ளாம் ஓடுமந்த மூச்சாம் பிராண வாயுதனை

24. தாக்குதலன்றியே தான் சரிசமத்தில் நிறுத்தி
நாக்கு மனது புத்திதனை, நல்வழியிலடக்கி யிங்கு
போக்குவான் காமக்குரோதம் பேருள மோக்ஷமதினை
அக்குதல் வேண்டி நிர்ப்பான் ஆனந்த யோகியாவன்

25. இங்கென்னை எக்ஞும் தபசு இவைகள் செய் பலன்தனை
பங்கமின்றி ஏற்பான் நானென பயின்றறிந்தோர் தாம்
துங்க உலகிற்கீசன் தூய உபகாரி யெனயென்னை
சங்கையிலறி யோகி சதுஷ்டிய மோக்ஷமெய்வான்

22-வது பாவில் ஆத்தும தத்துவமறிந்தார் என்று சொல்லும் போது இதற்கு முன் 15-வது பா, முதல் 21-வது பா, வரையும் ஆத்தும தத்துவமுறைக்கப்பட்டபடி ஆத்துமா தத்துவமறிந்தார் "ஆசை கோபம் விட்டார்" ஆசை கோபம் விடுவதே ஆத்ம தத்துமறிந்ததற்கு அறிகுறி என்று குறிப்பிட்டு "ஏற்றும் பிர்மமதிலே இலக்ஷியலயமுழுடையார்" எப்போதும் பிர்ம்ம ஐக்கிய நோக்கத்திலேயே எண்ணங்கொண்டு இருப்போர்கள் "காத்திருத் தோடிருப்பினும் கருத்தினிலானந்தம் கொள்வர், சரீரத் தோடியிருந்தாலும், ஆனந்தப்பரவசமாயிருப்பார். மேலும் "நீத்த சரீரம் நீங்க" தான் வெறுக்கும் சரீரத்தை எப்போது விடப்போகின்றோம் என்ற எண்ணம் கொண்டோர்களாய், சரீரம் வீழ்ச்சியடைய "நிர்மல மோக்ஷமுமெய்வார். மேலும் இந்தப் பாவில் நீத்த சரீரம் நீங்க" என்று கூறமிடத்து சரீரத்தை கேவலப்படுத்தி பேசியிருந்த போதிலும் 23, 24 பாவின் மூலம் சரீரத்தை யோக ஸாதனத்திற்குள் அமைத்துக்கொண்டால் மரணம்வரை சரீரத்தை நல்லுணர்ச்சி தரும் நிலையில் வைத்துக்கொள்ள யோக ஸாதனமும் கூறப்படுகின்றது. ஆதலால் ஆத்மஞானி ஆத்ம தத்துவம் சரீர தத்துவம் இவையிரண்டும் அறிந்தானுய் சரீரத்தையும் ஆத்மாவையும் சுகயிருப்பில் வைத்துக்கொள்ள வேண்டும், பிரயாசையை, யோகத்தின் மூலம் எடுத்துகொளல் நலமென கூறப்படுகின்றது.

மேலும் 25-வது பாவில் "இங்கென்னை எக்ஞும் தபசு செய் பலன்தனை பங்கமின்றி ஏர்ப்பானுனென பயின்றறிந்தோர்கள் துங்க உலகிற்கீசன் தூய்ய உபகாரி யெனயென்னை சங்கையிலறி யோகி சதுஷ்டிய மோக்ஷமெய்வர்" என்று கூறமிடத்து எல்லோராலும் செய்யப்படும் எக்ஞும் (நற்காரியம்) தபசு இவைகளால் உண்டாகும் பலனை ஏற்பவன் நானேயென்று அறிபவன் யோகமார்க்கத்தில் பயின்றவனுயும் யாதொரு சம்சியமில்லாமல் என்னை உலக சிருஷ்டிகாரணனென்றும் நல்ல உபகாரத்தையே உலகிற்கு செய்வேனென்றும் அறிபவனே யோகியுமாவன் மோக்ஷமுமடைவன்.

எக்ஞம் தபசு இவைகளால் உண்டாகும் பலன் கடவுளை சேர இங்கே என்ன செய்யப்படுகிறது என்ற கேள்வி உண்டாக, எக்ஞம் என்றால் உலகினில் காணும் ஜீவாத்மா பேதங்களுக்கு தன்னால் முடியக்கூடிய நன்மையை செய்யுமிடத்து அப்படி செய்யப்படும் நன்மைகளெல்லாம் பிர்மம் சுவரூபியான ஜீவர்களுக்கே போய்ச் சேருவதால் தனக்கே வருகின்றதுஆதலால் நான் ஏற்பவன் என்கிறார். மேலும் உலகிற்கிசனுக யிருக்கும் நானே உலகோர்க்கு தூய உபகாரி யெனயறிந்தோர் தானும் உலகிற்கு உபகாரியாக இருப்பார்கள். ஆதலாலவர்களுக்கு மோக்ஷம்ஸித்தம்.

## ௬-வது அத்தியாயம்.

1. தான் செய்யும் கருமமதின் தனிப்பலனை எண்ணுமல்
சூனின்றி செய்கருமம் செம்மையுடன் செய்வானேல்
வான் புகழ்வளரக்னி விடுத்த சன்யாசியாகி
யான் புகழ் வண்ணமிக்த யோகியுமாவான் காண்

2. துறவறமே யோகமென துங்க அர்ஜுனு கொள்
பிறப்பிறப்பை துலைத்ததுவும் பின்னிலையது காட்டும்
துறந்த நிலையதுவே தூய்மை யோகி நிலையும்
வெறுத்து நிற்பான் விருப்பை விரும்பிலா கருமயோகி

3. ஞான யோகத்தை வேண்டி நிற்கும் யோகி தமக்கு
மான கருமயோகமே முக்கியமென யறிவாய்
ஞான யோகத்தைத்தான் ஞானியுமடைந்திடிலோ
ஆன அகண்டத்யானம் அமையும் மனச்சாந்தியாலே

4. மோகாதி விஷயங்களில் முழுயிச்சை யொழித்தானை
சாகாத கருமங்களில் செய்பலன் விரும்பானை
மோகாமலாசை யிச்சை நீக்கியே நின்றானை
யோகாரூடனென்று உலகத்துரைப்பார் காண்

5. ஆத்மாவை தன்னுத்மாவால் ஆதரித்து கொளல் நன்று
காத்திருந்தும் கரை சேராமல் கேடுறுதல் நன்றன்று
ஆத்மாவே பெந்துவென ஆனமுறை நன்றுநன்று
ஏத்துமிவ்வாத்மாவே எதிர்க்கும் சத்துரு போன்று

6. மனதினை ஜயித்தாத்மாவின் மனமே பெந்துவாகும்
மனதினை ஜயிக்கா ஆத்மாவின் மனமபகார சத்துருவே யாம்
மனதினை ஜயித்தவன்தான் மானுவமான சுகதுக்கம்
அனைத்தினையு மொன்றாய்க்கொண்டு ஆத்ம நிஷ்டையிலே
[யிருப்பான்.

7. திருப்தியுடை மனத்தோடு திரிந்துணர் ஞானவிஞ்ஞானிதனை
கருத்தினில் விகாரமற்று கர்ம்மதி யிந்திரியம் ஜயித்தானும்
பெரும்விலை தரும் தங்கமதினை பேதமில் மண்ணென கொள்
அரும்தவ ஞானிதனை யோகாரூட னென்பார் [ளும்

8. சுகிருதன் மித்ரன் அரிகாரி துவேஷி பெந்து மத்யஸ்தன்
அகிருத்யன் உதாசினன் அனியாய பாபிகளிடமும்
விகிருதியில்லா சாத்வீக விவேகமுள்ளானிடமும்
சுகிருத சமான புத்தியோடு சிரேஷ்டனாயிருப்பான் யோகி

9. இந்திரியங்களை யடக்கி இயையு மனத்தேக மடக்கி
எந்த வஸ்துவினையும் எனக்கென்று வேண்டானாய்
இந்த யோகிதானே ஏகாந்தமாமோரிடத்தில்
சந்தோஷமுடனிருந்து சலிமனதை நிறுத்தவேண்டும்

10. உயரம் தாழ்மையிலாததோர் உயர் சுத்தமாமிடத்தில்
பெயரிய தர்ப்பம் வஸ்திரம் பேரிவிட்டமான் தோலதனில்
அயர்ந்திடா ஆசனமதில் ஆனந்த மாயமர்ந்தே தான்
துயர்தரு மிந்திரியமதை துலைக்கவே செய்வான் யோகம்

11. தேகாதியங்கத்தை யோகி சமமாய் அலங்காதிருப்பில்
சோகாமலிருந்த வண்ணம் நோக்கைதிக்கில் வைக்காமல்
ஏகாக்ரஹ சித்தமுடன் எந்துமவிழிப் பார்வையுடன்
போகாதிவெறு பிர்ம்மசாரி பரமென்றெனை த்யானிப்பான்

12. அவ்விதமருள் செய்யும் அருள்கொண்ட யோகிதானும்
எவ்வித சுகங்களையும் இகமதில் வெறுப்பானேல்
எவ்வித மார்க்கங்களிலும் எனையே யடைவான்காண்
அவ்விதமடைதலாலே அப்பிறப்பு மொழியுமென்பர்

13. தத்துவ த்யான யோகமில்லை தினியதிக முண்பானுக்கு
சுத்தமாய் உணவில்லானும் த்யான யோகியாகான் காண்
எத்தனை காலமேனும் எழுவிழியுடைபோனும்
அத்தினை அதிக நித்திரை அடைந்தானு மருகதையற்றான்

14. மித உணவு உண்போனும் வேண்டும் கிரியை செய்வோனும்
மித நித்திரையுடையோனும் விழிப்புமவ்வித முடையோனும்
பொதுவாம் பரப் பிர்ம்மத்தில் பக்தி மனமமைந்தோனும்
மத விஷயங்களில்லாதான் மெய்யோகியாவார் காண்

15. காற்றிலா இடமதிலே கவனம் சிறிதுமின்றி
ஏற்றிய தீபந்தானும் இயங்கியலையாத் தன்மையதை
போற்றும் ஆத்மத்யானம் பற்றுமப்யாசிக்குவமை
சாற்றுவாருலக மாந்தர் சான்றி தினுமுளதோ

16. யோகாப்பியாசம் செய்யிலிந்த இவ்விஷயம் துறந்த மனது
யோகத்தில் நின்றாத்மாவில் இணங்கி ஆனந்திக்குமன்றோ
யோகத்தில்ஸ்திரமாய் நின்றான் இயங்கு மிந்திரியத்தின் புறமே
பாகுள்ள புத்திக்கெட்டும் பரம சுகங்காணுவானே

17. பரம சுகமென்றுரைக்கும் பாவத்தை காட்டிலுமோர்
தரணியில் மாந்தரெல்லாம் சாதிக்க எண்ணுவாரோ
சிரமமில் தானடையும் கன துக்கத்தில் கூட
சிரமத்தை புணரான் யோகி சலிக்கவேமாட்டான் காண்

18. சங்கல்பத்தில் கொண்டுள்ள காமாதிகள்
தனைச் சேராமல் தள்ளி விட்டு
அங்கத்திலனுபவி இந்திரியங்களை
ஆன விஷயங்களில் சேர்க்காமல்
துங்கமுள புத்திதனை யிங்கு
தன்னாத்மாவிடை யிருத்தி
அங்குமென்னா ஓர் சிந்தனையும்
அணுகாமல் செய்வதே யோகம்

19. சஞ்சலத் தோடிருக்கும் சாந்தியற்ற யிம்மனதை
அஞ்சல் சிறிதுமின்றி அபிலாஷைகள் விலக்கி
தஞ்சமின்றி பரமாத்மா தன்னிடத்தில் சேர்ப்பிப்பான்
மிஞ்சும் ரஜஸற்றான் மேல் சுக யோகியாவன்

20. பிர்ம்மமே எல்லாவற்றிலும் பிரகாசிப்பதை யறிந்து
பிர்ம்ம முதலீராக அமை பிரிதெல்லாவற்றிலுமே
பிர்ம்ம தெரிசனமுற்று பிர்ம்மமே தனையாக்கி
பிர்ம சிருஷ்டியான துகளை பிரஃகில் தன்னிடம் காண்பான்

21. என்னையே எல்லாவற்றிலுமிருக்க காண்பானே
என்னிடம் எலாவஸ்துவும் இருக்கக் காண்பான்
என்னை யவனிங்கு எற்றமுடனறிவதோடு
என்னை காண்பதையும் யான்காணல் காண்பான்

22. எல்லாவற்றிலு மென்னை எப்பேதமின்றி காண் பான்
கல்லாதார் மார்க்கத்தில் கடுகியே சென்றாலும்
எல்லா மார்க்கமதிலும் என்னையே பஜிப்பானுய்
வல்லான் யோகியாகி வன்மையடைவான் காண்

23. சுகத்தோடு துக்கமதை தானடைதல் போல்
ஜகத்துளோரடைந்தாலும் சமமாக எண்ணுபவன்
ஜகத் சிரேஷ்டனவன் செம்மையுளென் மதம்
புகத்தக்கான் காண் புனிதமுடை அய்யோகி

24. சாம்மிய மென்ற சமயோகமதை சாற்றுகின்ற மதுசூதா
காம்மியத்தை விரும்புமென் கன சஞ்சலமாமனம்
நாம்மெதை சொன்னாலும் நம்பிக்கை கொள்ளாமல்
தாம்மென்று எப்போதும் துடிக்கின்றதென்றான் விஜயன்

25. இன்னமும் சொல்லுகின்றேன் ஏழை நெஞ்சடையேன்
உன்னு மனமுடையேன் உழலுமாசையுடையேன்
என்ன வென்றடக்கினும் எழுகின்ற இந்திரியங்கள்
அன்னவை யடங்குவது அகக்கையில் காற்றடைத்தலே தான்

26. கிருஷ்ணனும் சொல்லுவான் கேட்கு மர்ச்சுனன் நோக்கி
துர் சுபாவ மனமடக்கல் துன்பமேயானாலும்
சிர்த்தையுடனீ செய் பழக்கமதால்
நிர் ஆசை வைராக்கியத்தால் நிலவுதலமையக் காண்பாய்

27. மனமதை யடக்காதான் மன்னு யோக மெய்வதில்லை
என நான்கொண்ட ஏசலில் நிச்சியமது
கன முயர்ச்சியோடு கண்ட உபாயத்தாலும்
தனதாகச் செய்மனதை சாத்தியமாகுங் காண்

28. கிருபையுடனருள் செய்யும் கிருஷ்ணமூர்த்தியே யென்று
அருச்சுனனும் கேட்பான் மேலும் அருள் சுரக்கவே தான்
அரும் யோகம் செய்வான் அர்த்த பகுதியில் வீழ்ந்தால்
பெருங்கதி தானென்னே பேருரை செய்வீரென்றான்

29. பெரும் மார்க்கமதிலே பிர்ம்மத்தையடையுபாயமதில்
இரு மார்க்கமும் காணாய் இடையில் நின்றவனும்
கருமேகம் சிதறுண்டால் கன மழைப்பொழியாப்போல்
அரும் ஞானமில்லான் அவதியுறுனே யிங்கு

30. என்று இங்ஙனமியம்பி எற்று நிற்கு மர்ச்சுனன்
இன்று எனக்கேற்படும் இச்சந்தேகமது நீக்கி
நன்று நிவிர்த்திக்க, நினையன்றி யாருமில்லை
கன்றுடன் விளையாடியவா கடாக்ஷித்தருளுமென்றான்

31. நாசமதை யடையான்காண், நல் கருமம் செய்வானும்
மோசமது போகானே, மோஹமது தீர்ந்தானும்
ஏசலற்ற வனிவன், இணையற்றான் பாத்துமவன்
ஈசனென யென்னை நம்புவர், எவ்விதத்து முய்வார்காண்

32. யோகமது செய்வான்தான் இயக்கு மெக்ஞத்தில் தவறின்
போகமதை யனுபவிக்கும் புண்யம் செய்தோர்கள்
லோகமதை யடைந்தவனும்; உள் உத்ஸாகங்கொண்டு
வேகத்திலென்னை யடைய வருவான் தனவான் வீட்டில்

33. அன்றேலவன் ஜனனம் ஆத்ம ஞானி யிடை தோன்றி
குன்றுமலவன் ஞானம் குடும்பத்தில் விருத்தியாகி
மன்றிலவன் கருமம் மனச்சாந்தி பெற்றங்கு
குன்றில் விளக்கேபோல் குணமுடன் வாழ்வானே

34. எப்படியேனும் பராதீனனும் யோகத்தில் நழுவியோனும்
அப்பியாசத்திலே யவனும் அனுஷ்டித்தே யோகமதை
எப்பிரயாசைதனையுமவன் எள்ளளவும் மதியானுய்
ஒப்புக்கொள் யோகமதை ஓர் புத்தியாய்க்கொள்வான்

35. முயர்ச்சியாலப்பியாச யோகம் முனைந்துமே செய் விவேகி
பெயர்ச்சியிலா மனதோடு பிடிவாதமஃது கொண்டு
அயற்சியின்றியேயவன் அநேக ஜன்மமெடுத்தாலும்
துயர்ந்த பாபம் நீங்கி ஸித்தியில் உத்தமமெய்வான்

36. அருந்தபஸ் செய்வோனினும் ஆனசாஸ்திர ஞானிதனினும்
கருமஞ்செய் காமிகளினும் தியான யோகி மேலோன் காண்
பெருமையுள்ளானவனும் பேரின்பம் வேண்டியெனை
அரும்பஜனம் செய்வார்போல் அர்ஜுனா போகியாவாய்

6-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

—o—

## விரித்துரை.

6-ல் 1.

"தான் செய்யும் கருமத்தின் தனிப்பலனை எண்ணுமல்
ஞானின்றி செய்கருமம் செம்மையுடன் செய்வானேல்"

தன்னால் செய்யப்பட வேண்டிய கருமத்தை செய்து கொண்டு அப்படி செய்யும் கர்மத்தினால் தனக்கென்று ஒரு பலனும் வேண்டாதவனாய் கர்மத்தை செய்துகொண்டு போகும், ஒருவன் "வான் புகழ் வளரக்னி விடுத்த சன்யாசியாகி யான் புகழ் வண்ணமிங்கு யோகியுமாவான் காண்" "அக்னி விடுத்த சன்யாசியாகி" பெண்டு பிள்ளைகளை துறந்து மோக்ஷவீடு சேர சன்யாசம் கொள்ளும் ஒருவனடையக்கூடிய, பலனை முன் சொன்ன கர்மம் செய்யும் யோகியுமடைவான் என்பது கருத்து. சன்யாசியை காட்டிலும் கரும யோகி பெரியவன் என்று இங்கு சொல்லப்படுகிறது.

**6**-ல் **2**-வது பாவில்:

துறவறமே யோக மெனவும் கரும யோகியும், விருப்பை வெறுத்து நிற்பதால், யோகத்தின் முதல் லக்ஷியம், விருப்பை யொழித்தல் எனவும் கூறப்படுகிறது.

**6**-ல் **3, 4**-வது பாக்கள்:

யோகாரூடன் இலக்ஷணம் கூறப்படுகிறது.

**6**-ல் **5**-வது பாவில்:

"ஆத்மாவை தன்னாத்மாவால் ஆதரித்து கொளல் நன்று என்றதினால் ஆத்மாவை, ஆதரிப்பதற்கு ஆத்மாவே வேண்டும் என்று கூறப்படுகிறது. இங்கென்ன இரண்டு ஆத்மா சரீரத்தாலிருக்கிறதா? அப்படியிருப்பின் முன் சொன்னதுபோல் ஆத்மாவை தன்னாத்மாவால் ஆதரித்து கொள்ளலா மென்ற கேள்வி பிறக்க. பரமாத்மாவாகயிருக்கும் பிர்ம்ம சுவரூபம் உன்னாத்மாவால் ஆதரிக்கப்பட வேண்டும். அப்படி ஆதரிக்கப்பட்டால் பரமாத்மா ஜீவாத்மா ஐக்கிய உணர்ச்சி யேர்ப்பட சந்தர்ப்பம் யேற்படும். "காத்திருந்தும் கரை சேராமல் கேடுறுதல் நன்றன்று" என்று சொல்லப்படுவதில் ஆத்மா விவேசனத்திற்குரிய மானிட சரீரமடைந்திருப்பதில், இதுசமயம் முயற்சிசெய்து அடையவேண்டியதான மோக்ஷமென்ற கரை சேராமல் கெடுதியை தனக்கு தானே செய்துகொள்வது நன்றன்று. மேலும், "ஆத்மாவே பெந்துவென ஆனமுறை நன்றே நன்று" என கூறப்படுவதில் உத்தம கெதியை யடைவதற்கு வேறு அன்னிய உதவியே வேண்டாம். உன் ஆத்மாவை பெந்துவாக ஒப்புக்கொண்டு அதின் மூலமே முயற்சி செய், "எத்துகின்ற இவ்வாத்மாவே இங்கு சத்துரு போன்று" இவ்வளவு பெரிதாக துணைக்குறியவனென்று போற்றப்படும் ஆத்மாவையே, நீ சரியாக உபயோகப்படுத்திக் கொள்ளாவிட்டால் அதுவே உனக்கு சத்துருபோல் துன்பமும் தரும். ஆதலால் ஆத்மாவை சிநேகித்துக்கொண்டு ஆத்மா மூலமே பரமாத்மாவை தேடு, என்று கூறப்படுகிறது. மேலும் இந்த பாவின் அடுத்த பா. 6-ல் 6-வது பாவும் "மனதினை ஜயித்தாத்மாவின் மனமே பெந்துவாகும் மனதினை ஜயிக்கா ஆத்மாவின் மனமபகார சத்துருவே யாம். மனதினை ஜயித்தவன் தான் மானவமான

சுகதுக்கம் அனைத்தினையு மொன்றாக் கொண்டு ஆத்ம நிஷ்டையிலே யிருப்பான்'' என்று கூறுகின்றது. ஆகவே மனதை ஆத்ம பிரயத்னத்தால் ஜயித்து அதாவது தனது பிரயத்னத்தால் ஜயிக்கவேண்டும். ஜயிக்க முடியுமென்றும் காட்டி, எப்படி ஜயிக்கமுடியும் என்பதை காட்ட "மானவமான சுகதுக்கம் அனைத்தினையும் ஒன்றாய்க் கொண்டு "சரீரத்திற்கு மானம், அவமானம், சுகம், துக்கம், இவைகள் அடிக்கடி மாறி ஏற்படுவது சகஜம். ஆதலால் அப்படி யேர்ப்படும் போது எல்லாவற்றையும் சமமே என்று எண்ணி, ஆத்ம நிஷ்டையிலிருப்பது மேல் என்று கூறப்படுகிறது. ஆகவே மனிதர்களுக்கு முதல் பெந்து ஆத்மாவென்றும் ஆத்மாவின் மூலமே மனம் ஒடுங்க வேண்டுமென'' தாத்பிரியம்.

9, 10, 11 பாக்கள் மனமடங்குவதற்கு அப்பியாச யோகம் செய்ய வேண்டுமென்றும் அப்பியாச யோகத்திற்கு ஆஸன கிரமம் சொல்லப்படுகிறது.

9-வது பாவில் சொல்லியிருக்கிறபடி இந்திரியங்களடக்கப்பட வேண்டும். பஞ்சேந்திரியங்களும் தான் சொல்வதுபோல் கேட்கும் தன்மையிலிருக்க வேண்டும். அதாவது காது, கண், மூக்கு, நாவு, பீஜம், இதின்மூலம் அனுபவிக்கப்படுவதை இங்கு பஞ்சேந்திரியம் என்று கூறப்படுகின்றது. இவைகளை அடக்குவது என்றால் இவைகளை உபயோகிக்காமலிருப்பது என்று ஏர்ப்படாது. மிதமாகவும் உன் வசமிருக்கும்படியான நிலையில் கொண்டுபோவதற்கு தான் அடக்குதல் என்று கூறப்படுகின்றது.

தனக்கென்று ஓர் வஸ்துவினும் ஆசைவைக்காமல் யோகி ஓர் தனியிடத்திலிருந்து சந்தோஷத்துடன் எப்போதும் சலிக்கும் குணமுடைய இம்மனதை நிறுத்தவேண்டும்.

10-வது பாவில் கண்டபடி ஆஸனமமைத்துக்கொண்டு தியான ரூபமான அப்பியாச யோகத்தை செய்யவேண்டும். இந்த இடத்தில் யுத்தத்தை செய்ய தூண்ட வேண்டிய கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு அப்பியாச யோகத்தை செய்ய தனிமையாக ஓர் இடத்துக்கு போ, என்று சொல்லுகின்றாரே இது என்ன பொருந்தவில்லையே என்று சம்சயம் ஏற்படலாம். பரம் பிர்ம்மத்தை யடைவதற்கு

பல மார்க்கங்களுண்டு 3, 4, அத்தியாயங்களில் கர்மயோகம் கூறப் பட்டும் இப்போது 5, 6, அத்தியாயங்களில் அப்பியாச யோகம் கூறப்படுகின்றது. 13, 14, பாக்களில் ஆகாரம் நித்திரை இவை களின் கிரமம் கூறப்பட்டு மனம் அடங்குவதற்கு ஸாதனக் கிரமம் அப்பியாச யோகம் தான் முக்கியமென காட்டப்படுகின்றது.

27-வது பாவில் கூறுவது போல்:

மனமதை யடக்காதான் மன்னு யோக மெய்வதில்லை
எனவே நான்கொண்ட ஏசலில் நிச்சயமது
கன முயர்ச்சியோடு கண்ட உபாயத்தாலும்
தனதாகச் செய்மனதை சாத்தியமாகுங் காண்

என்று சொல்லப்படுவதை கவனிக்கவேண்டும். எந்தவித உபாயத்தை செய்தாலும் முயர்ச்சியோடு மனமடங்க வழிதேடு வதே யோகத்தின் முக்கிய இலக்ஷணம்.

36-வது பாவில் கூறுவது போல்:

"அரும்தபஸ் செய்வோனினும் ஆன சாஸ்திர ஞானிதனினும்
கருமம் செய் காமிகளிலும் ஞானயோகி மேலோன் காண்"

என்பதிலிருந்து தபஸ், சாஸ்திரம் படித்தல், கருமம் செய்தல் இவைகளெல்லாம் ஞானயோகியாவதற்குத்தான். அப்படி ஞான யோக மடைந்தோர்கள்.

"பெருமையுள்ளானவனும் பேரின்பம் வேண்டியென்னை
அரும் பஜனம் செய்வார்போல் அர்ஜுனா யோகியாவாய்"

என்பதிலிருந்து யோக மார்க்கம் பல அப்படி வேறு வேறு பட்ட யோகத்தை செய்வார்போல் நீயுமிங்கு கரும யோகத்தை செய்து யோகியாவாய் என்றுதான் தாத்பிரியம்.

6-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

———

குறிப்பு:- 6-ல் 11-வது பாவின்படி அப்பியாச யோகம்செய்ய விரும்புவோர்க்கு பிரத்யேகமாக சில கூற உள்ளது. அவர்கள் தேவைப்படும் பக்ஷம் மஹரிஷிக்கு நேரில் எழுதி தெரிந்து கொள்ளவேண்டும். பகவத் கீதை சந்தாதார்களுக்கு மட்டும்.

## கீதா பிரசங்க சம்பந்தமாக மஹரெஷி கிருஷ்ணஜி.



19—8—40 தேதியன்று கோபாலசமுத்திரம் கிருமத்தில் ஊர் உபன்யாசம் செய்தார்கள்.

20-8-40ல் ஷெ ஊர் ஹைஸ்கூலில் வைத்து கீதா பிரஸங்கம் நடந்தது. பள்ளிப் பையன்களோடு உபாத்தியாயர்களும் பொது ஜனங்களும் கூடியிருந்தார்கள்.

8—9—40 அன்று செங்கோட்டை விஷ்ணு பஜனமடத்தில் கீதா பிரசங்கம் நடைபெற்றது. அவ்வூர் மஹா ஜனங்கள் ஸ்திரீகள் உள்பட 200 பேர் வந்திருந்தார்கள். பிரசங்கம் 1½ மணிநேரம் நடைபெற்றது.

ஸாஹித்ய ந்யாய வேதாந்த மஹோபாத்தியாயர் ஸர்வேசுவர சர்மா (திருவாங்கூர்) எழுதுகின்றார்.

"K. Rm. கிருஷ்ணய்யர் (மஹரெஷி கிருஷ்ணஜி) அவர்களால் தமிழில் பா. ரூபமாக மொழி பெயர்க்கப்பட்ட பகவத் கீதையானது சொற் சுவையும், பொருள் சுவையும், கிரந்த கர்த்தாவின் உட் கருத்தும் நிறைந்து இருக்கிறப்டிபால் விவேகிகள் இந்நூலை அன்பாய் ஆதரிப்பார்களென்று பூர்ண நம்பிக்கை யுள்ளவனாயிருக் கிறேன்."

உங்கள் கிருமங்களில் பிரசங்கம் செய்வதற்கும் கீதா தத்து வத்தை பிரசாரம் செய்வதற்கும் உங்கள் அழைப்பைத் தாருங்கள்.

மஹரெஷி கிருஷ்ணஜி.

## 6-வது அத்தியாயத்தில் கூறப்படும், தியான யோகத்தின் விசேஷ விரித்துரை.



கிருஷ்ணனும் சொல்வான் கேட்கு மர்ச்சுனன் நோக்கி
துர்ச் சுபாவ மனமடக்கல், துன்பமேயானாலும்
சிர்த்தையுடனீ செய் பழக்கமதால்
நிர் ஆசை வைராக்கியத்தால் நிலவுதலமையக் காண்பாய்

மனமடங்குவது என்பது கஷ்டமாயிருந்த போதிலும், நிர் ஆசையோடு அதாவது ஆசையில்லாதவனாய், வைராக்கியத்தால், எடுத்த காரியத்தை செய்து முடிப்பதில் பிடிவாதங் கொண்டு சிர்த்தையோடு, பழக்கம் செய்வாயானால் மனமடக்குவதில் ஜயம் பெறலாம் என்று கூறப்படுகின்றது.

மேலும் எப்படி பழகவேண்டும் அதற்கு ஏதாவது மார்க்க முளதா என்ற கேள்வி பிறக்க, முதன் முதலில் சரீரத்தை மித ஆகாரத்தாலும், வேண்டு நித்திரையாலும் சரியான யிருப்பில் வைத்துக்கொண்டு.

உயரம், தாழ்மையில்லாத உயரிய யிடந்தனிலே, உட்காரு மிடத்தை மிருதுவான வஸ்திரம், மான்தோல் அல்லது கிடைக்க கூடிய வஸ்துவினுலமைத்துக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தவண் ணம், கண்களையும், காதுகளையும் வெளியுணர்ச்சிகளை கெவனிக் காமல் செய்துகொண்டு புருவமத்தியில் தன் நோக்கை யமைத்துக் கொண்டு விழியை ஏந்திய பார்வையுடன் அமைத்துக்கொண்டு மனசஞ்சல மற்றவனாய், பகவானை த்யானம் செய்யவேண்டும்.

இப்படி உட்கார்ந்து செய்யப்படும் த்யானம், தினே தினே, சிறுகச் சிறுக செய்தாலும் பழக்கமது ஏற்பட்டு மனம் ஒருமைப்பட ஓர் ஸாதனமாக அமையும். இதையே த்யான யோகமெனக் கூறப்படும்.

இந்தத் த்யான யோகத்தை அவலம்பிப்பவர்களை அப்பியாசி எனக் கூறப்படும்: இந்த அப்பியாசத்தினுல் கொஞ்சம் கொஞ்ச

மாக அப்யாசிக்க நன்மை யேர்ப்படுவதை அப்யாசியே உணர்வான் மேலும் இதற்கு முன்னுல் சொல்லப்பட்டபடி கர்ம யோகத்தைச் செய்துகொண்டே இந்தத் த்யான யோகத்தை சிறுகச் சிறுகப் பழக வேண்டும். அவரவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் கர்மத்தைச் செய்வ தால் தங்கள் தங்களுக்குறிய ஜீவனும்சம் கிடைக்கின்றது. அதில் முக்கியமாக பெருமையும் ஏற்படுகின்றது. உதாரணமாக ஓர் பிரா மணனே எடுத்துக்கொள்வோம். ஊரில் கிடைக்கக்கூடிய நிலங்களே எல்லாம் தான் வைத்துக்கொண்டு அதில் கிடைக்கக்கூடிய லாபங் களுக்காக, கிருஷி செய்பவனே ஊரில் பண்ணேயார் என்று கூப்பிடு கின்ருர்கள். அப்படி அவனே கூப்பிடும்போது அவன் தன்னே கௌரவமாக அழைப்பதாக நினேத்துக் கொண்டால் அது அவனு டைய அவிஞ்ஞதையைத் தான் குறிக்கும்; முதன் முதலில் தன் கருமம் துறந்தவனுய் அன்னிய கருமம் அதாவது சூத்திர கருமத் திற்குறிய செய்கையிலிறங்குகின்ருன். ஆதலால் அவனிங்கு கர்ம பதிதனுகின்ருன். பகவான் சொல்வதுபோல், "தினசரி வாழ்விற் காக சிறுதனம் சேர்ப்போனும், இனத்தில் கர்மம் செய்யினும் கர் மம் செய்தானுகான்." ஆதலால் உலகத்தில் அதிகமாக நிலம் முத லியவைகளே தன்னதென்று வைத்துக்கொண்டிருக்கும், ஒவ்வொரு வர்ணத்தாரும், கர்ம சண்டாளர்களே, அதாவது கர்மபிர்ஷ்டர்கள். இதைப் பாரதம் நடத்திய ஸ்ரீ கிருஷ்ண பகவான் போக்கின்மூலம் அறியலாம். தரும புத்திராதிகளுக்கு அவர்கள் ஜீவனத்திற்குரிய பாகமாவது கொடு என்று தரும ஸ்தாபனத்தின் பொருட்டு துரி யோதனனிடம் கேட்கப்பட்டது. மேலும் துரோணுசாரி, பிராமண குலத்தினனுயிருந்தும் க்ஷத்திரிய தற்மத்தை அவலம்பனம் செய்த தினுல் கௌரவ ஹானி யேர்ப்பட்டது. இதேபோல் பெரிய வியா பாரிகளும், அதிக தனம் சேர்ப்பதற்காக தன்னுடைய ஆசையை பெருக்கி கொளல் நலதன்று. இதேபோல் சூத்திரரும் தங்களுக்கு வேண்டும் நிலத்தை வைத்துக்கொண்டு கிருஷித் தொழிலே செய்து கொண்டு போதல் நன்று. இப்படிப்பட்ட மூல தற்மத்தோடு செய் கர்ம யோகமே மோக்ஷம்தர வல்லது மேலும்.

"சஞ்சலத் தோடிருக்கும் சாந்தியற்ற யிம்மனதை
அஞ்சல் சிறிதுமின்றி அபிலாஷைகள் விலக்கி"

என்பதிலிருந்து மனம் பயமடைவதினுல்தான் சஞ்சலமடைகின்றது

ஆதலால் அஞ்சல் சிறிதுமின்றி, என கூறப்படுகின்றது. பயமடையாதே, ஆசைப்படாதே, என்று மனதிற்கு தைரியம் சொல்லப் படுகிறது.

"தஞ்சமின்றி பரமாத்மா தன்னிடத்தில் சேர்ப்பிப்பான்
மிஞ்சும் ரஜஸற்றான் மேல் சுக யோகியாவன்"

அப்படி பயமில்லாதவனுயிருந்துகொண்டு பரமாத்மாவிடத்தில் தன் மனதை கலக்கச்செய்பவன் ரஜோ குணப்பற்று கொஞ்சங்கூடயில்லாதவனுய் சத்துவ குண பிரதானியாய் "சுக யோகியாவன்."

நீ யோகியாக பிரயத்னம் செய்ய ஆரம்பவித்துவிட்டால் போதும், உன்னை யோகியாக செய்யவேண்டிய பொறுப்பும் பகவானை சார்ந்தது என்று சொல்லப்படுவதை கீழ்கண்ட பா. உணர்த்துகின்றது.

"முயற்ச்சியாலப்பியாச யோகம் முனைந்துமே செய் விவேகி
பெயற்ச்சியிலா மனத்தோடு, பிடிவாதமது கொண்டு
அயற்ச்சியின்றியேயவன் அனேக ஜன்ம மெடுத்தாலும்
துயர்ந்த பாபம் நீங்கி, ஸித்தியில் உத்தமம் எய்வான்"

ஆகையினுல் ஜீவர்கள் யோக மார்க்கத்திலிறங்க வேண்டியது தான் அவர்கள் கடமை. மோக்ஷம் ஸித்தமாதலால் எல்லா ஜீவர்களும் மோக்ஷ மார்க்கத்திலிறங்கவே யோக மார்க்கத்திலிறங்க வேண்டும் என்று சொல்லவே அர்ஜுனனை பார்த்து, பகவான் 'அர்ஜுனு நீ யோகியாவாய்" என்கிறுர். நீ கர்மயோகி யாவை கர்மயோகிக்கு ஞானயோகிக்கும் மோக்ஷம் ஸித்தம் என்று கீழ் குறிக்கும் பா. உணர்த்துகின்றது.

5–ல் 5-வது பா.

சாங்கியர்களடையுமந்த சதுஷ்டிப சம்பத்தை
ஆங்கி வருமடைவார் காண் ஆன கருமயோகிகளும்
சாங்கியம் கருமமிரண்டும் சாற்றும் பலனென்று தான்
ஓங்கி யறிந்தோனே உண்மை யறிந்தானே

ஆதலால் இந்த 6-வது அத்தியாயத்தில் சாக்ஷாத் எம் பெருமான் கிருஷ்ணமூர்த்தி சொல்வது போல் நீங்கள் ஒவ்வொரு

வரும் இன்றே த்யான யோகத்தில் இறங்குங்கள். உலகத்தில் எல்லா மதஸ்தர்களுக்கும் த்யான யோகம் பிரதானமாக கூறப்பட்டிருக்கின்றது. மகம்மதியர்களாகட்டும், கிருஸ்துவர்களாகட்டும், மற்றும் புத்தர்கள், ஜயினர்கள், சிரோஷ்டர்கள் எல்லோரும் த்யான யோகத்தையே செய்கின்றார்கள். ஆதலால் இந்த த்யான யோகத்தின் பிரதானம் உலகெங்கும் பரவியிருக்கின்றதை காண்கின்றோம். ஆதலால் உலகில் ஸர்வ மத சம்மத உணர்ச்சியை ஏற்படுத்த வேண்டுமென்ற முக்கிய தத்துவத்தை அடிப்படையாகக்கொண்ட இந்த ஸநாதன மதப் பற்றுடைய ஹிந்துகளும் த்யான யோகத்தை செய்துகொண்டு போகவேண்டும்.

அப்படி செய்துகொண்டு போகும்போது உலகுள்ள மாந்தர்களுக்கு ஒற்றுமை உணர்ச்சி ஏற்பட்டு உலகத்தில் மதப் பூசல்கள் ஒழிந்து உலகம் க்ஷேமத்தை யடைய ஹேதுவாகும்.

உலகத்தில் இந்த கீதா மதமும் பரவி எல்லோரும் ஒன்று யெனவும் கடவுளைப் பற்றியோ அல்லது கடவுளைத் தேடும் மார்க்கத்தைப் பற்றியோ சண்டையில்லாமல் இகத்தில், நன்மையான வாழ்க்கையையும் பரத்தில் மோக்ஷமும் கிடைக்க ஹேதுவாகும். ஆதலால் "தும்யோகிபனோ" என்ற ஹிந்தி வாக்கியப்படி நீங்களும் யோகியாகக் கடவீர்கள். இன்றே அப்பியாசம் செய்ய தொடங்குங்கள்.

அப்பியாச யோகத்தால் அருள் ஞானமது கிட்டும்
சுப்பிரகாச ஞானத்திற்கு த்யானமே சிரேஷ்டமாகும்
செப்பும் த்யானமதில் செய் கருமத்யாகம் மேலாம்
ஒப்பும் த்யாகமேதான் உத்தம சாந்தி கண்டாய்

என்று கூறுவதுபோல் அப்பியாச யோகம் செய்துவந்தால் சுயம் பிரகாச ஞானம் உண்டாகும். ஞானத்திற்கு தியான யோகம் வேண்டும். செய் கரும த்யாகத்தோடு த்யானம் வேண்டும். த்யாகமே மோக்ஷமளிக்க வல்லது.

6-வது அத்தியாயம் விசேஷ விரித்துரை முற்றிற்று.



இனி பகவான் கூறுவனத 7-வது அத்தியாயத்தில் படிப்போமாக.

# Dr. L. சங்கர் அவுஷதங்கள்.

-:: Dr. L. சங்கர் ::-

## பற்பொடியையே வாங்குங்கள்.

சுகந்த வாசனே! மிகுந்த குணம்!!

பல் வியாதிகளே உடனே நீக்கி பற்களுக்கு

வெளுமையைக்கொடுக்கும்.



### அசோகம்.

ஸ்திரீகளுக்குரிய ரோகங்களில், பெரும்பாடு, ஸ்வேத குசும வியாதி, மாதவிடாயாவதிலேற்படும் வித்தியாசம், வாதைகள் முதலியவைகளே போக்குவதற்கு மிகவும் உபயோகமானது. மேலும் விசேஷமாக ஸ்திரீகளுக்கு மாதவிடாய் சரியாக ஆகாபலிருக்கையிலும் மற்றும் பலவித கர்ப்பப் பையின் கோளாறுகளிலும் மிகுந்த குணத்தைக் கொடுப்பதோடு பலத்தையும் அதிகப்படுத்தும். ஸ்திரீகளுக்கு பரமௌஷதம்.

அளவு:-கால் அல்லது அரை அவுன்ஸ், தினம் இரண்டல்லது மூன்று முறை, 1-அவுன்ஸ் ஜலத்துடன் போஜனத்தின் பின்.

விலே 8 அவுன்ஸ் புட்டி 1-க்கு ரூ. 2—0—0

### குழந்தை கட்டிகளுக்கு நிகரற்ற மருந்து.

"ஹேப்பட்டால்"

மூடுமந்திரம் எதுவுமில்லே. ஒவ்வொரு பாட்டிலின் மீதும் "ஹேப்பட்டாலில்" கலந்துள்ள மருந்துகளின் பெயர்களும், அளவுகளும் அச்சிடப்பட்டிருக்கின்றன ஆகவே யாவரும் பயப்பட வேண்டியதில்லே. எல்லா டாக்டர்களும், இந்த மருந்து கலவையை பார்த்துக்கொண்டு நோயாளிகளுக்கு தாராளமாய் கொடுக்கலாம்.

"ஹேப்பட்டால்"

ஆங்கில வைத்திய முறையில் பட்டம் பெற்றவரும், ஆங்கில ஆயுர்வேத வைத்தியங்களில் சிறந்த அனுபவம் பெற்றவருமான ஒரு டாக்டரால் கண்டுபிடிக்கப்பட்டது. லக்ஷ்மி சங்கர் வைத்திய சாலேயில் தயாராவது.

"ஹெப்பட்டால்"

உபயோகத்தால் ஆயிரக்கணக்கான குழந்தைகள் பிழைத்திருக்கின்றன. போலிமருந்துகளையும், விளம்பர தடபுடல்களையும் கண்டு ஏமாந்து விடவேண்டாம்.

## இன்றே பரீக்ஷித்துப் பாருங்கள்

"ஹெப்பட்டால்" நெ. 1. குழந்தைகளுக்கு வயிற்றிலுண்டாகும் கட்டிகளுக்கு நிகரற்ற மருந்து.

120 மாத்திரைகள் (ஒருமாத உபயோகம்) ... ரூ. 5—0—0

தபால் செலவு வேறு.

"ஹெப்பட்டால்" நெ. 2 வயிற்றுக்கட்டி வியாதி முற்றிய பருவமாயிருந்தால், அதற்கான மருந்து.

120 மாத்திரைகள் (ஒரு மாத உபயோகம்) ... ரூ. 7 0 0

## மஹாரெஷியின் வாத நிவாரணி.

கை, கால், சந்திப்புகளில், வீக்கத்துடனும் அதிக வலியும் குத்துதலோடு கடுமையான காய்ச்சலுமிருக்கும். இதற்கு தகுந்த அவுஷதம் நமது வாத நிவாரணியே. அஷ்டாங்கிருத வைத்தியத்திலும், இங்கிலீஷ் வைத்தியத்திலும் குணமாகாத நோயாளிகளுக்கு, இந்த அவுஷதம் குணம் செய்திருக்கிறது. 7 மாத்திரைகள் 3½ நாட்களுக்கு கொடுக்கப்படும். 10 நாட்களில் பூரா குணம் கிடைத்து விடும் அனுபான முறையோடு விலை ரூ. 5 மட்டும். ஆர்டர் தரும் போது நோயாளியின் வயது, தேகநிலை முதலியவைகளை எழுதுக.

திராத வயிற்று நோய்க்கு விபரமாக எழுதுங்கள், மருந்துகள் மூலமும், யோக முறையிலும், வைத்தியம் செய்யப்படும். ஆலோஜனைக்கு ரூ. 1 மட்டும்.

வெண்குஷ்டம்:— ஆரம்பத்திலேயே வைத்தியம் செய்து கொண்டால் குணமாகும். மருந்தின் விலை அணா (1) ஒன்றுதான். ஆனால் நாங்கள் தயார் செய்கையடிப்பதற்கு ரூ. 5 தரவேண்டும். ரூ. 1 அனுப்பி. செய்முறை தெரிந்துகொண்டால் நீங்களே செய்து கொள்ளலாம்.

மஹாரெஷி நிருஷ்ணஜி,

யோகாச்ரமம், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## கர்ம யோகம்.

1-முதல் 6-அத்தியாயங்கள்
தொகுத்துரை.



ஆக்கியோன்,
மஹரிஷி கிருஷ்ணஜி,
பாரத்வாஜ குலோத்பவன்,
கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved.) 1940. (விலை அணு. 12

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந் தோறும் வெளிவரும். முன் பணம் ரூ 2-8-0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## கர்மயோகத்தின் தொகுத்துரை.

பகவத் கீதை 6 அத்தியாயங்களில் பகவான் மனிதர்களின் சரீர தத்துவம், ஆத்ம தத்துவம், பிர்ம்மத்தின் நிலை, பரமாத்மா, ஜீவாத்மா சம்பந்தம், சரீர ஜீவ சம்பந்தம் இவைகளையெல்லாம் எடுத்துச் சொல்லுகின்றார்.

ஆத்மா நசிப்பதில்லை ஆனந்த முடைத்ததது
காத்த வாலிபமும் கௌமார கிழமடையாதோ
மாத்து சரீரமும் மரணத்தில் தோன்றுவோ
ஆத்மா ஞானியிதில் அதிமோகம் கொள்வதில்லை

என்ற பாவில் ஆத்மாவுக்கு நாசமில்லை. அது எப்போதும் ஆனந்தமாயிருக்கும். ஆத்மா எப்படி எப்போது ஆனந்தமாயிருக்கும்? என்ற கேள்வி எழுமிடத்து ஆத்மா இயற்கையாகவே ஆனந்தமுடைத்தவனு அல்லது சரீரத்தில் அமைந்திருப்பதினால் ஆனந்தமுடைத்தவனு? இயற்கையில் ஆனந்த பரிதனுயிருக்க வேண்டியவனே. ஆனால் சரீரத்திலமையும்போது ஜீவர்கள் தன்னுடைய அவிவிவேகத்தினால் ஆத்மசஞ்சலத்திற்கு ஆத்மாவை ஆளாக்குகின்றார்கள். மனிதன் தனக்கு எதினால் கஷ்டம் வருத்திக் கொள்கின்றான் என்றதை யோஜிக்குமிடத்து மனிதனுக்கு எல்லாவற்றைக்காட்டிலும் மரண பீதிதான் பெரிதான பயத்தை உண்டு பண்ணுகின்றது. ஏனெனில் மரணத்திற்கு பின்வறப்படும் நிலையை யறியாதவனுயிருப்பதால்தான். அது மட்டிலுமென்ன இகத்திலேயே தன் ஜீவனம் நடத்துவதிலும், தனக்குறிய வஸ்துக்களை இயற்கையிலிருந்து யடையவேண்டியதில் பேருசைப் படுவதாலும் தன்னை கஷ்டப்படுத்திக் கொள்ளுகிறான்.

முதன் முதலில் காத்த வாலிபமும் கௌமார கிழமடையாதோ என்று குறிப்பிடுவதிலிருந்து வாலிப காலத்தில் நீ சரீரத்திலனுபவிப்பதை கௌமார கிழம் இந்த இரண்டு திசைகளிலும்

அனுபவிக்க கூடுமோ முடியவே முடியாது. மனிதனின் அனுபவத்திற்குசாதனம் மூன்று. ஆகாரம், நித்திரை, மைதுனம்; ஆகாரத்தையெடுத்துக்கொள்வோம். ஆகாரத்தை யுண்பதில் உருஜியை உத்தேசித்து அதிகம் உட்கொண்டாலும், வாலிபத்தில் ஜீரணமாவது போல் வயது காலத்தில் ஜீரணம் செய்யமுடிவதில்லை. ஆதலால் உருஜியாயிருக்கிறது என்ற எண்ணத்தோடு வயது காலத்தில் அதிகம் உண்ணமுடிவதில்லை. இதேபோல் நித்திரையும். நித்திரைக்கு முக்கியமாக வேண்டுவது சரீர உணர்ச்சி. வாலிபத்தில் சரீரம் நல்லதோர் உணர்ச்சியிலிருப்பதால் நித்திரையும் நன்றாகக் கிடைக்கும் வயது காலங்களிலும் சரீரம் நல்ல அமைப்பிலில்லாதபடி சோர்வுகளும் தளர்ச்சிகளையுமடைந்து விடுகின்றன. நித்திரைக்கும் வாலிபமேவேண்டும். அதேபோல் மைதுனத்திற்கும் (காம உணர்ச்சிக்கும்) ஆதலால் இவ்வளவு சுகத்திற்கும் காரணமாயிருந்த வாலிபம் கௌமாரம் கிழம் அடைவது இயல்பு.

"மாத்து சரீரமும் மரணத்தில் தோன்றுவோ" எப்பொழுது சரீரம் இன்ப நுகர்ச்சியினால் க்ஷீணித்து கிழமடைகின்றதோ அப்போது மரணமென்பது உண்டாகுமென குறிப்பிடும்போதே மறுபிறப்பு முண்டென்று என்பதை குறிப்பிட மாத்து சரீரமும் மரணத்தில் தோன்றுமென்கிறார். மேலும் "ஆத்ம ஞானியிதில் அதிமோஹம் கொள்வதில்லை" என்று குறிப்பிடும்போது ஆத்மாவின் அமைப்பறிந்தவர் இது மாதிரியான விஷயங்களில் அதிக ஆசை கொள்வதில்லை என்று தெரிவிக்கப்படுகிறது.

கந்தலை கழித்து நீ கதருடை தரிப்பதே போல்
பெந்தமுள ஜீவனும் பாண்டத்தை விடுதலாகும்
சொந்த முடனவனும் தேகத்தை விட்டாலும்
அந்தமுள் சரீரத்திலமைவான் அக்கணமே

உன்னால் உடுத்திக்கொள்ளப்படும் வஸ்திரம் கிழிந்து கந்தலாய்ப் போய்விட்டால் நீ புது வஸ்திரத்திற்கு போகமாட்டாயா? அதுபோலவே இங்கு உன்னுடைய சரீரம் கிழப்பருவமடைந்து விட்டால் இந்திரியங்கள் சரியான நிலையில் வேலை செய்வதில்லை இந்திரியங்கள் தளர்ந்துவிடுகின்றன. உடனே இவ்வாத்மா இந்த

சரீரம் உதவாக்கரையானதை யறிந்து மறுபடியும் நல்லதோர் சரீரத்தில் புகுந்து கொள்ளுகிறான். ஆகவே "பிறப்புமிறப்பும் பேருடைமாற்றே" என்பதுபோல் ஆத்மா மறுபடி பிறக்கின்றான். ஆகவே சரீரம் அழியத்தக்கதென்றும் ஆத்மா நித்யனென்றும் ஆத்மா மறுபடியும் சரீரத்தை யடைவதினால் மறுபிறப்புண் டென்றும் அறிகின்றோம்.

உலக பிறப்பையடைந்துள மானிடர்களுக்கு அவரவர்கள் பூர்வ கர்மபலன்படி இங்கு சுகம், துக்கம், பாக்கியம், அபாக்கியம், நன்மை, தீமை முதலியன நடைபெறும் என்று சொன்னால் இது ஜன்மத்தில் செய்யப்படும் செய்கை, அடுத்த ஜன்மத்தில், தான் அடையவேண்டிய பலனை உத்தேசித்தா, அல்லது இந்த ஜன்மத்திலே கிடைக்குமா என்ற கேள்வி பிறக்க பகவான் சொல்லுகிறார். இரண்டுமுண்டு என்கிறார்.

## பகவான் கிருஷ்ணன் அர்ச்சுனனை விளித்து

"ஜயமதையடைந்திடிலோ ஜகத்திதனையாண்டிடுவாய்
ஜயமபஜயமதை சமமாககொள்வாய் நீ"

ஜயமோ அபஜெயமோ இவ்விரண்டையும் சமமாகக்கொள். ஜயமடைவாயானால் இங்கு இராஜ்யம் கிடைக்கும். இகத்தில் கிடைக் கும்பலன் இதுவே. அபஜயம் கிடைக்குமானால்.

"இத்திருசெருவில் நீ இஜ்ஜீவனையிழந்தாலும்
உத்தமருலகில் நீ அவாரூசியாவாயே"

அபஜயத்தையடைந்தால் பரத்தில் மோக்ஷம் கிடைக்கும். ஆதலால் பலன் எப்படியும் உண்டு, கர்மம் செய்வை என்கிறார்.

ஆகையால் இங்கு கர்மயோகம் உறுதிப்படுத்த இன்னும் வேண்டுவதியாது? ஒன்றுமில்லை என்றே கொளல்வேண்டும்.

கரும பேதமுணறப்பார் கடையது காணாதார்
தருமகாரியமதால் சொர்க்கமே கிட்டுமென்பா

அவ்வனவன் செய்யவேண்டிய கருமத்தைவிட்டு வேறு கர்மம் செய்தால் பலனுண்டு சொல்வாரெல்லாரும் "கடையது காணுதார்" முடிவு தெரியாதவர்கள் மேலும் அவர்களால் சொல்லப்படும் கர்மம் புத்திக்கு தருமத்தை அனுசரித்தேயிருந்தாலும் அதின் பலனும் பூர்ணபலனுகயிராது. உதாரணமாக ஓர் ஸ்திரீயை எடுத்துக் கொள்வோம். ஸ்திரீகளுக்கு சுதந்திரமாக்ச்செய்ய கருமம் ஒன்று மில்லை ஒரு பர்த்தாமூலம் தன் வாழ்வை நடத்தி உலகசுகங்களையும் பரத்தில் கிடைக்கவேண்டிய சுகங்களையுமடையவேண்டுவதற்கு தன்னை கட்டுப்படுத்திக்கொண்டிருக்கிருள். அந்த ஸ்திரீயானவள் தனக்கு சுதர்மமான பதிவிருதா தர்மத்தோடு சிலவிசேஷவிரதங்கள் அனுஷ்டிக்கவேண்டும் என்று நினைத்து தரும பலனைத்தரத்தக்க சில ஸத்கர்மங்களைச் செய்தாலும், அதுவும் தன் பர்த்தாவின் அனு மதியின்பேரில்செய்தாலும், அக்கருமங்களினல் இவர்களடைய கூடியப்பலன் சொர்ப்பமே. அதாவது சொர்க்கமேஎன்று வைத்துக் கொள்ளலாம் என்ருலும் தரும்பலனில் சொர்க்கம், சாற்றப்பெரி தாயோ சொர்க்கம் பெரிதான பலனென நினையாதே குறிப்பிட்ட காலத்திற்கு சுகானுபவம் பிறகு பிறப்பிறப்பிலடையவேண்டியது தான்.

ஆனல் தன் சுவதர்மமாகிற பதிசிச்ருஷையில் குடும்பரணம் முதலான தர்மங்களையனுஷ்டித்தால் மோக்ஷம் கிடைத்துவிடும். ஆகையினல்தான்

பலத்தை விரும்பாமல் பார்தனில் செய்காரியம்
ஜலத்துளியினும் சிறியதேயானலும்
நிலத்தில் பெரிதாக நியதியோர்கூறிடுவர்
பலத்தில் பெரிதாகி பவமந்தமறுத்திடுமே.

என்று கூறப்படுகிறது. தனக்கென்று தனிப்பலனை விரும் பாமல் செய்யப்படும் காரியம் கொஞ்சமாகவோ அல்லது வெகு சின்னதாகவேயிருந்தாலும் உலகத்தில் பெரிதாக மதிக்கப் படுவதுடன் பலனீய்வதில் மோக்ஷத்தையும் கிடைக்கச்செய்யும் உதாரணமாக "திருவள்ளுவர்" என்ற பெயருடைய பெரியாரிருந் தார். தன் கருமமாகின்ற துணிநெய்தல் என்ற தொழிலைச் செய்து

கொண்டு எளியவாழ்க்கை வாழ்ந்துவந்தார். தன் தொழிலினால் தனக்குக் கிடைக்கக்கூடிய வாழ்க்கையில் செம்மையான வாழ்வையே செய்துவந்தார். அவருக்கு மகாபதிவிருதையான ஓர் உத்தமி இல்லறக்கிழத்தியாகயமைந்திருந்தாள். ஓர் நாள் தன் மனைவியிடம் தனக்கு அன்னம் படைக்கும்போது ஓர் சிறு கிண்ணியில் தண்ணீரும் ஓர் ஊசியும் எடுத்துவைக்கச்சொன்னார். தினசரி இதைச்செய்யென்றும் சொன்னார். அந்த உத்தமியும் தன் பர்த்தா சொன்னபடி தினே தினேசெய்துவந்தாள். திருவள்ளுவர் ஒரு நாளாவது கிண்ணி ஜலத்தையோ, ஊசியையோ உபயோகப்படுத்த வில்லை. இப்படி அநேக காலம் கழிந்தன. மனைவி மரணமடையும் தருவாய் வந்தது. தன்னுடைய மனைவியின் மரணத்தை யறிந்த திருவள்ளுவர் மிக வருத்தப்பட்டார். மனைவியும் தன் மரண காலம் சமீபத்துவிட்டதை யறிந்தவளாய் தன் வாழ்நாளில் தனக்கு ஏற் பட்டிருந்த சம்சியமதை தீர்த்துக்கொள்ளக் கருதி, "ஏ நாதா! தாங் கள் என்மேல் அதிக அன்பு உடையீர், தாங்கள் ஆக்ஞையின் ரக சியத்தை யறிய எனக்கு சுதந்திரமில்லை. கொஞ்ச நேரத்திலென் உயிர் பிரியப்போகிறது. ஆதலால் உங்களை இறைஞ்சி கேட்பது ஒரே வினா. அதற்கு பதில் தருவதாக (அதுவும் தங்களுக்கு சம்மதி யானால்) வாக்களியும்" என்றாள். திருவள்ளுவரும், "கண்ணே! நீ கேட்கவே வேண்டாம் நானே உன் சம்சியம் நீக்குகிறேன்" என்று தன் மனைவியின் குறிப்பறிந்தவராய்

"உண்ணும் அமுதில் ஓர் துளிதானும்
மண்ணினில் வீழ்ந்தால் வீழ்ந்ததை யாங்கே
நுண்ணிய ஊசியால் நுணிக்கியே எடுத்து
கிண்ணி தண்ணியில் கேடுதனை நீக்குவேன்"

என்றார். மனைவியும் மனச்சமாதான மடைந்து மரணமடைந் தாள். ஆகையால் மனைவியின் சுதர்மம், பர்த்தாவின் ஆக்ஞைப்படி நடத்தல். அதிலேற்படும் பலன், அபலனைப்பற்றி விசாரணை செய்யாமல் செய்துகொண்டேபோனால் சிறியதோர் காரியமாயிருந் தாலும் பெரிதாக போற்றப்படுவதுடன், அதிகபலன் தருவதாயும் ஏற்படுகின்றது. ஆதலால் கர்மயோகத்தைச் செய்வதில் பலனை விரும்பாமல் செய்யப்படவேண்டும் என்று கருத்து.

"கூபஜலத்தில் குளித்தல் குடித்தல்போலவேதான்
பாபமதை தீர்க்கும் பக்ர்வேதோக்தகர்மம்.

வேதோக்த கர்மம் அதாவது ஒன்றை இங்கு செய்தால் அங்கு அதிகமாக அதன்பலன் கிடைக்குமெனச்சொல்லி சில சில தரும கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக ஹிந்துக்களில் சாதாரணமாக இறந்தவர் பொருட்டு சிரார்த்தங்கள் செய்யப் படுகின்றது. இறந்தவர்கள் நற்கெதியையடையச் செய்வதற்கு அவர்பொருட்டு மற்றொருவர் இங்கு சில கருமகாரியங்களைச் செய்தால் இறந்தவரின் ஆத்மா சாந்தியடையஹேதுவாகும் என்று கூறப்படுகிறது. இதுபோன்ற தரும காரியங்களெல்லாம் பாபமதை தீர்க்கும். ஒரு சொல்பபலனும் கர்த்தாவுக்கு கிடைக்கலாம். ஆனால் இதுபோன்ற வேதோக்தமான கருமங்களை பகவான் ஒரு மனிதன் கிணற்று ஜலத்தினல் தன்னுடைய ஸ்நானம், பானம் முதலியவைகளை நடத்திக்கொண்டு ஜலத்தினலடையக்கூடிய ஏக தேச பலனை அனுபவிக்கின்றான் என்கிறார்.

"பூபநதி ஜலத்தாலே பூவுலகம் செழித்தல்போல்
தாபந்தீர்த்து சதுஷ்டியும் தந்திடும்காமியகருமம்"

என்பதிலிருந்து பெரிய ராஜநதிபோன்ற தீரவாஸங்களிலிருக்கும் ஒருவன் தன்னுடைய ஸ்நானம், பானம் முதலிய சௌகரியங்களை அதிக சுலபமாகவும், இன்பமயமாகவும் எப்படி அனுபவிக்கின்றானே அதேபோல் இந்த கீதாசாஸ்திரத்தில் கூறப்படும் அகாமிய கருமம் (பலனிச்சையற்ற செய்கை.) எல்லாவிதமான தாபங்களைத் தீர்த்து மோக்ஷத்தையுமளிக்கவல்லது. ஆகையினல், முக்கியமாக அதிகபலனை அதாவது பிறப்பிறப்பு ஒழித்து ஜீவ ஐக்கியமளிக்கும். மோக்ஷம் கிடைக்கத்தக்க அகாமிய கருமம் மேலானது. அதை இந்த "கர்மயோகத்தினலே" நீ யடையலாம் என்று சொல்லி அதைச் செய்யவேண்டிய மார்க்கத்தையும் விவரிக்கின்றார்.

மேலும் உலகத்தில் மோக்ஷமடைய விரும்பும் ஜீவர்களுக்கு தன்னுடைய உலக சம்பந்தமான நித்யவாழ்வோடு கூடி ஓர் ஸாதனக்கிரமம் மோக்ஷமடைவதற்கும் கூறப்படுமானல் அந்த கர்மம் உலகத்தில் தன் தேவைகளை பூர்த்தி செய்துகொள்வதற்கும்,

பரயிச்சை பூர்த்தியாவதற்கும் ஓர் வழியாக, பேற்படுமல்லவா? கருமயோகத்தின்மூலம் மோக்ஷமடையலாமென்று கூறப்படு மிடத்து, கருமம் என்றுலென்ன? கரும வேறு பாடுகளெவை? வேறு வேறுபட்ட கருமங்களைச் செய்ய யார் யார் நியமிக்கப்பட்டுள் ளார்கள் என்ற கேள்விகள் ஓர் பக்ஷம். இன்னொரு பக்ஷம் எல்லா மனிதர்களுமே ஒரேவிதமான கருமத்தைத்தான் செய்யவேண்டுமா? அல்லது கர்மா வேறுபாட்டால் பலன் வேறுபடுமா? என்றவைகள் ஓர் பக்ஷம், இவைகளை நன்கு பரிசோதித்து பதில் தந்திருக்கிறுர் சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி. அவைகள் கீழ்வருமாறு:—

“குணகர்ம பேதங்கண்டு குலம் நான்கை படைத்தேனன்”

கர்மத்தையும் அதின் குணத்திலுள்ள பேதங்களைக்கண்டு குணப்பிரிவால் கருமங்களைச்செய்ய ஆற்றலுடைய நான்கு குலத்தை படைத்தேனென்கிறுர். அந்நான்கு குலமும், பிர்மம், க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்று கூறப்படுகின்றது. அறிவு, பலம், பேரம், செய்கை என்ற குணமாக வகுக்கப்படலாம். பிராமணன் கர்மம், அறிவைப்பரப்புதல், க்ஷத்திரிய கர்மம்' பலத்தால் ஸ்தாபிக்கப்படல், வைசிய கர்மம், பேரம், வியாபாரப் பண்டம் மாற்றல் மூலமும், சூத்திரகர்மம், உற்பத்திசெய்தல் என்றதின் மூலமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இந்த நான்கு குணங்களும் ஒன்றுபோல் ஒரே மனிதனிடத்தில் அமைவது கடினம். ஏனெனில் ஒவ்வொரு குணமும் அதினதின் ஸ்தானங் களில் பலமுடையது உற்பத்திசெய்பவன் விற்கப்புறப்பட்டால் உற்பத்திசெய்தல் நின்றுவிடும். விற்பவனே சட்டதிட்டங்கள் அமைக்கும் கர்த்தாவாக அமைந்துவிடின் விற்பனை சக்திகுன்றி அரசாளும் சக்தி ஏற்பட்டுவிடும். அரசாளுபவனே தனக்கு அறிவை தானே கற்பித்துக்கொண்டால் செய்பவையெல்லாம் ஏதேச்சாதிகாரமாய் முடியும். உதாரணமாக இங்கு பிரிட்டிஷ் ஸாம்பிராஜ்யத்தை எடுத்துக்கொள்வோம். பிரிட்டிஷ்க்காரர்கள் இந்தியாவுக்கு முதன் முதலில் வைசியன் வியாபாரியாக வந்தார்கள். வியாபாரியான அவர்கள் ராஜ்யம் ஸ்தாபிக்க காலமேற்பட்டதும் வியாபார தந்திரமே, ராஜ்யபாரம் நடத்த சட்டமாக அமைக்கப்பட் டது எப்படியெனில் ராபர்ட்கிளைவ், உமாச்சண்டின் கடனை சிவப்புத்

தாள், கருப்புமை, காலாவதி என்ற காரணங்களினால் கொடுக்க மறுத்தான். உமாசந்த் கடன் கொடுக்கும்போது ராஜஸ்தானத்தில் ராபர்ட்கிளைவுக்கு கடன் கொடுத்தானே யொழிய வியாபாரி ஸ்தானத்தில் கடன்கொடுக்கவில்லை. இதேபோல்தான் இன்றும் பிரிட்டிஷ் பரிபாலனம் இந்தியாவில் ரூபாய் அணா பைசாவில் இருக்கிறதே யொழிய அறிவுடைத்தோர்களால் தர்ம ஸ்தாபனத்தின்பேரில் நடைபெறவில்லை. ஏனென்றால் வியாபாரியான வைசியன் இராஜ்யம் இப்படியேதான் நடைபெறும். க்ஷத்திரியனொருவன் ராஜ்பத்தை பலத்தினால் ஸ்தாபிக்கலாமேதவிர, பரிபாலன அறிவு பிராமணனிடம் கற்று சூத்திரர்கள்மூலம் விளைபொருள்களாலும், கைத்தொழில்களாலும் நாட்டின் செல்வத்தை பெருக்கியும், வைசியர்கள்மூலம் வியாபாரத்தை நடத்தி இவைகளில் தனக்கென்ற ஓர் அம்சத்தை பெற்றால்த்தான் தர்ம பரிபாலனமேற்படும். அரசன் அறிவு கற்பிக்கும் பிராமணனை சார்ந்தவனாயோ அல்லது வியாபாரியைச் சார்ந்தவனாயோ அல்லது உற்பத்திசெய்யும் சூத்திர ஜாதியை சார்ந்தோ தனிநிலையில் நிற்கக்கூடாது. எல்லா வர்ணத்தாருக்கும் பொதுவிலிருக்கவேண்டும். பிரிட்டிஷ் ராஜாங்கம் வியாபாரி ராஜாங்கமாயிருப்பதால்த்தான் வியாபாரிகளின் பொருட்டு உற்பத்திசெய்யும் ஜாதியாரான சூத்திரர்களை (Labour) லேபரர்களை கஷ்டப்படுத்துகிறார்கள். அதேபோல் மத போதகர்களுக்கும் கஷ்டம் விளைவிக்கிறார்கள்.

"மாசி நிலவும் மதியாதார் முற்றமும்
வேசியுறவும் வியாபாரி நேசமும்"

தகாது என்று கூறப்பட்டிருக்கிறது. இவைபோன்ற உதாரணங்களினால் நாம் அறியத்தக்கவைகள் என்ன என்று யோஜிக்கும்போது பகவான் கூறுவதுபோல் நான்கு குலமும் தனித் தனியே தொழில் புரிந்தால்த்தான் சத்தியமான பரிபாலனம் உலகத்தில் நடைபெறும். மேலும் இந்நான்கு குலமும் ஒன்றிர்க்கொன்று விரோதப்பட்டால்

"குணத்தில் கூடா நானும் குறிப்பில் பற்றற்றனென
க்ஷணத்திலென்னை யறிவாய் செய்கர்த்தா நானே யென்று"

என்று கூறும் பகவான் வாக்கை நன்கு கெவனிக்கவேண்டும். தான் குணத்தில் கூடாமல் நின்றுகொண்டும் குறிப்பில் பற்று அற்றவனென்றும் கூறுகின்றார். மேலும் இவைகளுக்கெல்லாம் தானே கர்த்தா யென்கிறார். குணத்தை கூட்டியோ அல்லது குறைத்தோ அமைக்கமுடியாது. அவரவர்கள் ஆகாரம், தபஸ், சரீரவன்மை, ஆத்மபலம், இவைகளைப் பொறுத்துதான் குணமமையும். குணமமைகின்றபடிதான் குலமுமமையும். சூத்திரர்கள் தன் சரீரவலுவினாலும் ஆகாரத்தை பொருத்தும் புத்தி நுட்பமேற்பட்டு அதற்குத் த தந்த நிலையை யடைகிறார்கள். அவர்கள் பிராமணர்கள்போல் உண்டும், உடுத்தும், நினைக்கவும் புறப்படுவார்களானாலும் சாத்தியம் ஒரு சிலருக்கு முடியுமேதவிர பெரும்பாலோர்களுக்கு முடியாத நிலையேர்ப்படும். மேலும் அப்படி சிலர்கள் செய்யப்புறப்பட்டாலும் உண்மையில் அவர்கள் நினைவில் ஒன்றைப்போல் செய்வதாகத்தான் செய்யும் பாவமும் ஏற்படமாவிருது. ஒரு தலைமுறையில் அனுஷ்டிக்கப்படும் ஆசாரம் மறுதலை முறையில்த்தான் தனதென்றேற்படும். ஆகவே தான்பிறந்ததாயுள்ள ஜன்மத்தின் செய்கை வினாகி அந்நிய தர்மத்தை யனுசரிப்பதாலுள்ள, வீண் கஷ்டங்களுக்குள்ளான லாபத்தைத்தவிர வேறு லாபமென்ன இவனடையப்போகிறான் ஒன்றுமேயில்லை. மேலும் கீதாசாரியன் குறிப்பிடுவதுபோல் நான்கு வர்ணங்களில் பிறந்திருக்கும் மனிதவர்க்கத்திற்கு பிரத்யேகம் பிரத்யேகம் மோக்ஷமுண்டென்றோ அல்லது பிராமணர்களுக்கு மட்டுந்தான் மோக்ஷமென்றோ க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் இவர்களில் ஒரு வர்க்கத்தாருக்குத்தான் மோக்ஷமென்றோ பகவான் சொல்லுகிறாரா இல்லவே இல்லை. “குணத்தில் கூடா நான் குறிப்பில் பற்று அற்றனென” என்று குறிப்பிடுகின்றார். ஆதலால் தங்கள் தங்கள் வருண தருமங்களை அனுசரிப்பதாலேயே மோக்ஷ நிச்சியம், கூறப்படுகிறது. பிர்ம்மமென்ற கோயிலுக்கு நாலு வாயில்கள். நாலுவாயில்களும் பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர என்று கூறப்படுகின்றது. நாலுவாயில்களும் பிர்ம்ம சுரூபத்தையடையச் செய்யும். அந்தந்த வாயில்களில் நிற்போர்கள் அப்படி அப்படியே உட்புகுந்துவிட்டால் சீக்கிரம் பிர்ம்மத்தையடைந்து விடலாம். அதைவிட்டு விட்டு பிராமணன், சூத்திரர்கள், வாயில்கள் சீக்கிரம் கொண்டுவிடு

மென்றோ அல்லது மாறிமாறி ஒருவருக்கொருவர் மாற்று வாயில்கள் வழியாக புக எத்னிக்கவேண்டாம். மேற்கண்ட யத்னகாலம் வீண் கால விரையமாகும் என்பதை குறிப்பிடவே பகவான்

"க்ஷணத்திலென்னை யறிவாய், செய்கர்த்தா நானே என்று"

எல்லாவற்றிற்கும் செய்கர்த்தாவான என்னை க்ஷணத்திலறிய முற்படு, என்கிறார்.

ஆகவே உலகத்திற்கும் ஜீவதாரமாயிருப்பவன் தானென்றும் ஜீவர்களெல்லோரும் தன்னையடைய வழிதேட வேண்டுமென்றும் அப்படி தேடும் வழியில் இந்த கர்மயோகம் வெகு சுலபமானதென்றும் எடுத்துக்காட்டுகின்றார். உலகத்தில் கர்மயோகம் எப்படி சுலபமாகமுடியும் என்பதை உணர்த்தவே

"நிஷ்காம கருமத்தின் நியதிதனை இயம்புகின்றேன்
நிஷ்டையிரண்டாலும் நீ முக்தி பெறுவதற்கே
கஷ்டமதில்லை யிதில் காண்மபா உந்தனுக்கு
இஷ்டமுடன் கேளென்றான் யசோதை புத்திரனும்"

நிஷ்காம கருமத்தை யனுசரிப்பவர்களுக்கு கஷ்டமதிகமில்லை யென்கிறார். ஏனென்றால் உலகத்தில் சரீரம் வேண்டுமாசையை கூட, நீ வெறுக்கவேண்டும். பெண்டுபிள்ளைகள், தனம், தான்யம், வீடு முதலிய எல்லாவற்றையும் ஒழித்துக்கொண்டு, சன்யாசியானால்தான் மோக்ஷம் கிடைக்குமென்ற கொள்கையை தள்ளிவிட்டு தானே தானே உலகபற்றில் தன் சரீர திடகாத்திரம் வேண்டி பிரயத்னம் செய்யும் கர்மம் செய்துகொண்டும், அதுபோல் வீட்டிலிருந்துகொண்டே மிதமாக எல்லாவற்றையும் உலக யியற்கையிலிருந்து பெற்றுக்கொண்டும் தன்வீட்டை நடத்தும் ஓர் கிரகஸ்தனுக்கும் மோக்ஷவழியின் சுலபத்தை காட்டும் வழியை யார்தான் பின்பற்றமாட்டார்கள்? ஆதலால்

"விஷய நினைவுடனே வேண்டும் கருமம் விட்டாலும்
விஷம தன்றறிவாய் விவேகமிலச் செய்கை"

செய்யவேண்டிய கருமங்களை, ஆசையை முன்னிட்டு விட்டா லும், விவேகமில்லை. அச்செய்கை, இங்கு அர்ச்சுனன் தன், சுதர்ம மான யுத்தம் செய்தலை நிறுத்துகின்றேன் என்கிறான். ஏன் தனக்கும் சந்தோஷம்தரத்தக்க பெந்துமித்திரர்கள் கொல்லப் படாமல் தடுப்பதற்கு. தனக்கு சந்தோஷம்வரும், ஆதலால் சுதர்மம் என்ற தன் கர்மத்தைவிடலும் விவேகமில்லாதது என்று குறிப்பிடு கின்றார். மேலும் தனக்கு சந்தோஷமோ, துக்கமோ, லாபமோ, நஷ்டமோ, என்றதான விஷயங்களின் நினைவை விலக்கி, நிஷ்காம கருமமென்ற ஞானத்துடன் செய்யப்படும் கருமமே, மோக்ஷ மளிக்கவல்லது என்று குறிப்பிடப்படுகிறது.

ஆகவே கீதாசாரியனை பகவான் கூறுவதுபோல் மனிதர்கள் மோக்ஷமடைய அதாவது, ஜனன துன்பம், மரண துன்பம் நீங்க பிறப்பு, இறப்பு இரண்டும் ஒழிய. மோக்ஷம்வேண்டும்.

அம்மோக்ஷத்தை எல்லா ஜீவர்களும் அடையவிரும்புவது சகஜம். விரும்பவும்வேண்டும். அதற்குத் தகுந்த உபாயம் அவரவர் கள் தங்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்துகொண்டே ஆசை, மோஹம், துவேஷம் முதலியவைகளில் ஈடுபடாமல் நிஷ்காம கருமத்தை செய்துகொண்டுபோதல் நன்று.

நிஷ்காம கர்மம் என்றால் யாதொரு லாபத்தையுமடைய இச்சியாத செய்கை. ஆனால் மோக்ஷமென்ற இச்சையை யடை வதற்கு பிரயத்னம் செய்யும்போது மோக்ஷமென்ற ஆசை ஏற்படு கின்றதல்லா? அது நிஷ்காம கர்மத்திற்கு எதிரிடையாகவல்லவோ நினைக்கப்படவேண்டும்? என்ற கேள்விபிறக்க ஆசை என்பது சரீரத்தாலடையவேண்டிய உணர்ச்சி. அதாவது சரீரம் இந்திரியங் களின் நுகர்ச்சி பெறுவது. இங்கு மோக்ஷமென்பது ஆத்மா நித்ய நிலையில் அடையும் உணர்ச்சி, சரீர உணர்ச்சி, நித்யமில்லாதது அழியத்தக்கது. அதில் உணர்ச்சிகொள்ளும் ஆசை கடைசியில் அழிந்துபோவது. ஆத்ம உணர்ச்சியடைய மோக்ஷமென்பது ஆனந்த பரிதமானது. நித்ய நிலையடைவது என்பதாயிருப்பதால் நிஷ்காம கர்மத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லையென கொள்ள வேண்டும். மேலும் இங்கு செய்யப்படும் கருமமெல்லாம் சரீரத்

தோடு கூடிய ஜீவனால்செய்யப்படும் கர்மம். இக்கர்மம் நிர் ஆசை யோடு கூடியதாயிருக்கவேண்டுமென்றும் மோக்ஷமடைதல் என்ற கர்மம் ஆத்மலாபத்தை உத்தேசித்து செய்யப்படும் நினைவு சம்பந்த மானது.

2-வது அத்தியாயம் 49-வது பாவில்

அடங்காத யிந்திரியங்கள் அலைகடல் காற்றேயென
நடங்காமல் கப்பல்தனை தாக்கியே செல்வதுபோல்
மடங்காமல் மனதையது மாறியிழுக்கும் தன்மைகண்டு
இடங்கொடாமலிம்மனதை ஏற்றத்தில் வைத்திருப்பாய்நீ

அலையோடு கூடின கடலில் கப்பலை காற்றானது தாக்கி தன் இஷ்டம்போல் ஓட்டிச்செல்வதுபோல் உன் மனதையுமிங்கு இந் திரியங்கள் தன்னிஷ்டம்போல் கொண்டுபோகும் ஆதலால் நீ இந் திரியவசப்படாமல் மனதை எப்போதும் ஏற்றத்தில் வைத்திருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது. இவைகளை எல்லாம் முற்றிலும் ஆலோஜிக்குமிடத்து மனிதனுக்கு அவன் பிறந்தது முதல் தான் சௌக்யமடைய விரும்புவானானால் தன்முன் காணும் தீர்க்க முடியாத சம்பவங்களையெல்லாம் நினைத்து நினைத்து துன்பமடை யாமல் பகவான் கூறுவதுபோல் இகத்தில் சௌக்கியத்தையடைய விரும்பி நிஷ்காம்மிய கருமத்தை செய்யவேண்டும். நிஷ்காம்மிய மென்றால் உன் சரீர தாரணைக்குவேண்டிய காமிய கருமங்களை செய்யலாம் என்றும் அதிக ஆசை அதிக மோஹம் இவைகளே நிஷ்காமிய கருமத்தை தடுப்பவை என்றும் சொல்லியிருக்கின்றார்.

4-வது அத்தியாயம் 18-வது பாவில்

"மனதிலிந்திரியங்களை மடியாமலடக்கியோனும்
தனமது சேர்த்தல்தனை தவிர்த்துமே நிற்போனும்
தினசரி வாழ்விற்காக சிறுதனம் சேர்ப்போனும்
இனத்தில் கர்மம்செய்யினும் இவன் கர்மம் செய்தானா
[கான்"

ஆகையால் தினவாழ்விர்க்காக பணம் சேகரித்தலை நிஷ்காமிய கருமமல்லவென்று பகவான் தடுக்கவில்லை. ஆதலால் இகத்தில் வாழ்க்கையும் சரியானமுறையில் நடத்தி மோக்ஷத்தை யடைவதற் குறிய வழியையும் தேடிக்கொள் என்கிறார். இவைகளை எல்லாம்

ஷன்றிபடிக்குமொருவன் பகவத் கீதையை பிரவர்த்தி மார்க்கத் திலும் நிவிர்த்தி போதிக்கும் கிரந்தமென கொள்ளல்வேண்டும். கேவலம் மோக்ஷத்தை விரும்பும் ஒருவன் இகத்தில் சகல கஷ்டங் களுக்குறிய ஸாதனங்களை செய்யவேண்டுமென்றும் அப்படி செய் தால்தான் மோக்ஷவாயில் திறக்குமென சொல்லுதல் அறிவுடை யார்கள் ஒப்புக்கொள்ளாத நிலையில்தான் நிற்கும். உதாரணமாக இயேசு கிருஸ்துவின் மதத்தை யனுசரிக்கும் கிருஸ்துவர்கள் கிருஸ் துவின் உபதேசங்களின்படி நடக்க முற்படுவார்களானல் முடியா மையேதான் நடந்தேறும் அன்றேல் ஜனத்தொகையில் 1, 2 பேர்கள் நடந்து காட்டமுடியும். கிருஸ்து சொல்வதுபோல் தன் உயிரை மாய்த்துக்கொண்ட கிருஸ்தவர்கள் எத்தனை பேர் உலகத்தில் இருந்தார்கள். ஒரு சிறு லாபத்திற்காக உலக ஜனங்கள் முழுவதை யும் கஷ்டத்திற்குள்ளாக்கத் தயாராயிருக்கின்றார்கள் கிருஸ்தவக் கூட்டத்தார்கள். இதேபோல் மேலான தத்துவங்களையும், ஸாத்திய மில்லாத தத்துவங்களையும் மனித உலகுக்குச் சொல்லும் எந்த மத மும் அதிக நாள் உன்னத நிலையில் இருந்ததில்லை. மேலும் மகம் மதிய மதத்தின் உன்னத லெக்ஷியங்களெல்லாம் கீதையின் 6-வது அத்தியாயத்தில் கூறுபவையேயாகும். அவர்களின் தொழுகை முறையே அப்பியாச யோகமாகும். மேலும் பணத்திற்கு வட்டி வாங்குவதே பாபமென்றும், சமத்துவம், சகோதரத்துவம், சமதர் சனம் இவைகளெல்லாம் மஹம்மதிய மதத்தின் உன்னத லெக்ஷியங் கள் இவைமட்டிலும் மனித சமூகத்திற்கு போதுமா? இதிலும் உத்தம லெக்ஷியங்கள் இல்லையா என்று கேள்வி பிறக்குமிடத்து இருக்கின்றது என்று கூறலாம். ஆனல் ஒரு மதத்தார் எல்லா உன் னத லெக்ஷியங்களையும் அவலம்பித்து ஸாத்தியப்படுதல் முடியாத காரியம். மஹம்மதிய மதத்தின் உன்னத லெக்ஷியம், எளிய வாழ்க்கை. எளிய வாழ்க்கையென சொல்லிவிட்டால் போதுமா பணம் அகஸ்மாத்தாய் சேர்ந்தாலும் பணத்திற்கு வட்டிவாங்குதல் மகாபாபம், என்று கூறப்பட்டிருக்கின்றது. இந்த உன்னத லெக்ஷி யத்தில் நடப்பவர்கள் எத்தனைபேர் ஒன்று இரண்டுபேர்கள் இருக்கலாம். ஓர் மதத்தின் லக்ஷிடம் ஒன்று இரண்டுபேர்களால் மட்டும் அனுஷ்டிக்கப்பட்டால் போதுமா ஒன்று இரண்டுபேர் களுடைய பரதன்மைக்காக பலபேர்களடங்கிய ஜனசமூகம் இக

சுகத்தை வெறுக்கமுடியுமா அல்லது அதுவும் தர்மம் ஆகுமா இவைகளையெல்லாம் ஆலோஜிக்கவேண்டும். உண்மையை தெரிந்து கண்டுபிடிக்க முயலுபவன் இதுபோன்ற தர்மங்களுக்கு செவி சாய்க்கமாட்டான். ஆதலால் ஸாத்தியமானவரை மனிதர்களுடைய இடம், பொருள், ஏவல் அறிந்து மதம் அமைத்துகொளல் நன்று. அப்படி ஏதேனும் தேசத்தார்கள் தங்கள் தங்கள் சீதோஷ்ணத்திற்கு தகுந்தபடி ஓர்முறையை அமைத்துகொண்டு முக்கியமாக கடவுளை தொழுதல் என்ற இடத்தில் பக்தியோடு இருப்பார்களானால் அவர்களையும் நம் இலக்ஷியத்தை சேர்ந்தவர்களென ஆதரிக்கவேண்டும். அதைவிட்டு விட்டு நான் சொல்லும் மார்க்கமே மார்க்கம், என்மதமே பெரிது, என்மதத்தைச் சாராதார் பாபிகளென்றும் கப்பீர்களென்றும் சொல்லித்திரிவதில் பிரயோஜனமுண்டாகாது. அது சமத்துவ சகோதரத்துவ திருஷ்டியுமாகாது.

ஆதலால் இன்று ஹிந்துமதம் என்ற பெயரையுடைய ஸநாதன மதம். உலகத்தில் உள்ள எல்லா மதஸ்தர்களையும் தன் கொள்கை அதாவது "ஸர்வே ஜனாசுகினோபவந்து" எல்லா ஜனங்களும் சுகமாக இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்ட உத்தம லெக்ஷியமெங்கே என் வழிக்குவா இல்லாவிட்டால் நீ பாபி என்று சொல்லப்பட்ட மதம் எங்கே. உத்தம லெக்ஷியத்தையடைய விரும்புமொருவன் உன் மார்க்கம் சரியில்லை. நான் போகும் மார்க்கமே சரியென்று ஒருவன் கூறதலைபட்டால் தன் மார்க்கந்தான் சரியென்பதையாவது அவன் பரிபூரணமாய் தெரிந்து கொண்டிருக்கவேண்டாமா. பலனை அனுபவித்துயிருக்க வேண்டாமா பலனை அனுபவிக்காதயிடத்து பலன் அனுபவிப்பேன் என்ற வருங்கால சொல்லில் என்ன உண்மையிருக்க போகின்றது. "நானும் பலனை யனுபவிப்பேன் என்று தானே என்மார்க்கத்தில் போகிறேன் ஆதலால் நீ என்னிலும் தெரிந்தவனென்று உன்னை பின்பற்ற போதியவை உன்னிடமில்லை" என்று கூறிவிட்டால் முன் சொன்னவன் கெதியென்ன. இவைகளையெல்லாம் மத போதகர்கள் தீர்க்க ஆலோஜிக்க வேண்டும்; சில மதங்கள் அவரவர்கள் தேசத்தில் உண்டான அராஜகத்தை போக்கி விடுதலையை ஜனங்களுக்கு கொடுக்க ஏற்பட்டிருக்கலாம். அப்படி விடுதலையடைய ஜயம் தந்ததினால்மட்டும்

அந்த மதக்கொள்கை மோக்ஷமும் தரத்தக்கதென கொள்ளல் கூடாது. முக்கியமாக இப்போது மஹாத்மா காந்தியால் போதிக்கப் படும் அஹிம்ஸா தர்மத்தை எடுத்துக்கொள்வோம். காலத்தை உத்தேசித்து இத்தர்மம் இப்போது ஒருவித ஜயமளிக்கலாம். அதினால் இதே அஹிம்ஸா தர்மந்தான் மோக்ஷமளிக்கும் இதை தவிர வேறுமார்க்கமே கிடையாது. மற்ற மார்க்கத்தில் நடப்பவர் கள் அவிவிவேகிகள் என்று கூறதலைப்பட்டுவிட்டால் இந்த காந்தி மதமும், கிருஸ்துவ மகம்மதிய மதம்போல் ஓர் மதமாகுமேதவிர உத்தமலக்ஷியத்திற்கு ஒத்ததாக அமையாது.

உலகத்தில் பிறந்த மக்கள் உலகானுபவத்தில் தான் பிழைத் திருப்பதற்காகச் செய்யவேண்டியதை செய்துதான் ஆகவேண்டும். முதன் முதலில் ஜனனத்தையே எடுத்துக்கொள்வோம். ஜன்ன மென்பது தாயார் வயிற்றிலிருந்து விடுபடுவது சிசு ஜனிக்கும் போதும் கஷ்டமடைகின்றது, ஜனனமாகும் சிசுவை பிரஸவிக்கும் தாயாரும் கஷ்டபடைகின்றாள். ஹிம்ஸையடைகின்றாள். இந்த ஹிம்ஸைக்கு காரணம் ஸ்திரீபுருஷ சேர்க்கை; ஆரம்பத்தில் இரு வருக்கும் இன்பத்தையளித்தாலும் பெண்பாலான தாய் குழந்தை பிரஸவிக்குமிடத்து ஹிம்ஸைதானடைகின்றாள். இந்த ஹிம் ஸையைத்தடுக்க அஹிம்ஸை கைகொள்ளுதல்முடியுமா ஸாத்தியமா ஸாத்தியமானால் இவ்வளவு தூரம் கைகூடும். இவைபற்றி ஆலோஜித் தால் நமது ஜனனமே ஹிம்ஸா பூர்வமானதுஎன கொள்ளவேண்டும்.

## நமது ஜீவிதமே ஓரளவு ஹிம்ஸையுடன் கூடினது.

பகவத் கீதை 3-வது அத்தியாயம் 1-வது பாவில் அர்ச்சுனன் கேட்கிறான்.

ஞானமே கருமத்தினும் சிரேஷ்டமென
நியாயமே ஜனார்த்தன தாமுரைத்தல்
ஈனமிரக்கமிலாயிப் பிராணி ஹிம்ஸை
இக்ஷணமே இங்குசெய்யும் கருமமதை
எனய்யா ஏவுகின்றீர்
எக்காரணம் கொண்டுரிதைசொல்லும்
மானம் பெரிதென்றுரைக்கும் மதுசூதா
மோக்ஷம் நல்கவகைமேதென்றான்.

ஞானம் சிரேஷ்டம் என்று சொல்லிவிட்டு பிராணி ஹிம்ஸையோடு கூடின யுத்தத்தை செய்ய தூண்டும் காரணமென்னவென்று பகவானை அர்ச்சுனன் கேட்பதற்கு பகவான் சொல்லும் பதிலை கெவனிக்கவேண்டும்.

மக்கள் சமூகத்திற்கும் மற்ற பசுபக்ஷியாதி சமூகத்திற்கும் வித்தியாசம் கவனிக்கவேண்டும். பசுபக்ஷியாதி சமூகங்கள் இயற்கையில் தங்கள் தங்கள் ஆகாரவஸ்துக்களை தேடிக்கொள்வதற்கும் தங்கள் இயற்கையை விருத்திசெய்துகொள்வதற்குமட்டும் ஓர்வித அன்புடன் யிணைக்கப்பட்டு வாழ்ந்துவருகின்றது. மனித சிருஷ்டி மேற்கண்ட அன்போடுகூடி விசேஷமாக அறிவுஎன்ற பாகத்துடனும், சிருஷ்டிக்குள்பட்ட உலகத்தில் காணும் எல்லா சிருஷ்டி வஸ்துக்களையும் அடக்கியாளும் சக்தியையும் தந்து சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. இந்நிலையில் இம்மனித கூட்டம் தங்கள் இனத்தார்களையே ஹிம்ஸாபூர்வமாக அடக்கியாண்டும்வருகிறது. ஆகவே மனிதனுக்கு கடவுளால் தனக்கு விசேஷமாக அளிக்கப்பட்டிருக்கும் அறிவினால் தன்னையும் கஷ்டப்படுத்திக்கொண்டு தன் இனத்தார்களையும் ஹிம்ஸித்துவருகிறான். அப்படிப்பட்ட ஹிம்ஸையை அஹிம்ஸை மூலமாக போக்கலாமா, முடியுமாஎன்றதோர் கேள்வி பிறக்க யூதகூட்டத்தார்கள் பலம் ஜாஸ்தியாக பெற்றிருந்தயிடத்து தங்கள் தங்கள் கஷ்டத்தை அஹிம்ஸாமூலமாக தீர்த்துக்கொள்ள மஹான் இயேசு கிருஸ்து முற்பட்டார். யூதர்களின் கொடுமை இயேசு கிருஸ்துவை சிலுவையில் உயிர் துறக்கச்செய்வதில் முடிந்தது.

பின்னால் மஹம்மதுநபி எதிரிகளை கொன்றுதான் வெற்றி பெற வேண்டுமென்று எதிரிகளோடு போர்நடத்தி வெற்றி கொண்டார். ஹிம்ஸாமூலம் ஜயமடைந்து ஆசியாகண்டம் ஐரோப்பா கண்டம் முழுவதும் ஒருவாறு அவர்கள் ஆக்ஷிபெருகிற்று.

பிறகு கிருஸ்துவர்கள் கிருஸ்துவ உபதேச அஹிம்ஸையை தவிர்த்து ஹிம்ஸா பூர்வமாக யுத்தம் செய்யத்தொடங்கினதில் தங்கள் ஆதிக்கத்தை உலகம் பூராவும் நிலை நாட்டியிருக்கிறார்கள். இங்கு ஹிம்ஸை ஹிம்ஸையையும் வென்றிருக்கிறது.

அராஜக மொழிய ஏற்பட்ட மதங்களின் வாழ்க்கை இங்கு குறிப்பிடப்பட்டது. ஆகவே மதம் ஆத்ம உணர்ச்சிபற்றினது. கடவுளுக்கும் தனி மனிதனுக்கும் ஏற்படும் உணர்ச்சி. இந்த உணர்ச்சியை தனி மனிதன் தனித்தனியாக அனுபவிக்க கூடுமே தவிர கூட்டம் கூட்டமாக அனுபவித்தல் ஸாத்தியமில்லை. ஆதலால் ஒவ்வொரு தனி மனிதன் வாழ்க்கையும், செய்கையும் கடவுளின் அறிவுக்கு எட்டும் என்ற எண்ணத்தோடு மனிதன் நற்செய்கையை செய்துகொண்டு போகவேண்டும். அப்படிப்பட்ட நிலையை அடைவதற்கு உத்தம மார்க்கம், "நிஷ்காம கர்மம்" இகத்திலும் பரத்திலும் பலன் தருவது என்பது நிச்சியம்.

ஆகவே மதத்தின் உண்மையான தத்துவம் கடவுளை தேடுதலோடு இகத்தில் மனிதசமூகத்திற்கு மட்டிலுமல்ல மற்ற பசு பக்ஷியாதி இனங்களுக்கும் நன்மையை செய்துகொண்டும், இகத்தில் நல்வாழ்க்கையையும் தேடித்தரத்தக்கதாயிருக்க வேண்டும்.

மேற்சொன்னவைகளை யடைவதற்கு சுலபமான மார்க்கம் இகத்தில் நிஷ்காம கர்மத்தோடு, உலகத்தோடு ஒட்ட ஒழுகல்தான் என்பதை யறிந்தோர்களாய் பகவான் சொல்வதுபோல் அந்தந்த ஸ்தானத்திலேயே அவரவர்களிருந்துகொண்டு மோக்ஷமடைய வழியையும் தேடிக்கொள்ள வேண்டியது.

இங்கு கிருஸ்துவர்களாகட்டும் மகம்மதியர்களாகட்டும் நிஷ்காம கருமம் செய்துகொண்டு, அவரவர்கள் மதபோதனைப்படி உத்தம லெக்ஷியத்தை யடைவதிலிருந்தும் தடுக்கப்படவில்லையென்பதையும் தெரிவித்துக்கொள்வதோடு, இந்தியாவில் வாழும் ஒவ்வொருவரும் ஹிந்துக்கள்தான் என்றும், அவர்கள் பின்காலத்தில் கிருஸ்து, மகம்மதிய, ஸீக்கிய, ஜயின, புத்த, சைவ, வைஷ்ணவ, சாக்த முதலான எல்லாவித மத தத்துவங்களை யனுசரித்தாலும் தெய்வம் உண்டென்றும், தெய்வம் வழிபடல் என்ற தத்துவத்தை ஒப்புகொண்டவர்களாயிருப்பதால் எல்லோரும் ஹிந்துவே. ஹிந்து என்றால் இந்தியாவில் வசிப்பவன் ஆஸ்திகன் என்றுதான் அர்த்தப்படும். ஆதலால் இந்தியத் தாயின் மக்களான எல்லா கிருஸ்து, மகம்மதிய, புத்தர் முதலான வகுப்பார்களும் ஹிந்து வகுப்பில் பின்னப்பட்ட பல வகுப்பாரும் ஒற்றுமையுடன் சகோதர தத்துவத்தை உலகில் பரப்பி நன்மையுடன் வாழ்வோமாக.

கருமயோக தோகுத்துரை முற்றிற்று.

கீதா பிரசங்க சம்பந்தமாக

## மஹரேஷி கிருஷ்ணஜி.

29–9–40ல் கோயம்புத்தூர் ஸ்ரீ S. E. நாராயண் ஹிந்து மிஷின் ஆர்கனைஸரைக்கண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

30–9–40ல் கோயம்புத்தூர் ஹரிஜன ஹாஸ்டலில் ஹாஸ்டல் மாணவர்களுக்கு பக்தியும் கீதையுமென்ற விஷயம்பற்றி பிரசங்கம் செய்தார்கள். மாணவர்கள் 50-பேர்களுடன் ஹரிஜன ஹாஸ்டல் தலைவர், ஸ்வாமிஜியும் பிரஸன்னமாயிருந்தார்கள். ஸ்வாமிஜியின் முடிவுரையோடு பிரசங்கம் முடிவுபெற்றது.

ஸ்ரீ T. K. சேஷாத்திரியவர்கள் Y. M. C. A.
(கோயம்புத்தூர்.)

எழுதுகின்றார். 2—10—40.

"தமிழில், பகவத் கீதையின் மகிமையைத் தந்த. தங்களையும் இக்காலத்திய ஓர் மஹானென்றே கருதவேண்டும். கடவுளின் தூதனாகிய தாம் எனக்கு அருளுவது யாது, தங்களை பக்தியோடு நமஸ்கரிக்கிறேன்."

சந்தா பணம் செலுத்தியும் இந்த பகவத் கீதை வெளியீடுகளை வாங்கியும் ஆதரித்துவரும் நண்பர்களுக்கு வந்தனம். மேலும் தங்கள் நண்பர்களையும் மெம்பர்களாகச் சேரும்படி வாக்குதவிசெய்ய கேட்டுக்கொள்ளுகிறேன்.

தங்கள், கிருஷ்ணஜி.

சந்தாதார்கள் தாங்கள் செலுத்தவேண்டிய பாக்கியை செலுத்த கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இனி பகவான் கூறுவதை 7-வது அத்தியாயத்தில் படிப்போமாக.



# பகவத் கீதை.

7, 8 அத்தியாயங்கள்.

பாக்கள், விரித்துரை.



ஆக்கியோன்,

மஹரெஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி

All Rights Reserved.) 1940. (விலை அணா. 4

---

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2-8-0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## பக்தி யோகம் 7-வது அத்தியாயம்.

இந்தியாவில் மதஉணர்ச்சியை, கடவுளைத்தேடும் மார்க்கமாகவே கொண்டார்களேதவிர மதத்தின்பேரால் இராஜ்யம் ஸ்தாபிக்க விரும்பவில்லை. ஆதலால் எல்லாமதஸ்தர்களும் அதாவது கடவுளை தேடுபவர்களும், அவரவர்கள் புத்தி சக்திக்கு தகுந்தபடி முயர்ச்சி செய்துகொண்டுபோனார்கள். நான் இன்ன முயற்சியில் கைதேர்ந்தவன் ஆதலால் பரிபாலனத்தில் எனக்கு அதிகபங்குண்டென்று கேட்க, ஒருவரும் தனிகௌரவம்கொண்டாடி கொள்ளமுடியாத நிலையிருந்தது. புத்தமதம் தோன்றியகாலத்தும் ஜயினமதம் தோன்றிய காலத்தும் இவ்விதம் அரசாக்ஷியில் பங்கு ஜாஸ்தியாக எடுத்துக்கொள்ளும் சக்தியை ஜாஸ்தியாக எடுத்துக்கொண்டது. இதுபோன்ற செய்கைகள் ஹிந்துக்கள் நாகரீகத்திற்கு ஒவ்வாததாயிருந்தால் ஹிந்துக்களிடையிலேயே புத்த ஜயினமதம் அடங்கி ஒன்றுபட்டுவிட்டது. மஹம்மதியமதம்தான், பிறகு இந்தியாவில் இராஜ்யபரிபாலனத்தில் மதத்தின்பேரால் அதிகபங்குகேட்டது அதுவும் நாளடைவில் சாத்தியமில்லைஎன்று கண்டு ஹிந்துமதத்திலே மஹம்மதியமதம் ஒடுக்கம்கொண்டுவிட்டது. இதுபோல்தான் கிருஸ்துவ ஆதிக்கமும், மதம்என்றபேரால் அரசாளும் சக்தியை பெருக்கிகொண்டதில் பயனில்லைஎன்று கண்டுவருகிறது. இவைகளிலிருந்து நாம் தெரிந்துக்கொள்ளதக்கவைகள், இந்தியாவில் ஹிமயமலை முதல் கன்யாகுமாரிவரை கிடக்கும் நாடு, மதத்தை கடவுளை தேடும்மார்க்கத்திற்கு உபயோகப்படுத்திகொள்ளலாமே தவிர இகத்தில் ஆசையைபெருக்கி அரசாளும் சக்தியை கிரஹிக்க துர்வினியோகப்படுத்தகூடாது என்ற தர்மத்தை இதுவரை நிலைநாட்டியிருக்கிறது. நாட்டிகொண்டுமிருக்கிறது. ஆதலால் ஹிந்துக்கள்என்றால் இந்தியாவில்வாழும் மனிதர்கள் என்றும் அவர்கள் எந்த மதத்தை சேர்ந்தவர்களாயிருப்பினும் உலக ஆசை விஷயத்தில் மதத்தை உபயோகப்படுத்திகொள்ளகூடாதென்ற தர்மத்தையே யறிந்துமிருக்கிறது.

உலகத்தில் மற்ற பாகத்திலிருக்கும் மஹம்மதியர்களுக்கும், கிருஸ்துவர்களுக்கும் இந்தியாவிலிருக்கும் மஹம்மதிய கிருஸ்துவர்களுக்கும் மனபோக்கில் அதிகவித்தியாசமுண்டு. இந்திய மகம்மதியர். இந்திய கிருஸ்துவர். இந்திய ஹிந்துக்கள். எல்லாரும் ஹிந்துக்களே அதாவது முக்கிய தர்மம், "மதமென்பது கடவுளைத் தேட அலையும் ஓர்மார்க்கமெனவே கொள்பவர்கள்" இந்த உத்தம லெக்ஷியமுடையவர்களுக்கு மதப்பூசல்களுக்கு இடமேயில்லை. ஆதலால்தான் இந்தியாவில் மசூதி, கோயில், சர்ச் இவைகளெல்லாம் அருகிலருகிலேயே கட்டப்பட்டிருக்கின்றது. மகம்மதியர் கிருஸ்துவ பெரியார்களையும், கிருஸ்துவர் மகம்மதிய பெரியார்களையும் இவ்விருபேர்களும், ஹிந்து பெரியார்களையும் அதைபோல் ஹிந்துபெரியார்கள் பரஸ்பரம் ஒவ்வொரு பெரியார்களையும் நேசத்தோடு கௌரவித்து வருகிறார்கள். ஆனால் ஹிந்துமகம்மதியச் சச்சரவு வட இந்தியாவில் ஏற்படுகின்றதேஎன்ற கேள்வி பிறக்கலாம். இவைகள் அதிகப்படுத்தி திருத்திகூறபவைகள். கிருஸ்துவர்களில் இருவகுப்பார்கள் சண்டை அடிபுடிகள் இல்லையா? மகம்மதியர்களில் அதுபோல் ஏற்படவில்லையா? இவைகளெல்லாம் மதத்தின்பேரால் உண்டாவதுயில்லை தனிமனிதனின் மனக்சப்பின்பேராலும் வேறு பலகாரணங்களாலும் உண்டானவையென்று கொள்ளவேண்டும். மேலும் இன்றைபதினம் ஹிந்துஎன அழைக்கப்படும் ஒரு மதக்கூட்டத்தார். தங்களைத் தாங்களே ஹிந்துஎன்று அழைத்துகொள்ளவில்லை. ஸிந்து நதிபிரதேசத்திற்கு அப்பால்வாழும் ஜனங்களை ஸிந்துக்கள் என்று அழைக்கப்பட்டார்கள் அதேவார்த்தை ஹிந்து என்று மாறிவிட்டது. இப்படி மாற்றியழைப்பதால் நன்மையுண்டா, தீமையுண்டா என்று ஆலோசிக்கவேண்டும். உண்மையையோஜிக்குமிடத்து இந்த ஹிந்துக்கள் என்ற பெயர் கவர்ன்மெண்ட் ரிக்கார்டுகளில் சூழ்ச்சியாக நுழைக்கப்பட்டிருக்கிறது. இன்று இந்தியாவை ஆளுபவர்கள் கிருஸ்துவர்களாகவும், கிருஸ்துவர்களிலும் அன்னிய தேச கிருஸ்துவர்களாகவும் இருப்பதால் இந்தியர்களும் மதம் என்ற பெயரால் வகுப்புவாதம் செய்வார்களென்று தங்களிடமிருக்கும் முக்கியமான இழிவான ஓர்குறையை அன்னியர்களிடம் சுமத்தினார்கள். நமது பூர்விக சநாதனிகளும் இச்சூழ்ச்சியில் மாட்டிக்கொண்டு கஷ்டமடைகின்றார்கள்.

ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு புதுமதங்கள் தனி மனிதர்களால் ஸ்தாபிக்கப்பட்ட காலத்தில் அம்மதத்தை ஒப்புக் கொள்ளாதக் கூட்டத்தார்கள் பலவிதத்திலும் ஹிம்சைக்கு உட் பட்டார்கள். தங்களுடைய அருமையான நம்பிக்கையை காப் பாற்றிக்கொள்ளவும், தன் பரம்பரையை அதே தர்மத்தை அனுஷ்டிக்கச்செய்யவும் நாடு நீங்கி அந்நிய நாடுவந்தார்கள். "எந் நாட்டுக்கு வந்தார்கள் அவர்கள்"? தங்கள் கொள்கைக்கு யாதொரு ஹானியும் ஏற்படாது என்று கண்டுகொண்டநாடு இந்தியா: பாரத நாடு இங்குவந்து நம்மரசர்களாலும், நம் ஜனங்களாலும் ஆதரிக்கப் பட்டார்கள். இன்று கொச்சியில் காணும் ஜூதர்கள் கிருஸ்துவர்கள் மதத்தின்பேருல்செய்த கொடுமைக்கு பயந்து தஞ்சம்புகுந்தவர்கள் அதேபோல் பம்பாயில் காணும் பார்ஸிகள் மகம்மதியர்கள் மதத் தின்பேருல் செய்தகொடுமைக்கு பயந்து தஞ்சம்புகுந்தவர்கள். இவைகளெல்லாம் எந்த லக்ஷியத்தை குறிக்கின்றன. இந்தியாவில் மாறுபட்ட மதஸ்தர்கள் வாழலாம். உண்மையாக அவர்கள் மதம் என்றுல் கடவுளைத்தேடும் மார்க்கந்தான் என்று கண்டுகொண்டார் களானுல், என்பதையே குறிக்கின்றது.

ஆகலால் நமது ஹிந்துசமூகத்தில் மதத்தின்பேருல் "கடவுளை தேடும் மார்க்கத்தின்பேருல்" கடவுள் பக்தியைகொண்ட எல்லா மதத்தார்களையும் அவர்கள் வேறு வேறுப்பட்ட ஆசாரணையுடை யவர்களாயிருப்பினும் தேடும் மார்க்கம் கடவுளை நாடிப்போவ தாயிருந்தால் அவரவர்கள் மார்க்கத்திலேயே அவர்கள் கடவுளை யடையட்டும். அவர்கள் மார்க்கத்தில் தலையிட்டு மனதைகுழப்பி அகங்காரத்தை மேலிடசெய்யாமல் செய்வது நல்லது என்று கண்டு கொண்ட ஓர் காரணத்தையே இங்கு மதப்பூசல்களுக்கு இடமில் லாமல்செய்கிறது. மஹம்மதிய மதம்தோன்றிய காலந்தொட்டு உத்தம இஸ்லாம் நம்மிந்தியாவிலேயே அனுஷ்டிக்கக்கண்டோம். சகல ராஜ்யபாக்கியங்களையும் துறந்து இராஜ்யத்தையே எல்லோருக் கும் தானம்கொடுத்துவிட்டு உத்தம மகம்மதியனுய் தன்னை பிச் சைக்காரனிலும் பிச்சைக்காரனுக்கிக்கொண்டு மக்கத்துக்குப்போன மஹான் யார். ஓர் இந்திய அரசன் சேரமான்பெருமாள் என்று கண்டுகொள்ளவேண்டும். இன்று இந்தியாவிலேயே உத்தம கிருஸ்துவன்யார் நமது மஹாத்மா காந்தியாவார். இவைகளெல்லாம்

மதத்தின்பேரில் ஏற்படும் பற்றுதல் இந்தியனைப்போல் வேறு தேசத்தாருக்கு ஏற்படாது. ஏற்படுவதுமில்லை. கிலாபத் காலத்தில் இந்திய முஸ்லீம்களோடு, ஹிந்துக்களும் கலந்துகொண்டு முஸ்லீம்களின் துன்பத்தை நீக்க முயற்சித்தார்கள். அந்நிய முஸ்லீம் நாடுதான் கிலாபத்தையேஒழித்தது. இவைகளை எல்லாம் நன்கு ஆலோஜித்துக் கொண்டு ஹிந்துமத உண்மையையும் மார்க்கத்தையும் தெரிந்து கொள்ளவேண்டும்.

முன் 6-வது அத்தியாயத்தில் பகவான் த்யானயோகத்திற்கு அப்பியாசக் கிரமம் சொன்னார். த்யான வஸ்துவை குறிப்பிடும் போது "பரமென்றனை த்யானிப்பான்" என்று குறிப்பிட்டார். இந்த அத்தியாயத்தில் த்யான வஸ்து விளக்கப்படுகின்றது.

சித்தமதிலே என் சின் பிரகாச ஞானமுடன்
அத்தனைக்கும் வாசு தேவன் ஆகிய எனை பஜித்தால்
எத்தனையோ ஜன்மங்களை ஏழ்மை நெஞ்சுளாரடையினும்
பித்தமது தீர்ந்தோராகி பேதமையும் நீக்கிடுவாரவர்

என்று கூறப்படுவதிலிருந்து வாசுதேவனான சாக்ஷாத் எம் பெருமானாகிய என்னையே த்யான வஸ்துவாக கொள்ளல்வேண்டுமென்றும் சொல்லுகிறார்.

## 7-வது அத்தியாயம் பாக்கள்.

1\. குந்தி புத்திரனே நீ கூர்ந்துமே கேட்பாயிதை
சந்ததமும் என்னிடத்தே தளரா மனத்தோனே
அந்தமுள் சரீரமதால் ஆச்ரயமது கொண்டோனே
பெந்தம் நீங்கவே நான் பேதிப்பேன் சமுசியமதை

2\. இதை யறிந்தவர்க்கு இன்னுமறிய ஒன்றில்லை
ஈதை யனுபவத்திலறிவாயோ இஞ்ஞானமதை இயம்புகிறேன்
சதையுடை மனிதரெண்ணில் தனியொருவன்தான்
சிதையா முயற்சிசெய்யும் சீருடை ஞானியாவன்

3\. சீருடை ஞானிதனில் செப்ப பலருளரேனும்
சேருடையவர் செய்யும் நெறியுடை கர்மமதால்
பேருடை யெனையறிவான் பத்தாயிரத்தா லொருவன்தான்
பாரினி லெனையறிந்து பூரணமா யெனைப்பார்ப்பான்

4. எட்டுவிதமாய் பிரிந்துளது என் பிருகிருதி தானும்
மட்டத்தில்காண் பூமி வாயு அக்னி ஜலத்தோடு
எட்டா ஆகாசமுடன் இம்மனது புத்தி அகங்காரம்
எட்டுவிதமாய் பிரிந்தாலும் இதில் சிரேஷ்டமில்லை காண்

5. இங்கெது சிரேஷ்டமெனில் இப்பிருகிருதியோடுறை ஜீவனே
அங்கு காண்பவை என் ஆத்ம சுவரூபமே காண் [யாம்
தங்கு மந்தரூபமே ஜீவனுயமைந்த தங்கு
எங்கென் ரூபமுளதோ இதையே சிரேஷ்டமெனக்கொள்

6. இருபிருவு யிப்பிருகிருதி இச்சகல பூதமெல்லாம்
பெரும் ஜகத் சிருஷ்டியோடு பெரிய நாசப்பூதனும் நான்
பெரும் நூற்சரடுதனில் பேரிய மணிகள்போல்
சர்வ பிரபஞ்சமென்னை சதா தொடர்தல் காண்

7. தாகந்தீர் ஜலமதிலே தங்கிய ருஜியும் நான்
ஏகமாய் காந்தி ஒளிர் ஏகசூரிய சந்திரன் நான்
ஏகப்பொருள் விளக்கும் வேத ஓங்காரப் பிரணவம் நான்
தேகத்தன்மையும் நான் சத் ஆகாசமும் நான்

8. இப்பூமியிடை புண்ய கெந்தமும் இங்க்னியில் பிரகாசமும்
செப்பும் பிராணிகள் தம் ஜீவப்பிராணனும் நான்
அப்பிராணனை உத்தரித்து அக்ஞான மதகற்றி
ஒப்பும் தபஸ் ஸ்டையாருள் ஓங்கும் தபஸும் நான்

9. காணும் பூதங்களின் காணுவித்தாயுள்ளேன்
தோணும் தேஜோவியின் சித்தரின் ஞானமும் நான்
பேணும் பலவானின் பலமென்ற சக்தியும் நான்
கோணமல் தர்மம்செய்ய, கொள்ளுமாசையும் நான்

10. சத்ரஜோதமத்தாலே சார்புடை வஸ்துவெல்லாம்
உத்தரித்தது எனுலென்ற உண்மையை யறிவாய் நீ
சத்துவாதி முக்குணமும் தோன்றுமென்னி லென்றாலும்
சித்தமதில் கொள்வாய் நீ சிறப்புடை நானில்லையெனவே

11. சத்வாதி முக்குணத்தால் சதா மோஹமாகுமுலகு
சத்வாதி முக்குணமும் சந்ததமும்மில்லே யென்ற
தத்வத்தை யறிந்தேயென்னை சர்வ சக்தனெனக் கொள்
தத்துவமிதறிந்தார், தனியிலென்னையடைவார் காண்

12. துஷ்கிருத்யம் செய்வாரும் துர்மனமுடையாரும்
சிஷ்டமாம் ஞானமற்று சேர்மாயை யுடையாரும்
துஷ்ட அஸுர சுபாவ, துர்க்குணமுடையாரும்
பிஷ்ட மனிதரில் பேதையும், பிரியுமுடன் தொழுவதில்லை

13. தரித்திலிருந்துமே தேட்டில் பொருள் வேண்டுபவன்
தெரிந்த ஞானமதால் சுவரூப யிச்சையுடையான்
பெருந்தனம்வேண்டி பொருளாசை கொண்டோனும்
அருமாத்ம ஞானியும், அறிந்தென்னை பஜிப்பார்காண்

14. நந்நால்வர்களிலும் ஞானியே சிரேஷ்டனவன்
அந்நல் ஞானிதனக்கு அதிப்பிரியன் நானேதான்
சொன்ன அஞ்ஞானியும் தனிமையிலென்னை யறிந்தே
மன்னு மூலத்திலென்னை மனதில் நம்பியுளார்கள்

15. சித்தமதிலே என் சின்பிரகாச ஞானமுடன்
அத்தனைக்கும் வாஸுதேவன் ஆகியவென்னை பஜித்தால்
எத்தனையோ ஜன்மங்களை எழ்மை நெஞ்சுளோரடையினும்
பித்தமது தீர்ந்தோராகி பேதமையும் நீக்கிடுவாரவர்

16. உன்னுமிச்சை விரும்பி உரிதாய் தேவர்களை
பின்ன பின்னமுடை பிறழ்ந்த சுபாவமதால்
தன்னிச்சை யெதில் சார்ந்துமே செல்லுமோ
அன்னவரப்படியே ஆச்ரயித்து பஜிப்பாரே

17. எப்பக்தனுடை விருப்பிற்கு ஏற்றபடியே நான்
அப்பக்தனருமையில் செய் அத்தொழுகைதனை யேற்று
இப்பவத்தை கடப்பதற்கு இசைந்ததோர் வழியாக்கி
ஒப்பியவன் கொண்ட ஓவியமதாவேனன்

18. ஓவியத்திலே கண்ட ஓர்த்த சுவரூபமதால்
மேவியவன் விரும்பிட்ட மெய்யானதுகிட்டும்
தேவர்களை பூஜிப்போர் தெரிந்து செய்தாராகார்
கூவியெனை யழைப்பார் கூடிடுவர் சாயுஜ்யமதில்

19. நாசமற்றவனும் சர்வோத்தமனும் நாதப்பரம் ஆனயென்னை
மோச மோஹத்திலிடருறும் மூட அவிவேகிகள்
தாசனும் பாகனென்றும் தாழ்மை மனிதனென்றும்
ஈசனுமெனை யெண்ணி இடர்படுவார் நரகமதில்

20. யோக மாயையாலே இங்குமறைந்த நான்
தேகமுடை மாந்தர்க்கு தோன்றதவனே யானேன்
மோகத்திலிடர் பட்டு முன்னிற்கு மிவ்வுலகு
வேகத்திலடைவதில்லை முடிவிலாதயெனை யிங்கு

21. கழிந்து சென்றதுவும் காணப்படுவதுவும்
எழிச்சி கொண்டுவரும் எதிர்கால மதுவும்
அழிவற்ற சுரூபி நான் அறிவதிலாச்சிரியமென்
எழிலுடையாயிங்கு எல்லோருமறிவாரோ

22. தேகத்தை யடையும்போதே சேருமே காமக்குரோதம்
மோஹ விஷய அபிமானத்தை முயற்சியிலடைந்துமே
போகத்தை விரும்பிச்செய்த பாபமதைச் சேர்த்தானும்
தாகமது தீராமலே சத்துவமாயெனை பஜிப்பான்

23. முழக்கம்செய் யெக்ஞமதில் முதிர் தேவதையாயும்
தழக்கமிலாதயெனை சர்வத்திலும் பிர்ம்மமாயும்
பழக்கமுடனே யெனை பார்த்து பஜிப்போர்க்கு
கிழத்தன மணுகாது கேடுறு மரணமும் வாராது

7-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

7-ல் 3-வது பாவில்.

ஞானமுடையோர் எண்ணிக்கை குறைவு என்றும் அப்படி ஞானமுடையோரிலும் பகவானையறிந்து தொழுவார் சிலரே என்றும் கூறப்படுகின்றது.

**4**-முதல் **11** பாக்கள்.

பகவான் தன்னுடைய மகிமைபற்றி எடுத்து கூறுகின்றூர்.

**12**-வது பா.

ஈசுவர விசாரமில்லாதார் துஷ்டர்களேயென்று கூறுகின்றூர்.

**13**-வது பாவில்.

தரித்தரர்கள் பணம் வேண்டியும், ஞானத்தையுடையான் ஸ்வரூப நிச்சியம் வேண்டியும்; பெருந்தனம் சேர்க்க ஆசையுள்ளோனும் ஆத்மஞானியும் எனையே பஜிப்பார்கள் என்று கூறுமிடத்து பகவானிகத்தில் எந்த பக்தன் எந்த எந்த வஸ்துவை விரும்பி தனைத் தொழுகின்றுனே அதை கிடைக்கச் செய்வர் என்பது கருத்து. உலகத்தில் தனைத் தொழும் ஒவ்வொருவருக்கும் முக்தியளிக்கக்கூடிய பகவான் உலகயின்பம் வேண்டி தனமதை கேட்டால் கொடாமலிருப்பாரா திட்டமாகவே திரவியம் வேண்டித் தொழுதாலும் கிடைக்கும் எனதாத் பிரியம். மேலும் 14-வது பாவில் ஞானியின் வேண்டுதலையே சிரேஷ்டமெனக் கூறுகின்றூர். மேலும் தனக்கும் ஞானிக்குமுள்ள சம்பந்தத்தை கூறும்போது இருவரும் பரஸ்பரத்தில அறிந்துளார்கள் என்பதை உணர்த்தவே.

**14**-வது பா.

நந்நால்வர்களிலும் ஞானியே சிரேஷ்டன்காண்
அந்நல் ஞானிதனக்கு அதிப்பிரியன் நானேதான்
சொன்ன அஞ்ஞானியும் தனிமையிலெனை யறிந்தே
மன்னு முலகத்திலென்னை மனதினில் நம்பியுளார்கள்

பகவானிடத்தில் போய் கேவலம், அழியத்தக்க பொருளையா கேட்கவேண்டும். அவனிடம் கேட்கவேண்டுவது மோக்ஷமல்லவா அதையடையும் உபாயத்தை நமக்கு போதித்துள்ள அந்த பரமாத்மாவை யடைவதற்கே நாம் முயலவேண்டும் என்று சொல்லவே பகவான் "நந்நால்வர்களில் ஞானியே சிரேஷ்டன்காண் என்கிறூர்."

**15, 16** பாக்களில்.

சிறிய தேவர்களை பஜித்து சொற்ப லாபமென்ற புத்ரமித்ர கனம் தனம் இவைகளை யடையலாம் என்று கூறுமிடத்து சாக்ஷாத் பகவானுல் சிருஷ்டிக்கப்பட்ட உலகத்தில் காணும் வஸ்துக்களை

யடைவதற்கு அதை உடையாரிடம் பிரார்த்தித்து முயற்சித்தால் போதும் ஆனல் உத்தம லக்ஷியமான மோக்ஷ வீட்டிற்கு பாதை பகவானே காட்டவேண்டும், அவரே தரவேண்டும், என்பதை காட்டவும் எல்லா பிராணிகளுடைய முயர்ச்சியும் வீண்போகாமல் காப்பாற்றுவதை கடனெனக் கொண்டிருப்பதை காட்டவே

**17**-வது பாவில்.

> எப்பக்தனுடைய விருப்பிற்கு எற்றபடியே நான்
> அப்பக்தனருமையில் செய் அத்தொழுகைதனை யேற்று
> இப்பவத்தை கடப்பதற்கு இசைந்ததோர் வழியாக்கி
> ஒப்பியவன் கொண்ட ஒவியமது மாவேனுன் என்கிருர்.

எந்த பக்தர்கள் எப்படி எப்படி என்னை நினைந்தாலும் அவர்களுடைய விருப்பப்படியே அவரவர்களால் போற்றிச் செய்யப்படும் தொழுகையை நான் ஏற்று அம்முறையை இச்சம்சார சமுத்திரத்தை கடப்பதற்கு நல்லதொரு மரக்கலம்போல் அமைத்து அவரவர்கள் மனம்போல் மனத்தில் காணும் சுவரூபமாக இருப்பேனென்கிருர். ஆதலால் தொழுகை முறையையமைத்து கொள்ளவேண்டியது, மனிதர்களாகின்ற ஜீவர்களின் பொறுப்பு. நாலாமார்க்கத்திலும் தனையடையலாமென்று சொல்லவே தன்னை ஒரு மார்க்கத்தார்க்கென்று கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை யென்பதையும் குறிக்கின்றுர்.

இங்கு மற்ற மதத்தோர்கள் கவனிக்க சில உள. அவரவர்கள் மதத்தை அவரவர்கள் பெரிதென பேசிகொண்ட போதிலும், கடவுள் எல்லா சிருஷ்டிக்கும் கர்த்தா என்று ஒப்புக்கொள்ளுமிடத்து கடவுள் ஒருவழியில் நடக்கும் ஒரு சிலரைத்தான் கடையேற்றுவேன் என்று கூறியுளார் என்றும், மற்ற மார்க்கத்தோரை பாபிகளென்றும் கபீர்என்றும் சொல்லிக்கொண்டு தத்துவதெரிசனத்தையறியாமல், உலகத்தில் மதப்பூசல்கள் மூலம் தன் கக்ஷியை ஜயமடையச் செய்வதற்கு ஜனங்களிடையே த்வேஷத்தை உண்டு பண்ணுகின்றுர்கள். தாங்கள் எவ்வளவு தோஷ புத்தியுள்ளவர்களாயிருக்கிருர்களோ அதேபோல் தெய்வத்தினிடமும் தோஷம் ஆரோபிக்கின்றுர்கள். மனிதனிடம் காணும் த்வேஷம் கடவுளிட

மிருக்கிறது என்று சொல்லுவோர்களுக்கு நாம் என்ன புத்தி எடுத்து சொல்லினும் திருந்தப்போவதில்லை. பாண்டவ கௌரவ யுத்தம் (மஹாபாரதம்) நடப்பதற்கு தங்கள் தங்கள் பக்கம் கிருஷ்ண பகவானை சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று இருகக்ஷிக்காரர்களும் முயற்சி செய்தார்கள் கிருஷ்ணபகவானும் இருகக்ஷிகளிடமும் ஓர் சமாதானம் செய்துகொண்டார். பாண்டவர்கள் கிருஷ்ணபகவானின் ஆலோஜனை சொல்லல், ஒன்றே போதுமென்று கிருஷ்ணனை தன்பக்கம் நிற்கக் கேட்டுகொண்டார்கள். கௌரவர்கள் கிருஷ்ண பகவானின் சைனிய பலத்தையெல்லாம் பெற்றுக்கொண்டார்கள். இவைகளை ஊன்றி ஆலோஜிக்குமிடத்து ஆள்பலம் சேர்ப்பதை காட்டிலும் ஆலோஜனைபலம் மேல் என்று ஏற்படும். தங்கள் தங்கள் மதங்களில் அதிக மனிதர்களைச் சேர்த்துக்கொள்ள, த்வேஷ புத்தியை உண்டுபண்ணுவதை காட்டிலும், எல்லோருடைய மதமும் உண்மையைத்தான் போதிக்கின்றதென்றும் எல்லோரும் கடவுளையேயடைய முயர்ச்சிக்கின்றார்களென்றும் அவரவர்கள் சக்திப் படி கடவுளைத் தொழுவதற்கு அவகாசம் கொடுக்க வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளவேண்டும். எந்த மதஸ்தர்கள் அன்னிய மதஸ்தர்களின் தொழும் முறையை ஏளனம்செய்து தன் தொழுகை முறைதான் நல்லதென்று உபதேசிக்க புறப்படகின்றார்களோ அவர்கள் தன்னைப்போல் அன்னியர்களும் சிந்தனை சக்தியுடையோர்கள் என்பதை மறந்துவிடுகின்றார்கள். ஆதலால் இவைகளையெல்லாம் ஊன்றி ஆலோஜிக்குமிடத்து எல்லா மதஸ்தர்களும் கடவுளை தன் தாய்போல் கொண்டார்களானால் குழந்தைகள் தன் ஒரே தாயை தனக்குத்தான் தாய் என்றும் மற்ற சகோதரர்களுக்கு தாய் இல்லை என்று சொல்லமாட்டார்களோ அதேபோல் எல்லா மதஸ்தர்களும் கடவுளை எல்லோரையும் பாலிப்பவர் ரக்ஷிப்பவர் என்று கூறவேண்டும். இதே கொள்கையைத்தான் பகவானும் இங்கு 18-வது பாவில்.

ஓவியத்திலே கண்ட ஓர்த்த சுவரூபமதால்
மேவியவன் விருப்பிட்ட மெய்யானது கிட்டும் என்கிறார்.

அவனால் த்யானிக்கப்படும் சுவரூபம் அவனாலேயே தெரிந்தெடுக்கப்படவேண்டும். கடவுளின் சுவரூபத்தைச் சொல்பவர்கள் சுவரூபி, அரூபி, ரூபாரூபி எங்கும் நிறைந்தவர் எல்லாம் வல்லபர்

என்று சொன்னாலும் த்யான யோக்கியமாக ஓர் சுவரூபத்தை மனதினால் அமைத்துக்கொண்டால் தானே, பின்னால் த்யானத்தில் இறங்கமுடியும். இதைக் கருதியே பகவானால் "மேவியவன் விரும்பிட்ட மெய்யானது கிட்டுமென்கிறார்." அவன் விரும்பும் சுவரூபத்தை அவனேயடைவன் என்கிறார் மேலும்.

"தேவர்களை பூஜிப்போர் தெரிந்து செய்தாராகார்
கூவியென்னை யழைப்போர் கூடிடுவர் சாயுஜ்யமதில்"

என்று கூறுவதிலிருந்து உலகத்தில் உலகானுப ஆசையை முன்னிட்டு தேவதைகளைத் தொழுவது நன்றன்று. என்னையே யடைய என்னையே தொழவேண்டுமென்கிறார். நிர்குண பிர்ம்ம உபாஸனையே குறிப்பிடப்படுகிறது.

## 19. 20, 21, பாக்கள்.

தன் அவதாரம் பகவானால் சொல்லப்படுகிறது. இங்கு பகவானான கிருஷ்ணனும் தன்னை மூலப்பிர்ம்மத்தின் ஓர் சக்தியாக தோன்றியிருப்பதை உணர்த்தி மூலப்பிர்ம்மத்தையே தொழவேண்டுமென்றும் சொல்வதை யறியவேண்டும். இங்கு கிருஷ்ணனும் மற்ற மதஸ்தர்கள் கூறுவதுபோல் யஜஸ்வேண்டி தன்னையே தொழவேண்டும் தானே கடவுள் என்று சொல்லிக் கொண்டிருக்கிறதாக காணப்படவில்லையா? பொதுவாக ஓர்மனிதன் தன் ஜன்மத்தில் சௌகரியமாய் பலவித மார்க்கத்திலும் மேன்மை யடைந்த நிமித்தம் தானே கடவுள் என்று யஜஸ் விரும்பிச்சொல்லும் சொல்லாக ஏன் இருக்கக்கூடாது என்ற கேள்விபிறக்க தன்னுடைய அந்தரங்க பக்தன் அர்ச்சுனனுக்குக்கூட உன் கருமபந்தப்படி நீ நடக்கவேண்டுமே தவிர வேறு இங்கு ஒன்றும் என்னால் செய்யக் கூடியதில்லை என்று சொல்லுகின்றார். மேலும் அர்ச்சுனன் 12 அத்தியாயத்தில் நிர்குண பிர்ம்ம உபாஸனை மேலா அல்லது உன்னை பக்தியோடு தொழுவது மேலா என்று கேட்குமிடத்து.

"மன்றில் செய்கருமம் மனமொத்து எந்தனுக்கே
நன்றர்ப்பித்தார்கள் ஞானறி சிரேஷ்டராவர்" என்று

சொல்லிவிட்டு.

**12** அ. **3**-வது பா.

"இந்திரியமடக்கி இகத்தில் சம புத்தியுடன்
சுந்திர ரூபமுடை ஜகத்திற்கு நன்மையுய்த்து
அந்திரமவையும் நிறை அங்நிர்க்குண பிர்ம்மத்தை
வந்தித்துத் தொழுவானே வந்தெனே யடைவான்காண்"

என்று கூறுவதிலிருந்து நிர்க்குண பிர்ம்ம உபாஸனே மூலம் தான் என்னே யடையமுடியும் என்கிறுர். இங்கு தன்னே நிர்க்குண பிர்ம்மமென்றும், ஆதலால் தன்னுல் ஜீவர்களுக்கு இங்கு ஒன்றும் செய்யமுடியாத நிலே குறிக்கப்படுகின்றது. தன் முயற்சிமூலமே மோக்ஷமடையவேண்டுமென்று தாத்பரியம் கடைசியாக

**23**-வது பா.

முழக்கம் செய்யெக்ஞமதில் முதிர் தேவதையாயும்
தழக்கமிவ்வியெனே சர்வத்திலும் பிர்ம்மமாயும்
பழக்கமுடனெனே பார்த்து பஜிப்போருக்கு
கிழத்தனமுமணுகாது கேடுறுமரணமும் வாராது.

சர்வத்திலும் பிர்ம்மமைந்திருப்பதையுணர்ந்து அப்பியாசம் யோகம்செய்வார்க்கு மனத்தாங்கல் ஏற்படாது, மோக்ஷமும் சித்தம் என்று கூறப்படுகிறது.

7-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

—oo—

## 8-வது அத்தியாயம்.

—][—

1 புருஷோத்தமனேஎன்று பகர்வாணர்ச்சுனனும்
பிர்ம்மமென்பதுயாது பின்னத்யாத்மமதென்னே
கர்மம் என்பதுயாது கர்த்தனே அதிபூதமென்னே
அர்ச்சுனனுக்கு முன்னுதித்தோய், அதிதெய்வமென்பதென்னே

2 அதியெக்ஞனென்பவெவன் ஆதிமதுசூதனரே
மதித்து மனமடக்கினேர்கள் மரணந்தகாலமதில்
துதிசெய்வானும்மை தெரிந்துகொள்வதெவ்வகை
விதிதனே விலக்க வல்லீர் விளம்புவீர் என்றுன் விஜயன்

3 பிர்ம்மமே உலகிற்குயிங்கு பிரிதில்ர் மூலாதாரமாம்
பிர்ம்மத்தின் ஜீவிதமே பின்னுள் அத்யாத்மமாகும்
கர்மமமேதனவினவில், கருத்தினில்கொண்டதொரு
விருப்பம் திர்யிங்கு விரும்பசெய்யெக்ஞமாகும்.

4 நாசமடைவனவெல்லாம் நவினுமதபூதமாகும்
தாஸதேவதையின் தருபதியே விராட்புருஷன்
நேசதேகத்திலமை நானே அதியெக்ஞன்
பாசுபதம் வேண்டிநின்ற பர்குனயிதையறிவாய்.

5 அந்தியகாலமதிலென்னை அகஸ்மாத்தாய் நினைந்தாலும்
பிந்தியவன் சரீரமதை பிறப்பிலடையான்காண்
சொந்தமாமென்வசுவரூபம் சுலமதிலவனடைந்து
பிந்திய ஜன்மமின்றி பேரின்பமும் பெறுவானே.

6 அந்தியகாலத்திலெவனும் அவன் நினைசுவரூபம்
பிந்தியவனடைஸ்வரூபம் பேதியாது ஒத்திருக்கும்
சிந்தைதனில் அவன்கொண்ட, சுவரூபஸ்மரணையுடன்
அந்தந்த ஸ்வரூபதை அவனடைதல் இயல்பேயாம்.

7 ஆதலாலென்னை எப்பவும் அறிவிருத்தி ஸ்மரணம்செய்
சாதல்தனை நினையாமல் சமர்புரிவாய் இங்கு நீயும்
நாதனும் என்மேல் மனம், நாட்டியவண்ணமிருப்பின்
நோதலோர் சிறிதுமின்றி நேரிலென்னையடைவாய்.

8 அப்பியாச யோகமதை அவலம்பிக்கும் யோகிதானும்
சுப்பிரகாச ரூபமதை த்யானம் செய்வதாலே
ஒப்பலற்ற சுவரூபமதில் ஓர்த்தமனதோடு
அப்பரம பௌரஷத்தை அந்தியத்திலடைவானே.

9 சஞ்சலாமிலா மனத்தான் த்யானமதைச் செய்வதோடு
துஞ்சும் காலமதிலவன் சரிமத்திப்புருவமதில்
நெஞ்சிலுறுதியோடு நிறுத்தினல் பிராணனதை
அஞ்சலில்லாமலவன் அவினசி பிர்ம்மமாவான்.

10 வேதங்களையறிந்தோர்கள் விளம்பும் விநாசவஸ்துவும்
பேதமுடை கர்மமதால் பேதிக்கும் குரோதம்விட்டு
நீதசன்னியாசியிங்கு நியதியாயடைவஸ்துவும்
ரேதஸ்ஸையடக்குவோன்தன், ரூபஸ்தானமதைக்கேள்.

11 இந்திரியத்துவாரமடக்கி இருதயத்தில் மனமிருத்தி
தன் தலையுச்சியிலே, பிராணவாயுவை நிறுத்தி
சிந்தையிலென்னை நினைந்துசெய்யும் ஓமெனமந்திரம்
அன்னிலையிலந்தியம்வந்தால், அடைவான் உத்தமகெதி.

12 என்னையே சதா நினைந்து எப்பற்றுமில்லாதான்
பின்னையென்னை நினைந்து பிர்மமேயாவானவன்
பின்னிலையிலென்னையடைந்தார், பிறப்பிறப்பை யொழித்தாராய்
முன்னிற்கும் மூவுலகில் மறுபிறப்பறுப்பார்காண்.

13 ஆயிரயுகங்களிங்கு ஓர்பிர்ம்ம பகலென்றும்
ஆயிரயுகங்களுடை ஓர்பிர்ம்ம யிரவென்றும்
ஆயிரப் பிர்ம்மபகலில் அப்பிருகிருதி உண்டாகி
ஆயிரப் பிர்ம்மயிரவிலே அடங்கும் ஸர்வஜகத்தும்.

14 இப்பூதமாம் பிருதிவிகூட்டம், இப்பகலியங்க ஆரம்பவித்து
அப்பூதங்களெல்லாமடங்கி, அப்பிர்ம்மயிரவில் இறந்தேவிடும்
இப்பூதங்களனைத்து மிங்கு இங்ஙனம் பிறந்திறந்தே
எப்பூதமெனவும், தோன்றாமல் இங்கு அடங்கிவிடல்காண்.

15 கிரமத்தில் நாசமுறும் கேடுறுபூதமென்ற
பிரகிருதியில் நின்றேயது, பரமே நின்றுமேவும்
பிர்ம்மத்தினிருப்பையிங்கு பேதமில் விளம்பப்புகின்
புரத்தில் காணமலது பேரானதியாகுங்காண்.

16 எவனைகாணலெங்கும், இங்கும் முடியாததோ
எவன் நாசமதைதான் இங்குமே வென்றானே
எவனடைந்தாலெவனும் இங்கு திரும்பியேவாரானோ
அவனே நான்கொள் அரூபமெனக்கொள்.

17 இப்பிரபஞ்சமதிலே எங்குமே வியாபித்து
எப்பிராணிகளிலும் இயங்கியிருப்பவனும்
அப்பரம புருஷன்தனை அடைவதற்கேயிங்கு
எப்புரமும் திரும்பாத இப்பக்தியே வேணுமய்யா.

18 ஜோதிஸ்வரூபமுடன் சென்றிடினும் சுயம் பிரகாசயக்னியில்
பாதி தினமாமபகற்காலமதில் பிராணன்தனைதேகமதுவிட்
[டிடினும்
ஆதிபாகமென்ற வளர்பிறை ஆனசுக்லபக்ஷம் தனிலும்
ஓதும் உத்ராயணகாலங்களிலும் ஒடுங்கும் பிராணன்
[பிர்ம்மமேயாம்.

19 நெருப்புதருபுகையிலே நீங்கும் பிராணனும்
கிருஷ்ண பக்ஷமதிலும் கடும் இரவுதனிலும்
கருமம் செய்வான்தான் காத்தஜீவன் துறக்கில்
திருசொர்க்கமது சென்று திரும்பியிங்குவருவான்காண்.

20 வேதமது புகலுமந்த வேத எக்ஞமதிலும்
ஓதும்தபமதிலும் உண்மைதானமதிலும்
ஓதியுணர்த்துமந்த உயரிய புண்யபலாதிகள்
சாதனைக்குதவாதென தெரிந்துளான் உத்தமயோகி.

21 இருகர்மமதிலும் எக்கருமம்மேலென்று
அருள்கொண்டர்ஜுனா அறிந்துமேயறிவுடனே
விரும்பிசெய்கருமமதை வேண்டாய் பலனையிங்கு
இறப்பு பிறப்பொழித்து இகபரசுக மெய்வாயே.

8-வது அத்தியாயத்தின் பாக்கள் முற்றிற்று.

---

## 8-வது அத்தியாய பாக்களின் விரித்துரை.

### **1**-முதல் **5**-வது பாக்கள் வரை.

அர்ச்சுனன் கேட்கும் கேள்விக்கு பதில் சொல்லப்படுகிறது ஆத்ம விவேசனத்துக்கு இந்த அத்தியாயத்தில் அடிப்படையாக கெவனிக்கத்தக்க விஷயங்கள் கூறப்படுகிறது. பிர்ம்மம் என்றால் என்ன, அத்யாத்மிகம், கர்ம்மம் என்றால் என்ன கேள்விகளுக்கு பிர்ம்மம் மூலாத்ரமென்றும் அத்யாத்மிகம் ஆத்மா என்றும் கர்மம்

ஜீவனுடைய தேகத்தால் செய்யப்படும் செய்கை என்றும் கூறப்படுகிறது. அதிபூதமெண்பது நாசமடையும் வஸ்துக்களை குறிக்கிறது. மேற்கண்ட ஒவ்வொன்றுக்கும் இருக்கும் குணங்களை நன்றாக அறிந்தால்தான் ஆத்மா விவேசனத்திற்கு அடிப்படையேற்படும். பொதுவாக யோஜிக்குமிடத்து உலகத்தில் பிறந்துள மனிதவர்க்கங்கள், மற்ற ஜீவப்பிராணிகளை காட்டிலும் ஓரறிவு அதிகம்பெற்று இருப்பதினால்தான், மனிதனை மக்கள் என்றும் மற்றவைகளை மாக்களென்றும் அழைக்கின்றார்கள்.

**5**-வது பாவில்.

ஓர்மனிதன் தன்னை அகஸ்மாத்தாய் அந்தியகாலத்தில் நினைத்தாலும் போதும்; அவனை மோக்ஷமடைய செய்யக்கூடுமென்கிறார். மரணகாலத்தில்த்தான் மனிதனுக்கு புத்தி தடுமாற்ற மேற்படும். அப்போது அவனுக்கு ஏற்படும் வேதனையும் உலகத்தில் தனம் தாராதிகளைப்பிரிய ஏற்படும் துக்கமும் கஷ்டப்படுத்துவது சகஜம். அப்போது பகவானை பற்றியும், பகவத் குணாதிசயங்களைப் பற்றியும் நினைவுக்குவர கஷ்டமாயிருக்கும். ஆதலால் நல்ல நிலையிலிருக்கும் போது பகவத் த்யானத்தைப் பழகிக்கொண்டால் பழக்கமென்ற காரணத்தினாலாவது பகவத் ஸமரணை ஏற்படும். பழகிகொள்ளுவதுதான் முக்கியம் என்று சொல்லவேண்டுவதை, உறுதியுடன் சொல்லுவதையே பகவான் அகஸ்மாத்தாய் நினைத்தாலும்போதும், நான் மோக்ஷபலனீய்வேன், அப்படியிருக்கும்போது உன்னை பகவத் ஸாக்ஷாத்காரத்திற்கு பழக்கிக்கொண்டு என்னை பூஜித்தால் மோக்ஷம் நிச்சியமென்கிறார்.

**6, 7, 8, 9, 10, 11, 12,** பாக்கள்.

ஷை பாக்களை அனுசரித்தே யோக நிலையில்உள்ள ஒருவன் சதா பிர்ம்ம த்யானத்தில் இருப்பதை குறிப்பதோடு முன்சொன்னது போல் மனிதன் தன் சரீரத்தை மரணமென்றதில் புகுத்தும்போது பகவத் தியானத்தில் இருப்பதே முக்கியமென்றும் அதற்குரிய யோகமார்க்கத்தையும் குறிக்கின்றது.

**13, 14, 15, 16, 17,** பாக்கள்.

பிர்ம்மத்தின் சிருஷ்டிக்கிரமம் சொல்லப்பட்டு பிர்ம்மத்தையடைவதற்கு பக்தியே முக்கியமென கூறப்படுகிறது.

**18, 19,** பாக்கள்.

யோகியின் உயிர்பிரியும் வேளை, பிரியக்கூடாத வேளை குறிப்பிடப்படுகிறது.

**20, 21,** பாக்கள்.

வேதோக்த தர்மங்களை காட்டிலும் பக்தியுடன் கூடின நிஷ்காம கருமமே மேலென கூறப்படுகிறது.

8-வது அத்தியாய விரித்துரை முற்றிற்று.

இனி **9**-வது அத்தியாயத்தில் பகவான் கூறுவதை படிப்போமாக.

Kulladakurichi,
23—11—40.

## REVIEW.

# BAGAVAD GITA

by

MAHARESHI KRISHNAJI, KULLADAKURICHI.



This is a series in Tamil verse and lectures exponding the Great Indian Treatise containing the essence of Aryan tenets of Karma Yoga preached by Lord Krishna himself to his chela and discipal Arjuna. The author has ventured to expound the tenets in modern lines and in a very original path. The verses are simple and can be sung in popular tunes. So that even school children can learn them by heart and imbibe that sacred philosophy of our ancient heritage in easy and interesting style. I wish the Author success in this field of enlightment of verses through this work of his.

*G. Ramakrishna Iyer,* B. A., L. T.,
Deputy Inspector of Schools.

# பகவத் கீதை.

9, 10 அத்தியாயங்கள்.

பாக்கள், விரித்துரை.



ஆக்கியோன்,

மஹரெஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved.) 1941. (விலை அணா. 4

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந் தோறும் வெளிவரும். முன் பணம் ரூ. 2-8-0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## 9-வது அத்தியாயம்.

உலகம் தோன்றின நாள்முதல் அநேக மதங்கள் தோன்றி யிருக்கின்றன. ஏன் அநேக மதங்கள் தோன்றியிருக்கின்றன? தோன்றுவானேன்? ஓர்மதம்போதாதோ? என்று சிலர் வினவக்கூடும்.

மதம் என்பதற்கு படிப்பு என்ற அர்த்தத்தை கொடுத்து விடில், படிப்பு ஒன்றே போதாதோ என்ற வினவுதல் ஏற்படாது. ஏனெனில், படிப்பில் புதிது புதிதாக தோன்றுதல் சகஜம்.

மனித சமூகம் அறிவு அடைய அடைய (அதிகமதம் உண்டாத லியல்பு. அறிவுவிர்த்தி யேற்படும் அப்படியே.)

முன்னோர்களின் மதமும், கொள்கையும், நடப்பும் பின்னவர்கள் அநுசரிக்கலென்பது கஷ்டமாயிருக்கிறது. அதற்குக் காரணம் பின்னவர்களுடைய பக்தி குறைவு என்பதல்ல.

ஓர்கொள்கையும், தொழுகையும், நடப்பும் எக்காலத்திலேர்ப் பட்டதோ அக்கால உலகத்திற்கும் இப்போது நாம்வாழும் உலகத் திற்கும் அதிக வித்யாசமிருக்கின்றது.

உதாரணமாக தெய்வம் தொழல் என்ற விஷயத்தை மட்டிலும் எடுத்துகொள்வோமானால் தெய்வம் தொழலென்பது மட்டும் முக்கியமே தவிர அதில் அனுஷ்டிக்கும் முறை வேறுவேறு விதமாக சீதோஷ்ணத்திற்கு தகுந்தபடி அமைந்திருக்கின்றது.

நமது இந்தியாதேசத்தில் ஸ்நானம் செய்துவிட்டுத்தான் தெய்வம் தொழுகை ஆரம்பமாகும். குளிர் தேசங்களில் ஸ்நானம் என்பது முக்கியமல்ல, ஸ்நானம் செய்யாமலே ஆரம்பித்துவிடு வார்கள்.

ஆகையாலிந்த இடத்தில் ஸ்நானமென்ற அனுஷ்டானம் தெய்வம் தொழுகையை சேர்ந்ததல்ல.

முன்காலங்களில் ரெயில் முதலிய வேகமாய் செல்லும் வாகனங்கள் கிடையாது. ஆதலால் தினசரியை ஒன்றுபோல் நடத்துவதற்கு வசதியிருந்தது.

இப்போது காலைசந்தியையும், மாலைசந்தியையும் ரயிலிலேயே நடத்தவேண்டியிருக்கிறது.

இவைகளையெல்லாம் ஊன்றியோஜிக்குமிடத்து (காலத்திற்கேற்ற தர்மமே தவிர, தர்மானுசாரம் காலமிருது என்றேர்ப்படுகின்றது.)

இராமயண காலத்தில் சகோதரர்கள் ஒருவருக்கொருவர் ராஜ்யம் வேண்டாமென்று சொல்லிக்கொண்டார்கள்.

பாரத காலத்தில் சகோதரர்களுக்குள் இராஜ்யம் எனக்கு உனக்கு என்ற சண்டை.

இராமயண காலத்தில் குருமார்கள் சகோதர விவகாரங்களில் தலையிட இடமேற்படவில்லை.

பாரத காலத்தில் குருமார்களே சகோதர விவகாரத்தில் தலையிட்டுக்கொண்டார்கள்.

இதுமாதிரியான மாறுபாடுகள் மனித சமூகத்தில் ஏற்படுவது சகஜம்.

எந்த கொள்கை சத்தியத்தின்பேருல் அகங்காரம், துவேஷம் அன்னியில் ஏற்படுமோ அதேசவ்லா வருங்கால துன்பங்களையும் சகித்துக்கொள்ளவும், எதிர்த்து நிற்கவும் வன்மை பொருந்தியதாயிருக்கும்.

தான் தனது என்றும் அந்நியமென்றும் பார்ப்பனவெல்லாம் தத்துவ விரோதமாகவேயிருக்கும். இவைகளை நன்குணர்த்த பகவான் கீதை.

அன்னியமாய் வேருென்றையும் ஆராதிப் பற்றவருய்
என்னையே சிந்திக்கும் எவ்வகை ஜனங்களேயும்
அன்னவரின் அரும் அய்யோக க்ஷேமமதையும்
முன்னதாகவகித்தல் முக்கியமென கொண்டுளேன்.

என்று கூறப்படுவதின் ஸாரத்தைக் கெவனிக்கவேண்டும். வேருென்றை எனக்கு வேறுஎன்று நினைக்காதவர்களாய் நானே எங்குமுளேன்என்று நினைக்கும் எல்லாவர்களுடைய சுகம், துக்கம் இரண்டையும் முக்கியமாக கெவனித்துகொள்கிறேன் என்று சொல்லும் பகவான் வாக்கியம் தீர்க்க தெரிசனமாகக் கொள்ள வேண்டும். காணப்படுவதெல்லாம் எனதாக இருக்கும்போது எனக்கு வேருக கூறப்படுவதுவும் நானேயாகயிருக்கிறேன் என்கிருர் மேலும்,

பக்தியோடு பழமதையோ பூ இலே ஜலமதையோ
சக்திப்படி எவரேனும் சாற்றும் நான்கிலொன்றை
முக்தியளிக்கவல்ல முதன்மூர்த்தி எந்தனுக்கு
சொக்க மனத்தோடு சமர்ப்பிக்க நான் ஏற்பேன்.

என்று கூறும் வாக்கியமானது ஆழ்ந்த கருத்துடையதாயிருக்கிறது. ஸ்தூலமாக பார்க்குமிடத்து பழம், புஷ்பம், இலே, ஜலம் இந்நான்கில் ஏதாவது ஒன்றை எனக்கு பக்தியோடு சமர்ப்பிக்க நான் ஏற்றுக்கொள்வேன் என்று கூறப்படுகிறது. ஆனுல் ஆழ்ந்து பார்க்கும்போது.

ஜலம், இலே, பழம், புஷ்பம் இவைகள் சாதாரணமாக எளிதில் கிடைக்கக்கூடியவை. அவைகளே சரியானமுறையில் நீ கொடுப்பாயானுல் அதுவே உலகத்திற்கு க்ஷேமமாக முடியுமென்று ஏற்படுகிறது. எப்படி எவ்விதம்? என்ற கேள்விபிறக்க ஜலம் ஜீவகோடிகளுக்கு ஓர் உணவு பதார்த்தமாயும் உணவு பதார்த்தத்தை உண்டு பண்ணுவதற்கு உதவி பதார்த்தம். ஆதலால் ஜலமென்பதை கொடுப்பதின்மூலம் அநேக செடி பயிர் விருக்ஷ முதலியவைகளே யுண்டுபண்ணு என்று ஏற்படுகிறது. உதாரணமாக இந்தியாவில் ஒவ்வோர் கிருமத்திலும் அரசவிருக்ஷத்தை யுண்டுபண்ணி அதனடியில் ஓர் பிள்ளேயாரை வைத்துவிடுகிருர்கள். விருக்ஷத் தடியிலிருக்கும் பிள்ளேயாருக்கு எல்லோரும் அபிஷேகம்செய்ய

ஜலத்தை உபயோகிப்பார்கள். இந்த ஜலம் அரசுவைத்த விருக்ஷத்தினடியில் விழ மரம் வளர்ந்து பெரிதாகி உஷ்ணநாடான நம் நாட்டினர்களுக்கு நிழல்தருகிறது. ஆகவே கொடுப்பது ஜலம் அடைவது ஜீவகோடிகள் சாந்தி, அடுத்ததாக இலை இதை சேகரித்து பசு முதலிய பிராணிகளுக்கு கொடு என்றால் பயன். ஜீவகோடிகளுக்கு பாலாகமாருகிறது. புஷ்பம் இதை கொடுத்தால் உலகத்தையே வாஸனைமயமாக ஆக்கிவிடலாம். புஷ்பத்தை விரும்பாதார் யார்? நேத்திரானந்தம் சுவாஸனை இவைகளெல்லாம் எக்காலமும் அனுபவம். பழம் இவைகளின்பலன் சொல்லவேவேண்டாம் எல்லோரும் உண்டுகளிப்படைவர். ஆகவே கொடுப்பது ஜலம், அறிந்து இதே ஜலத்தை சரியானவழியில் கொடுத்தால் பழமாக மாறி உலகமாந்தர்களை தித்திக்கச்செய்கிறது.

இப்படி உலகம் தித்திக்க பகவானும் சந்துஷ்டியடைகிறார்.

ஆகவே, பக்தியோடு பழமதையோ பூ இலை ஜலமதையோ எ.துவாயினும் சரி உலகமாந்தர் உஜ் ஜீவிக்கும் வண்ணம் கொடுக்க வேண்டுமென தாத்பிரியம்.

## 9-வது அத்தியாயம்.

1 ஸம்ஸாரமதைதொலைக்க சாதனை வேண்டியிங்கு
செம்மையுடனீயும் த்யானம் செய்யுமந்த
அப்பிர்ம்ம ஞானமதை அர்ஜுனா நீயறிய
உம்பொருட்டிங்கு உரைக்கின்றேன் கேளாயதை.

2 வித்தைகளுக்கெல்லாம் விசேஷமாமிது
உத்தம ரகசியமதில் உத்தம பாகமேயாம்
சுத்தமாம் விலகலிலா தர்மதர்மமாதும்
நித்தியமாய் செய்வதும் நியதியில் சுலபமேயாம்.

3 இஞ்ஞானமாம் இத்தருமமதை
மெஞ்ஞானமென மேன்மையுடனே
அஞ்ஞானமதால் அறியாதார்
சுஞ்ஞானமின்றி சுழல்வர் பிறப்பிறப்பில்.

4 அறியில்ரூபமுடை அவினாசியென்னாலே
குறியுள்காணும் குவலய பொருளெல்லாம்
பிறிதில்லாமல் நானே பேதியாதடக்கியுளேன்
தெறிபூதங்களென்னை துயர்ந்தடங்காதுகாண்.

5 ஏந்திநிற்போனும் எப்பூதங்களையும்
அப்பூதங்களனைத்தும் ஆக்கியழிப்போனும்
செப்புசக்தியுடன் சேர் என்ரூபமதை
ஒப்பியவர்ஜுனா நீ உண்மையென ஓர்வாயே.

6 எங்கும் வியாபித்தவாயு எவ்விதம் நிறைந்தேதான்
அங்கது ஆகாசத்தில் ஒட்டி ஒட்டாதுபோல
இங்கு இக்கணமே இச்சகல பூதங்களும்
தங்கிய தன்மை நீ தெரிந்துகொள் அர்ச்சுனனே.

7 குந்திபுத்ரனே கேள் குவலயப்பூதமெல்லாம்
அந்தியப்பிரளயமதில் அடையும் என்மாயைதனில்
சிந்தையால் நானுமப்போ சிருஷ்டியை செய்யும்போது
அந்தப் பூதமனைத்தும் அவ்விதமே தோற்றுங்காண்.

8 தோற்றுமிப் பூதமெல்லாம் சுயம்மாயா கல்பிதமே
எற்றுமிச் செய்கைதானும் எஞ்சிய கருமசேஷம்
மாற்றியமையுங்கண்டாய் மன்னயிதில் கலங்கவேண்டாம்
போற்றுமிச் சிருஷ்டிதானும் பந்தமில் எனக்கில்லைகாண்.

9 முன்னம் நான்செய்த முதலமைப்புத்தான்
பின்னம்யாதொரு பேணுதலன்றியே
தன்னைத்தான்பெருக்கி தரணியை விருத்தியாக்கி
இன்னமும் முடிவுறாமை இலங்கும் விந்தையன்றோ.

10 என்னையுமென் இவ்வதாரத்தையும்
என்னவதாரமதின் இச்சிரேஷ்டமதையும்
ஒன்றுமேயறியாத அறிவிலா மூடர்கள்
என்தேகமதையவரும் எண்ணுவர் மானிடனென.

11 மோகத்திலாசையோடு மோககர்மத்திலும்
மோக அக்ஞானத்திலும் மூழ்கும் அவிவேகிகள்
மோகத்தை கொடுக்குமந்த முற்றுமாசுரமாயுள்ள
போகயிச்சையாலே பற்றுவார் பிரகிருதிகுணம்.

12 நாசமற்றயென்னை நாடும் பிரபஞ்சத்திற்கு
பூஜ்யதையுளான் புருஷோத்தமனென
மாசற்றவரும் மகாத்மாக்களென்னை
பாசமுள பக்தியினுல் பார்த்தா பஜிப்பார்காண்.

13 பிர்ம்மசுவரூபியாம் பகவானுமென்னை
சிரமமில்சமம் தமம்தயையுடனே
விரதமுடன் தயையோடு, வேண்டித்தொழுவோர்கள்
இருதயத்துளேனுன் இவ்வாத்மாஎன்றுரைத்தே.

14 ஆன அபேதபாவனையில் ஆராதிப்பார் சிலர்
தினபுத்தியுடன் சிலர் திருந்தாபாவனையில் சிலர்
ஞானமாம் எக்ஞமதால் நியமமுடன் பூஜிப்பார் சிலர்
ஈனமதிலொன்றுமில்லை எழிலர்ச்சுனு நீயறிவை.

15 எதோக்தமாய் செய்யும் எக்ஞமும் நானேகண்டாய்
வேதோக்தமாய்செய்யும் வேத அக்னியும் நானே
பேதமில்லாமல்செய் பிதுரெக்ஞமும் நானே
வேதமந்திரம் நான் வேததிரவியமும் நானே.

16 நானே தகப்பனுவேன்! நானே தாயாவேன்
நானே பிதாமகன் நானே தாதாவும்
நானே ஓங்காரம் நானே தேடும்வஸ்து
நானேரிச் சாமம் நானே எஜுர்வேதமும்.

17 என்னைவேண்டிய எவ்வுலகுமேகும்
பின்னை நின்றிங்கு பிரிதில் எவுவோனும்
அன்னதற்கிங்கு அத்தாக்ஷியும் நானே
என்னையே சிருஷ்டி ஸ்திதிகர்த்தாவெனக்கொள்.

18 மழைதனை மானிலத்தில் வருஷிப்பவன் நானேதான்
மழைதனை தடுத்தங்கு மானிலத்தைத் தபிப்பேனுன்
தழைமுதல்காணும் ஜகத் சிருஷ்டியையிங்கு
உழைத்துவாழசெய்யும் உண்மைநாசியும் நான்.

19 மூன்றுவேதங்களையும் முற்றுமுணர்ந்தார்கள்
சான்றுள எக்ஞமதால் சர்வேசனை பூஜித்து
தோன்றும் சுவர்க்கமதில் தேவபதம்பெறுவர்
ஆன்றோரவர்தவமும் ஆனபின்னிங்குறுவர்.

20 அன்னியமாம் வேறொன்றை ஆராதிப்பற்றவராய்
என்னையே சிந்திக்கும் எவ்வகை ஜனங்களையும்
அன்னவரின் அரும் அய்யோக க்ஷேமமதையும்
முன்னம் நான்வகித்தல் முக்கியமெனகொண்டுளேன்.

21 பெரும் விசுவாசத்துடன் பிறிதொலா தேவர்க்குசெய்
தரும் ஆராதனையெல்லாம் தனியெந்தனுக்கேயிங்கு
வருவனஆனாலும் வந்தனை செய்வோர்கள்
கருமமதை நீயும் கிரமமல்ல வென்றறி.

22 எல்லாக்கிரியைகளும் என்னை நோக்கியே
சொல்லிச் செய்யாதார் சுவரூப முணர்வாரோ
அல்லாமலவரவர் அவாக்கொள் பலன்தனை
நல்லனதாக்குதல் நான் செய்செய்கையாகும்.

23 தேவ விரதங்கொள்வார் தேவரிடம் சேர்வர்
ஏவிபிதுர்பால்செய்வர் இவ்வழிபிதுரையேபடைவர்
மேவி பூதப்பஜிப்பார் மெய்ப் பூதங்களையடைவர்
தூவுடனுடையார் தெரிந்தெனை பஜித்தல்வேண்டும்.

24 பக்தியுடன் பழமதையோ பூயிலே ஜலமதையோ
சக்திப்படி எவரேனும் சாற்றும் நான்கிலொன்றை
முக்தியளிக்கவல்ல முதன்மூர்த்தி யெந்தனுக்கு
சொக்கமனதோடு சமர்ப்பிக்க நானேர்ப்பேன்.

25 செய்வதையும் புசிப்பதையும் தானம் தபஸிவைகளையும்
செய்வதையுமின்னும் திருஹோமமதையும்
செய்வதையுமெந்தனுக்கு தூய்மைமனதோடு
செய்வானர்ப்பிதமே ஐயமுக்திகொள்வானே.

26 சத்துருவுமெனக்கில்லை சகாவுமெனக்கில்லை
சத்ஸ்வரூபியாம் நான் சகலத்திலும் சமமாவேன்
உத்தம பக்தியுடன் உண்மையிலென்னைபஜிப்போர்
எத்துணையுகொண்டிங்கு என்னையுமறவார்காண்.

27 ஆசாரத்திலவன் அனுசாரியானாலும்
பாசாங்கில்லாத பக்தி என்னிடம் கொள்வானேல்
ஏசாத அவன்செய்கை எழும் சிரேஷ்டமேயாம்
தாசாதி கருமத்தில் தகுந்தபக்தன் கெடுவனோ.

28 வேதமது படித்தலை வேண்டாதவைசியருடன்
ஓதுதல்ஒழித்தவராம் ஒருங்கே ஸ்திரீ சூத்திரரும்
பேதமைபுத்தியுடை பாபிகளுமேஎன்னை
சூதன்றி துதிப்பரேல் சுகதெகியடைவார்காண்.

29 இவர்களே இங்ஙனம் ஏற்ற கெதியடைவரேல்
தவமுடை பிராமணரும் தத்துவமுணர் ராஜர்களும்
பவமதைகடந்துமவர் புண்யலோக மெய்யாரோ
அவம்தீர்ந்து அருளடைய அர்ஜுனயோகியாவாய்.

30 எங்குமே நீகாணும் எல்லா வர்ணத்தாரும்
பொங்கும் பக்தியுடன் பூர்ணன்என்னை பஜிப்பரேல்
தங்குதடையின்றி தாண்டிடுவார் பிறப்பிறப்பை
எங்கும் நிறைந்தஎன்னை எழிலர்ச்சுன பஜியென்றார்.

9-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

## 9-வது அத்தியாய பாக்கள் விரித்துரை.

1-முதல் 7 பாக்கள் உலக சிருஷ்டிஸ்திதி முடிவுபற்றி கூறப் படுகிறது.

8, 9 பாக்கள் சிருஷ்டிக்குபிறகு சிருஷ்டிவஸ்துக்கள் தன்னை பெருக்கிக்கொண்டு போகுந்தன்மை கூறப்பட்டு பூர்வகர்மபலப்படி மாற்றியமைவது கூறப்படுகிறது.

10, 11, 12, 13 பாக்கள் பகவத் பக்தியும் ஆஸ்திகத் தன்மையும் வேண்டுமென கூறப்படுகின்றது.

14 வது பாக்கள் ஆராதனைக்கிரமம் மாறுபட்டிருப்பதைக் கூறி 15, 16, 17 பாக்களில் தானே எல்லாவற்றிற்கும் மேலென்றும் ஆதலால் மாறுபட்ட ஆராதனையும் தன்னையேவந்து சேருமென்று கூறப்படுகின்றது.

18, 19, 20, 21, 22 பாக்கள் தன்னை தொழுவோர்களுடைய எல்லாவித கஷ்ட நஷ்டங்களை தானே நல்லதாக மாற்றியமைப்பதை கூறி 23 பாவில் தேவபிதுர் பூதங்களைப்பஜிப்போர் தெரிந்து செய்வோரல்ல என்றுகூறி தன்னையே நேராகத்தொழல் நல்லதென கூறப்படுகிறது.

24 வது பாவிற்கு முகவுரையில் விரித்துரை கூறப்பட்டிருக் கிறது.

25 முதல் 30 வரை பாக்கள் பகவான் தான் நடுநிலைமைவகித்து எல்லோரையும் சமமாக எண்ணி பக்தி என்றதான ஓர்மார்க்கமே உத்தமமார்க்கம் மோக்ஷமெய்வதற்கு என்று கூறுகின்றார்.

9-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

## 10-வது அத்தியாயம் பாக்கள்.

1 நல்லதோள்வலியுடையாய் நவில்கின்றதைக்கேள்
சொல்தரும் வாக்கியமது சிறப்புடை சிரேஷ்டமது
எல்லா ரெஷிகளுடன் எண்ணற்றத் தேவர்களும்
பல்லாயிரம் படித்தாலும் பிரபு என்னையறிவரோ.

2 ஆதியற்ற என்னை அந்தமுமற்றுனென்றும்
ஜோதியுள்ளோனென்றும் ஜகத்தினீசனென்றும்
பேதியாதுணர்வான் பேதைமனிதனுனாலும்
நீதியது நிறைந்தான் நிறைஞானமுளானவன்.

3 புத்தியுடன் ஞானமும் பொறுமையும் மோகமின்மையும்
சத்தியமோடு சுகமும் துக்கமும் உற்பத்தியும்
சித்தியோடு நாசமும் சமமும் சந்தோஷமும்
மித்ரு சத்துருவிடம் மேன்மைசமமும் நான்.

4 தவத்துடன் பயமதை தவிர்த்தலும் பயமும்
அபகீர்த்தியோடு அருளுடையஜஸ்ஸும்
சுபமிந்திரியத்தை சுகமேயடக்குதலும்
சபலமுடை ஜீவர்க்கு சிருஷ்டித்தேன் நானிங்கு.

5 பூர்வீகரஷிகளாம் பிருகுவாதி ஏழுரஷி
தார்மீகரென்ற சாவர்ணீ நான்குமனு
ஏர்க்கனவே யறிவர் என்னுடை ரூபமதை
பார்தனில் காணுமந்த பலபூதங்களும் நான்.

6 நானே சகல ஜகத்தையும் நியமிக்கும் கர்த்தாவாய்
ஆனேன் நானென்று அறிந்துமே எனையிங்கு
கோனே என்றேற்றி கோவிந்தா என்றென்னை
ஞூனேதுமின்றி துதித்து பஜிப்பார்காண்.

7 என்னையறிந்தார்கள் இந்திரியமடக்கினவராய்
என்னிடம் மனம்வைத்து எப்பிராணனையுமறிந்தால்
தன்னினத்தார்கட்கு சாந்திதனையளித்திங்கு
என்னுடை கீர்த்திதனை இயம்பிமகிழ்வார்காண்.

8 இப்படி செய்யுமந்த ஞானயோகிகட்கு
செப்பும் புத்தியோகம் தெளிவுறத் தோற்றுவித்து
முப்பிறப்பிலவர் செய் முன் வினைப்பயன் போக்கி
இப்பிறப்பிலேயவர்க்கு இலங்கும் ஞானமளிப்பேன்.

9 அறமுணர் தந்த அர்ச்சுனன் அமலனைநோக்கி
பரம் பிர்ம்ம வஸ்துவே, பிரகாசரூபியே
பரமாத்மாவே யென்றும் பிறப்பிறப்பறுப்பா னென்றும்
பரம பவித்ரனென்றும் பாரினிலுரைப்பார்கள்.

10 தவமுடைத் தேவர்களும் தானவாதிகளும் உம்
அவதாரமு மறியார் ஆகாரமு மறியார்
பவத்தைத் தொலைத்துமே பவித்ர மோக்ஷம் நல்கும்
உவந்து உமையறிவார் உன்னையன்றி வேறுளரோ.

11 உம்முடை விபூதி மகிமை உணர்ச்சி தருவனவேயாம்
செம்மையுளதாமந்த ஜயவிபூதி ரூபமதால்
தம்முடைய மகிமையாலே, தரணியில் வியாபித்துளீர்
இம்மையிலீதைச் சொல்ல இசைந்தவர் நீரேயாவீர்.

12 கிருஷ்ணனும் சொல்வான் கிருபையுடனே யந்த
குருகுல சிரேஷ்டன்தன் குந்தி மைந்தனுக்கு
அருமையுடன் நான்கொள் அற்புத ரூபந்தன்னின்
பெருமையுளதைச் சொல்வேன் பேரன்பா கேளென்றான்.

13 எவ்வகை பூதங்களும் என் சிருஷ்டியேகாண்
அவ்வகை பூதங்களை ஆக்கியியக்கியழிப்பேன்
மூவ்வகை மூர்த்திகளில் முதன்மூர்த்தியும் நான்
அவ்வகைக்கெல்லாம் ஆதித்ய விஷ்ணுவும் நான்.

14 எங்கும் பிரகாசிக்குமந்த ஏற்றமுடை சூரியன் நான்
கங்குலில் காணுமந்த கருத்த சந்திரனும் நான்
துங்கமுள வாயுவில் தூய்மை மரீசி நான்
அங்கமாயிரங்கொண்ட ஆக்ஷிவேத சாமமும் நான்.

15 இந்திரியங்களில் மனமும் இம்மனமுடை புத்தியும்
இந்திரனெனும் தேவ இராஜ ராஜவும் நான்
சுந்திரமுடைருத்திரரில் சங்கருத்திரனும் நான்
மந்திரமுடையக்ஷரில் மாண்புடை குபேரன் நான்.

16 அஷ்டவஸுக்களிலே அக்னியும் நானேதான்
இஷ்ட பர்வதங்களில் இலங்கும் மேருவும் நான்
இஷ்டியுடை புரோகிதரில் பிரகஸ்பதியும் நானே
சஷ்டியில் பெருமையுடை, தளபதி கந்தன் நான்.

17 ஜலாசயங்களிலே சமுத்திரம் நானேதான்
கலா ஞானரெஷிகளில் கல்வியுள பிருகுவும் நான்
எலாப்பதங்களிலும் எழும் ஓங்காரமாவேனன்
எலாயெக்ஞமதிலும் எண்ஜப யெக்ஞமும் நான்.

18 ஹிமம் அதிகமுடை ஹிமயகிரியும் நான்
நமஸ்கரிக்கும் விருக்ஷமதில் நல்அசுவத்தம் நான்
விமலரும் ரெஷிகளில் வீணையுள நாரதரும்
கமல முகநெந்தர்வரில் கான சித்ரசேனன் நான்.

19 ஞானமுடையோரில் ஞானகபிலரும் நான்
ஊனமில் குதிரைகளில் உச்சைசிரவஸ் நான்
மானவ மனிதர்களில் மன்னனும் நானேதான்
ஊனமில் அர்ஜுனு உள்நுட்ப மதிந்துகொள்.

20 வல்லாயுதங்களில் வஜ்ஜிராயுதமும் நான்
நல்லாவினங்களில் நல்லகாம தேனுவும் நான்
நல்லெழில்உடைத்தாரில் நிறையெழில் மன்மதனன்
சொல்வாசுகியும் நான் சொர்கிகர் பாம்புகளில்.

21 இலங்கும் நாகங்களில் இராஜசேஷன் நான்
ஜலங்களிலேயிங்கு இராஜவருணன் நான்
குலம்குறி பிதுருக்களில் கூறு அரியன் நான்
நலம்கண்டு நன்மைசெய் நமனும் நானேகாண்.

22 பல்விதநைத்தியர்களில் பக்த பர்கலாதன் நான்
சொல்கணமதிலே சுவரூப கணிகாலம் நான்
பல்வித மிருகங்களில் பலத்தசிங்கம் நான்
மெல்விறகு பக்ஷிகளில் மேன்மைகருடன் நான்.

23 எங்கும் பரிசுத்தம்செய் ஏகவாயு நானேகண்டாய்
துங்கமுள சூரர்களில் தசரத ராமன் நான்
கெங்காநதியும் நான் கங்கையில் காண்மீனதில்
மங்குதலில்லாதந்த மகர மத்ஸியமும் நான்.

24 ஆதியில் பூதங்களை ஆக்கியவனும் நான்
பீதியில்லா பூதங்களை பின்நாசம் செய்பவனுன்
சேதிசொல் வித்தையிலே, சுவரூப சித்திவித்யாவும்
வாதிப்பவரிடையிலே வாதமும் நானேதான்.

25 ஆதி அக்ஷரமதில் அகரஎழுத்தும் நான்
சேதிசமாஜமதில் துவந்த சமாஜமும் நான்
நீதியாய் நாசம்செய் நியதிகாலனும் நான்
சூதிலா கர்மம்செய் சதுர்முக பிர்ம்மாவும் நான்.

26 மிருத்யுவாயிருப்பேன் மீதாமல் நாசம் செய்வேன்
உருதிதரும் பிறவிநான் உத்தம ஸ்திரீகளிலே
ஸரஸ்வதி லெக்ஷ்மிநான் தைரியமும் நான்
பொறுமையும் நானே போற்றும் ஞாபகமும் நானே.

27 சொல்ஸாம வேதமதில் பிரகத்ஸாமம் நான்
நல்ஸந்தஸ்க்களில் நயமுளகாயத்ரீ நான்
எல்லா மாதங்களிலும் ஏற்றும் மார்கழி நான்
வல்லாறு ரெதுக்களில் வஸந்த ரெதுவும் நான்.

28 மோசம் செய்யுமந்த மோகச்சூதும் நான்
தேசுடையாரிலிங்கு தேஜஸ்வியும் நான்
மாசில் ஜயமும் நான் மங்கா முயற்சியும் நான்
நாசமில் ஸாத்வீகர்களில் நல்ஸத்வகுணம் நான்.

29 யாதவர்களிலிங்கு யானேயோகி கிருஷ்ணன்
கோதில் பாண்டவர்களில் காண்டீபனும் நானே
வேதமுனிவர்தம்மில் வேதவியாசரும் நானே
காதல் காவ்யரசில் கண்ணிலாசுக்ரர் நான்.

30 தண்டிப்போர் தம்மில் தண்டனையும் நானேதான்
கண்டிடும் ரகஸ்யமதில் கூடும்மௌனமும் நான்
அண்டிடும் தத்துஞானி அகத்துறை ஞானமும் நான்
விண்டசாமதான பேததண்டமும் நான்.

31 காணும் பூதங்களில் காணும்வித்தும் நான்
தோணுமெலாவஸ்துவின் தேங்கிய பூதமும்நான்
பேணுவிபூதிரூபம் பெருமையுடைத்தயிதை
வேணுமென்றுந் தனக்கு விவரித்துரைத்தேன் நான்.

32 காந்ததனையுடைத்தும் குணங்கள் தமையுடைத்தும்
ஏந்தும் தனமுடைத்தும் எந்த எந்த வஸ்துவிலும்
மான்யதேஜஸும் நான் மகிமையுள விபூதிரூபம்
கோன் அர்ஜுனனே கருத்தனில் கொள்வாயே.

10-வது அத்தியாயம் செய்யுள் முற்றிற்று.

---

## 10-வது அத்தியாயம் விரித்துரை.

1-முதல் 8-பாக்கள் பகவான் வாக்கு

9, 10, 11 அர்ச்சுனன் வாக்கு

12-முதல் 32-வரை பகவான் தன் சுவரூப விஸ்தாரபற்றி விரித்துரைக்கின்றார் ஆகவே 10-வது அத்தியாயம் முழுவதும் 11வது அத்தியாயம் விசுவரூப தெரிசனத்திற்கு அடிப்படையாக கூறப்பட்டிருக்கிறது. 10வது அத்தியாய 32பாக்களும் ஒவ்வொரு கீதா வாசகர்களும் ஊன்றிபடிக்கவேண்டும் அப்படி படிக்கும்போது உலக அமைப்பு. கடவுள் சம்பந்தம் சிருஷ்டிரகசியம் முதலியனவைகளை தெரிந்துகொள்ள முடியும்.

**10-ல் 6-வது பா.**

"நானே சகல ஜகத்தையும் நியமிக்கும் கர்த்தவாய் ஆனேன் நானென்று அறிந்துமே யெனையிங்கு" நானே சகல ஜகத்திற்கு கர்த்தாஎன்று சொன்னதோடு நில்லாமல் ஆனேன் நானென்று அறிந்துமே யெனையிங்கு என்னை கர்த்தா ஆக்கினது யார்? ஒருவருமில்லை நானே ஆனேன் என்கின்றார். ஆகையால் சிருஷ்டி ஸ்திதிஸம்ஹாரியும் இந்த சகல உலகத்திலேயும் காணப்படுவதும்' காணப்படாததும் தானேஎன்று கூறப்படுகின்றது.

ஆதலால் பூர்ண நம்பிக்கை கடவுளிடம் கொள்ளல்வேண்டும்.

**10-ல் 7-வது பாவில்.**

என்னையறிந்தார்கள் இந்திரிய மடக்கினவராய்
என்னிடம் மனம்வைத்து ஏப்பிராணனையுமறிந்தால்

என்பதிலிருந்து கடவுளென்டென்றறிந்தோர்கள் இந்திரிய மடக்கினவராய் முன் 6-வது அத்தியாயத்தில் சொன்னதுபோல் எல்லாவற்றிலும் மிதமாக நடப்பவர்களாயிருந்துகொண்டு என்னை த்யானித்து எப்பிராணனும் நான்தான்என்று அறிந்து

" தன்னினத்தார்கட்கு சாந்திதனையளித்திங்கு தன்போன்ற ஜீவனுடைய எல்லாவருக்கும் சாந்திதனையளித்திங்கு" என்னுடை கீர்த்திதனை இயம்பிமகிழ்வார்காண் என்று கூறப்படுகின்றது. உலகத்தில் மிக தனவந்தனுயிருந்துகொண்டு சகல வஸ்துவினையும் தனக்கென்று அடைந்து தன்போன்ற ஜீவர்கள் பசியால் துடித்துக் கொண்டிருக்கும்போது தான்மட்டும் வயிறுபுடைக்கஉண்டு மீதியை பிறருக்கு தவராமல் சேமித்துவைத்து அன்னிய ஜீவர்களுக்கு பலவிதத்திலும் கொடுமைகள் செய்யும் தனவந்தர்கள் எத்தனையோ பேர் உலகத்திலுள்ள மற்ற ஜீவவந்தர்களை கெவனியாமல் அவர் களுக்கு ஓர் சாந்தியும் தாராமல் தனக்கு தனக்கு என்று ஆஸுர புத்தியோடு இருப்பது இங்கு கண்டிக்கப்படுகின்றது. மேலும் என் கீர்த்திதனை இயம்பி மகிழ்வார்காண். என்று கூறுதலையும் கவனிக்கவேண்டும். சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணன் தன்னுடைய அவதார காலத்தில் சக்ரவர்த்தியாகயிருக்கவில்லை. ஏனென்னில் இந்த அவதாரமே உலகிற்கு நடந்துகாட்ட எடுத்துக்கொள்ளப்

பட்டதால் தான் ஓர்சுளுவில் சக்ரவர்த்தியாக அமைய இடமிருந்தும் அநேக ராஜர்களையுடையதான தேசம்தான் நல்லதென்றும் ஏகசக்ராதிபத்தியம் கஷ்டத்தையளிக்குமென்றும் உணர்த்தவே என் கீர்த்திதனை இயம்பி மகிழ்தற்குரிய செய்கையே நலமென்றும் அடக்கியாளுதல் நல்லதல்லஎன்றும் உணர்த்தப்படுகிறது. மேலும் பக்தன் எல்லோரையும் சமமாகயெண்ணி ஜீவகோடிகளுக்கு அளிக்கவேண்டிய பங்குகளையளித்து தன் கடமையை, சிருஷ்டியை ஸ்துதிக்கதக்கவண்ணம் செய்துகொள்ளவேண்டும். மேலும் கடவுள் இருக்கின்றார் என்றால் கடவுள் சிருஷ்டிக்குட்பட்ட ஜீவர்களும் கடவுளின் பிரஜையென்றும் அப்படியே ஒவ்வொரு பிரஜையும் தனித்தனி அரசனென்றும் அரசன் சாதாரண மனிதனைக்காட்டிலும் எவ்விதத்திலும் உயர்ந்தவனில்லையென்றும் உணர்த்தப்படுகிறது. ஆகவே சகல ஜீவகோடிகளுக்கும் சாந்தியையளிக்க வேண்டுமென்றால் ஒவ்வொருவனும் பரஸ்பரசாந்திக்கு உதவுதல் முக்கியதற்மமெனக் கூறப்படுகின்றது.

முற்றிற்று.

—

இனி பகவான் கூறுவதை 11-வது அத்தியாயத்தில் படிப்போமாக.



## மருத்துவ சாஸ்திரம்

**Dr.** இராதகிருஷ்ணய்யர் அவர்களால் இயற்றப்பட்டது. ஒவ்வொரு ஸ்திரீகளும் வாசிக்க வேண்டியதவசியம். விலை ரூ 2--8--0யை ரூ 1--8--0 ஆக குறைக்கப்பட்டிருக்கிறது

மதுமேகம் } க்ஷயரோகம் } ஷடியாசாலேயே எழுதப்பட்டது. தனித்தனியாக விலை அணா 8.

எல்லா புஸ்தகமும் சேர்ந்து ஆர்டர்கொடுப்போருக்கு ரூ 2-0-0க்கு கொடுக்கப்படும்.

வேண்டுபவர் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்

R. SITARAM,
வைத்தியப்பபுரம்தெரு, கல்லிடைக்குறிச்சி.

சில காப்பிகளே இருக்கின்றன.

# பகவத் கீதை.

11, 12-அத்தியாயங்கள்.

பாக்கள், விரித்துரை.



ஆக்கியோன்,

## மஹாரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி,



# பகவத் கீதை.



## 11-வது அத்தியாயம்.

இந்த அத்தியாயத்தில் பகவான் அர்ச்சுனனுக்கு தானே கடவுளின் அவதாரமெனக் கூறி அர்ச்சுனன் சம்சியம் தீர, விசுவ ரூப தெரிசனம் காட்டுகின்றார். எத்தனையோ தடவைகளில் தன்னை அமானுஷ்யனெனக் காட்டிக்கொண்டிருக்கும் பகவான் ஏன் விசுவ ரூப தெரிசனம் காட்டி நம்பிக்கை வருத்தவேண்டும். திரௌபதையின் மானசம்ரக்ஷணத்திற்கு கோடிக்கணக்கான வஸ்திரங்களை ஈய்ந்ததொன்றே போதாதோ! அல்லது தூது சென்றயிடத்தில் தானொருவனாய் சூழ்ச்சி வென்றது ஒன்று போதாதோ! இப்படிப்பட்ட கேள்விகளெழலாம். 10-வது அத்தியாயத்தில் தன்னை விஸ்தாரமாகச் சொல்லிக்கொண்டபடியே 11வது அத்தியாயத்தில் விசுவ ரூப தெரிசனம் காண்பிக்கின்றார். மேலும் தன் விசுவரூபமூலம் அர்ச்சுனனுக்கு பயத்தினாலும் யுத்தம் செய்துதான் ஆகவேண்டுமெனவும் சொல்வது போலும் தோன்றும். உண்மையை ஆராயுமிடத்து உலகத்திலமைந்துள எல்லா நல்ல குணங்களும் நல்லதல்லாத குணங்களும் தானே என்று சொன்னது நிரூபணம் செய்ய வேண்டுமென்றால் இந்த விசுவரூபதெரிசனம்தான் முக்கியதையாக காண்பிக்கப்படவேண்டும். ஆகலால் கடைசியாக அர்ச்சுனனுக்கு விசுவரூபதெரிசனம் ஆத்மவிவேசனமளித்ததுபோல் வேறொன்றும் உதவவில்லையென்று ஏற்படுகின்றது. விசுவரூபம் பார்த்தபின் தான் தன்னைத் திடப்படுத்திக்கொள்ளுகிறான் அர்ச்சுனனும், மேலும் இங்கு கடவுளின் ரூபமென்ன அரூபமுடையவனா ரூபமுடையவனாயிருந்துகொண்டு தன்னை மறைத்துக்கொள்ளும் அரூபவானா

இவைபோன்ற கேள்விகளுக்குப் பதில்தரவேண்டும் அவைகளுக்கும் பதில்தருகின்றார். இவ்வளவு பெரியதான ஓர்ரூபம் அர்ச்சுனனது சாதாரண மானிடக்கண்கள்மூலம் காணவல்லதில்லையென கூறப்படுதல் முக்கியம். ஆதலால் அர்ச்சுனன் தன் சுவரூபத்தைக் காணவேண்டி கண்களும் புதிதாக அளிக்கப்பட்டது என்று தோன்றுகிறது. கொடுத்த கண்கள் பார்வையுடைய தோற்ற அனுபவமா அல்லது சிந்தனை சக்தியினால் ஸ்மரணமாத்திரத்திற்கு அனுபவமுடையதா என்ற கேள்விகளெழ அர்ச்சுனன் தான் கண்ணால் கண்டு கூச்சமடைந்து பயமுண்டாகி விசுவரூபதெரிசனம்போதும், பகவானை உம்முடைய முன் சுவரூபம்காட்ட கேட்கிறான். ஆதலால் கண்டவை கண்ணாலாகிய அனுபவமே. சிந்தனை சக்தியினால் கல்பித்துகொண்டதல்ல, மேலும் இந்த விசுவரூபதெரிசனம் தன்னை காட்டிக்கொண்டதோடில்லாமல் தன்னை மறைத்துகொண்டுமிருக்கிறது. கடவுளை நேரில் பார்க்க விரும்புகிறவர் அர்ச்சுனன் கண்டதுபோல் விசுவரூபதெரிசனம் காணவிரும்பார்கள். அதுகோரமானது பார்க்க பயங்கரமானது. அர்ச்சுனனே பயப்படுகின்றான். மருமங்களஸ்வரூபங்காண வேண்டிக்கொள்கிறான். இவைகளெல்லாம் வெகு முக்கியமானவை. கடவுள் சிருஷ்டியில் மனிதன் உத்தம சிருஷ்டியெனக் கண்டுகொண்டாலும் பகவானுக்கு மனித சிருஷ்டி சொல்பமானதுதான். இதிலும் மேலாக சிருஷ்டிக்க வல்லவரென்றுதான் கொள்ளவேண்டும் இப்படி பகவானிடத்தில் எல்லாம் வல்லவர் எங்கு நிறைந்தவர் கிருபாளு பக்தர்களின் சம்சயம் தீர்ப்பவர் பக்தர் சம்சியம் தீர்ப்பதில் தன்னைத்தோன்ற செய்பவர் என்றும் கண்டுகொள்ளவேண்டியதுதான். இது முக்கியமானது. இங்கு இந்த யுத்தத்தை நிறுத்துவதற்கு தன்தயாசக்தியைக் காட்டக்கூடாதா? ஏன் இந்த ரத்தம் சிந்தவேண்டும் என்று கேள்வியும் கேட்கப்பட்டு இப்படிப்பட்ட நாசகுரூரகிருத்யத்திற்கு கருணைக்கடல் கடவுளே காரணமென்றால் பக்தர்களுக்கு பயமுண்டாகாதா என்ற கேள்வியும் கேட்கப்படலாம் உண்மைதான் இங்கு பகவான் தன்னை நாசமூர்த்தியென்று சொல்லிக்கொள்வதைக் கேட்க வேண்டும். மேலும் ஸாது ஸம்ரக்ஷணையும் துஷ்ட ஸம்ஹாரத்தையும் தானேசெய்வேன் என்கின்றார். இந்த யுத்தமூலம் இத்தர்மம் நிறைவேற்றவே யுத்தத்தை உண்டுபண்ணுகின்றார்.

## அர்ச்சுனன் வாக்கு.

1 என்னை ரக்ஷிநீர் இதை யுரைத்தலாலே
முன்னம் நானடைந்த மோஹமது தீரக்கண்டேன்
தன்னுடைய மகிமையும் தரணியில் பிறப்பிறப்பும்
செந்தாமரை கண்ணனே செய்மகிமைதா னென்னே.

2 தாம் எனக்குச் சொன்ன தம்முடை மகிமை பற்றி
ஓம் என்ற தத்துவமும் ஓங்கார மகிமையுடன்
நாம்பார்க்க வேண்டி நம்பாருமுய்யும்வண்ணம்
தாம் எனக்குக் காட்டி தைரியம் செய்வீரென்றான்.

## பகவான் வாக்கு.

3 குந்தி புத்திரா நீ குறிப்புடனே பார்ப்பாய்
இந்த விபூதி ரூபம் இலங்கும் தன்மை காணாய்
அந்தமுள அவயவங்கள், அதிக வர்ண முடைத்து
எந்த ரூபமதுவும் எண்ணற்ற ரூபமுடைத்து.

4 ஆதித்யர்களைப்பார் அசுவினி தேவர்களைப்பார்
ஜோதிருத்ரர்களைப்பார் சுயம்பிரகாசர்களைப்பார்
நீதி மருத்துகளைப்பார் நிரந்தர ஆச்சரியங்களைப் பார்
ஓதிக்கண்ட ஜகத்தை ஓரிடத்திலென்னிடம்பார்.

5 உன்னுடைய கண்ணாலே உண்மை விசுவரூபங்காண
வன்மையற்று தறிந்து வல்ல ஞானக்கண்ணை
உந்தனுக் கருளியுளேன் உண்மை யென் சுவரூபமதை
சிந்தனைசக்தியோடு சிறப்புடன் பார்க்கவேண்டி

6 என்றிவ்விதம் கூறி, எழிலுடையர்ச்சுனனுக்கு
அன்றலர்ந்த ஆம்பலென ஆயிரம் முகங்களுடன்
செந்தாமரையோவென சேர்ந்த கண்களுடன்
சிந்தையிலும் காணாத திவ்ய ரூபம் தந்தார்

7 தந்தமுதல் தங்கமொடு திவ்யாபரணங்கொண்டு
விந்தை தரும் மாலையுடன் விவித வஸ்திரமோடு
கந்தமதில் சிரேஷ்டமதாம் கதித்த வாசமுடன்
எந்தத் திக்கும் ஆக்ரமிக்கும் இலங்கு ரூபம் என்னே.

8 ஓராயிரம் சூரியர்கள் ஒன்றெனப் பிரகாசித்தாலும்
ஓராது அக்காந்தி தரும் ஒளிர் வீசும் ரூபமதை
நேராகவே பார்த்தான் நீணில ஜகத்தை யெலாம்
சீரான விசுவரூபம் ஜகத் ஜோதி கிருஷ்ணனிடம்

9 கண்டான் ரூபமதை காண ஆச்சரியங்கொண்டான்
கொண்ட ஆச்சரியமதுவும் கொணர்ந்தது மயிர்கூச்சம்
விண்டுணர் விச்வரூபம் விரைவில் சிரத்தால் கொண்டு
கொண்டே கை கூப்பி கசடற பேசுவானே.

10 இந்திராதி தேவர்களையும் இத்தேவர் தம் மீசனையும்
சுந்திர கமலமிசை சுகஸ்தான பிர்ம்மாவும்
மந்திரம் கற்றந்த மஹரிஷி வஸிஷ்டருடன்
பந்தி யெனபாம்போடு பூத கூட்டமும் கண்டேன்.

11 எண்ணற்ற முகங்கள் எண்ணற்ற கால் கைகள்
எண்ணற்ற ரூபங்கள் எங்கெங்கும் தோன்றிடவே
கண்ணினில் ஆதியோடு காணேன் அந்தமதை
விண்ணினைப்பிளந்து விரிந்துளது உன் ரூபம்.

12 ராஜர்கள் தரிக்குமந்த ரத்ன கிரீடமொடு
தேஜஸ் கூட்டமென தேயுப் பிரகாசமும்
நாசம் செய்யுமந்த நவீன கதாயுதமும்
மாசில் காண்கின்றேன் மாண்புடை சக்ரமும்

13 வல்வேதோக்த கருமம் வேண்டும் பிர்ம்மம் நீர்
நல்லிப்பிரபஞ்சத்திற்கு நாடுமாதாரம் நீர்
சொல்தருமாமிதை சாசுவதமாய் ரக்ஷிப்பீர்
எல்லா வஸ்துவிலும் இயங்கும் புருஷர் நீர்.

14 ஆக்கலமையழித்தல் செய்வோரே அபரமித வீர்யமுள்ளோனே
நோக்கநான் எத்தனைபோ நெடுங்கரம் காண்கின்றேன்
நீக்கலில் சந்திர சூரியர் நின்நேத்திரமாயமைந்தார்கள்
ஊக்கமுள உமதுமுகம் உந்துமெழு மக்னியேதான்.

15 ஆகாசம் பூமி அந்திரம் அனைத்து மாக்ரிமித்தே
மேகாதி திக்கெல்லாம் பேவியே வியாபித்திர்
தேகாதியாலமைந்த தெளிவுடை உலகினிலே
மோகாதி உம்ரூபம் மிகபயமளிப்பதுவே.

16 ஏவுமெத்தேவர்களும் ஏழையென சரண்செய்வர்
மேவுமின்னல்பயம் மிகக்கொண்டஞ்சலித்தே
கூவுதொனி ரெஷிகள் குறைவிலா க்ஷேமம்நாடி
நாவினுலெல்லோரும் நினையே துதிசெய்வார்.

17 இலங்கும் ருத்திரரும் இந்திராதிவசுக்களும்
துலங்கும் ஸாத்தியாளும் தேவரும் விசுவேதேவரும்
நலந்தரும் அசுவனிதேவரும் நன்மையுடை மருத்துக்களும்
குலம் செழிக்கச்செய்யும் கூறும் பிதிர்தேவரும் நீரே.

18 பலமேபெரிதாகி பல அஸுரகுலத்தோரும்
நல்வடிவுடைய நாட்டிய கந்தர்வரும்
தலத்தில் கூடிநிற்கும் சித்தாளும் யக்ஷர்களும்
வலம்வந்து வந்தித்து வான்ரூபமதை பார்ப்பார்.

19 அநேகமுகமுடையீர் அநேக கண்களுடையீர்
அநேக கைகளோடு அநேக துடையுடையீர்
அநேக பாதங்களையும் அநேக வயிறுடையீர்
அநேக பல்லாலே அதிபயங்கொண்டேனுன்.

20 மகாவிஷ்ணுவும் நீர் மண்ணுகாசத்தை நிரப்பினீர்
முகாரவிந்தமாம் உம் முகம் ஜ்வலிப்பதையும்
தகாத நோக்குடனே திறந்த வாயுடையாய்
சகாநான் பார்ப்பதற்கு சகிக்க பயங்கொண்டேன்.

21 சகல தேவர்கட்கீசனே ஜகத்காரணனே
அகல கோரபல்லால் ஆனபயங்கரனே
சகலதிக்குகளும் சரிவரயறியேனுன்
சுகமிலா மெந்தனுக்கு சுயரூபம் தெளிப்பீரே.

22 திருதாஷ்டிர புத்திரர்களாம் துரியோதனுதியர்கள்
துரோணருடன் பீஷ்மரும் சூத புத்திரகர்ணனும்
தருபூமியிடைவந்து குழுமியுள ராஜர்களும்
தருமர் முதலாமெங்கள் சாதிக்கூட்டமு மிங்குளவே.

23 இங்குகாணும் இக்கூட்டமெதெல்லாம்
தங்குதலன்றி தமதுவாயின்
தொங்குமந்த தந்த இடைகளில்
எங்கும்சென்று இறந்துபோவனவே.

24 நதிகளெல்லாம் நாடியே கடல்தனை
கெதியெனயடைந்து கேண்மையுறுவதேபோல்
மதியுடைசூரராய் மாணில பிறப்பினர்
அதிகமாம் உம் அகன்ற வாயிலடைவர்.

25 வெட்டுப் பூச்சிகள் விளக்கினையண்டி
தட்டுக்கெட்டு தன்னுசமடைதலும்
ஒட்டு ஒன்றுமிலா உமது வாயினிலே
கட்டுண்டு ஜனங்கள் கனநாசமடைவர்.

26 இலங்கும் விஷ்ணுநீர் இலக்கிய தேசுடையீர்
துலங்கும் பிரபஞ்சமதை தூய்மையுடன் வியாபித்து
நலத்தின் பொருட்டுநீர் நானில ஜனமதினை
விலங்கினம்போலவே வேண்டியே யுண்கிறீர்.

27 கலங்குகின்றேனுன் காணும் ரூபமதால்
துலங்குதல் செய்வீர் தூய்மை சுவரூபமதை
நலம்வேண்டி உமையே, நாடி நமஸ்கரித்தால்
பலமிலா எந்தனுக்கு பேதமையை நீக்கிடுவீர்.

28 கிருஷ்ணனும் சொல்வான் கிருபையுட அர்ச்சுனனுக்கு
கிருத்திருமகுரூர காலகால'னும் நானே
வருத்தியே ஜனமதை வதைப்பவனும் நானே
இருக்குமெல்லாரையும் இறப்பிப்பேன் யுத்தமதில்.

29 ஆதலாலெழுவாய் அமைந்த சமருக்கு
நாதனீயென்று நாட்டில் புகழுறு
சூதன்றிநீயும் சுகபோகம்பெறு
சாதலடைந்தோரை ஜயிப்பது எளிதன்றோ.

30 நானே கொல்வேன் நானே கொன்றுள
சேனைத்தலைவன் துரோணனையும் பார்.
கோனே நான் கொன்ற கர்ண பீஷ்மரைப்பார்
ஏனேயினியென் எழுந்தே யுத்தம் செய்.

31 அர்ச்சுனனும் சொல்வான் ஆங்கு கிருஷ்ணன் நோக்கி
தரும் கீர்த்தியதாலே சந்தோஷமுடைத்ததுலகு
கிருத்திரம ராக்ஷஸரும் கோடியெலாம் ஓடிடுவர்
தருமம் செய்சித்தர்களும் தயைநாடி வந்திடுவர்.

32 சொல் மஹாத்மாவும் நீரே தேவர்க்கீசன் நீரே
நல் உலகினர்க்கு நயமுடை ஆசிரியரும் நீரே
வல்சத்சூக்ஷ்மமும் வானில்மூல காரணரும்
எல்லா பிர்ம்மம் நீரே எனுனை பிர்ம்மாவணங்கார்.

33 காண் விசுவரூபமுடையீர் ககனதிபதியும் நீர்
தோன்றும் ஆதிபுருஷன் நீர் சகல உலகனுசன் நீர்
ஊன்றியறியவேண்டி உமையே நாடிநின்றால்
சான்றில் நீர் எமக்கு சாற்றும் வஸ்துவும் நீர்.

34 வாயுவும் எமனும் நீர் வருணனுமக்னியும் நீர்
தேயுவும் சந்திரனும் நீர் சதுர்முக பிர்ம்மாவும் நீர்
தாயும் தகப்பனும் நீர் தனையன் உமக்கு நானும்
ஆயுள் காலம்வரை ஆயிமாயிரம் நமஸ்காரம்.

35 முன்புறத்தில் நான் முன்னின்று தொழுவனே
பின்புறத்தில் நான் பின்னின்று தொழுவனே
அன்றிநீர் எங்குமுள அப்புறத்தைத் தொழுவனே
கன்றுடன் வாழ்ந்தஉமை கண்டு கண்டு தொழுவேனே.

36 தோழா என்றுனைக்கூவி தோன்றியவெலாம் சொன்னேன்
பாழான என்செய்கை பரிகசம் தருமன்னோ
வாழாமல் நானொருவன் வாயினால் சிந்தியவை
ஊழான என்வினையால் ஊகித்திலேன் நான்.

37 அண்ட சராசரங்களுக்கும் அகன்ற உலகினற்கும்
துண்டு பிரபஞ்சத்திற்கும் தூண்டும் பிதாவானீர்
கண்டுகொள்வதற்கும் கண்களை தந்துதவி
விண்டகுருவும் நீர் விளம்பும் குருசிரேஷ்டரே.

38 தமக்கு நிகர்தாமேயானீர்
உமக்குமேலே ஒருவருமிலர்
எமக்கருளும் என்குல குருவே
சுமக்கும் தன்மை சுளுவில்கண்டேன்.

39 புத்திரன் அபருதமதை பிதா பொறுப்பதேபோல்
உத்தமப் பிரியையின் உணர்வில் செய்கையை
சித்தமதில்கொள்ளா சீருள கணவன்போலும்
எத்தன்மையிலும் என் இவ்வபராதம் க்ஷமியுமய்யே.

40 இன்று கண்டேனிந்த இவ் விசுவரூபமதினை
நன்றுகளித்தேன் நான் நயமுடன்தானிங்கு
குன்றும் மனமதுவும் கூறும்பயமுடைத்து
முன்னின்றவாறிங்கு முகூர்த்தம் செய்வீரே.

41 உய்யவே உமது அந்த உயர்ரூபங்கண்டேன்
கையில் சக்ரமும் கதையுங்கண்டேன்
பையவே உமதுஎன்ற பழையரூபம் தன்னை
செய்யவே இங்குகாண ஜயமெனக்கொள்வேனே.

42 என்றவ்வர்ச்சுனனும் ஏங்கி ஏங்கி கேட்க
மன்றெல்லாம் வியாபித்து மறைத்துளவ்வரூபதை
குன்றவே செய்தங்கு கிருபைதனையீந்துமே
என்று நீகாணும் எழில் ரூபமீதென்றார்.

43 உத்தமா மிவ்வுருவம் ஒருவருமறியார்காண்
உத்தமனுந்தனுக்கு உவந்தருளினேன் நான்
சித்தமகிலனுக்ரஹம் சிருடன் செய்யவேதான்
மத்தியில் நிற்குமந்த மாயைதனை நீக்கினேன்.

44 நின்னையன்றி யொருவரும் நீணிலத்தலறிந்ததில்லை
மன்னுவேதங்களோடு மகிமையுள சூத்திரங்களும்
இன்னுமுள எக்ஞமும் ஏழ்மை தபஸினுலும்
முன்கண்டரூபமது முடிக்கவல்லதில்லை காண்.

45 இப்பயங்கரமாம் இவ்வுருவம் கண்டு
எப்பவும் பயங்கொள எழிலர்ச்சுனவேண்டாம்
செப்புமக்ஞானத்தை சிந்தையால் தள்ளிநீயும்
இப்பவுமிங்கியங்கும் எழில்ரூபம் காண்பாய் நீயும்.

46 முன்னம் தேரில்நின்ற முகமோடு பாகன்தோன்ற
உன்னத உருவங்கண்ட உணர்வுளர்ச்சுனனும்
மன்னுபரமனேக்கி பவித்ரனேனென்றும்
இன்னும் பற்பலபேசி இலங்கி மகிழ்வானேதான்.

47 சந்தமுள வேதங்களாலும் சரியெக்ஞமதாலும்
இந்த யிவ்வுருவமது இந்திரர் காணலரிது
பந்திக்கும் பக்தியோடு பரமன் எனைக்காணல்
விந்தையில் விந்தையென விஜய நீயறிவாயிங்கு.

11-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

## 11-வது அத்தியாயம் விரித்துரை.

11-ல் 36-பா. "தோழா என்றனைக்கூவி தோன்றியவெலாம் சொன்னேன். இவ்வளவு மகாசக்திவானுகிய தம்மை தோழா என்றனைக்கூவி தோன்றியவெல்லாம் சொன்னேன் என்று அர்ச்சுனன் வருத்தப்படுகின்றான். மேலும் பாழான என்செய்கை பரிகசம் தருமன்னே" இப்படிதோழனென உன்னை நினைத்து நடந்து கொண்டது கேலியாகயிருக்கிறது. நீ எனக்கு வாஸ்துவமாக தோழனுனல் நான் நடந்துகொண்ட மாதிரியைக்கண்டு கேலிசெய்து விடு. மனதினில் கொள்ளாதே என்று அர்த்தம் தொனிக்கிறது.

சரிசமமான அந்தஸ்துளவரிடம் தோழமை பேசலாம். இங்கு பகவான் கிருஷ்ணமூர்த்தியின் நிலையென்ன? அர்ச்சுனன் நிலையென்ன? ஆதலால் தோழனாக கொள்வதற்கு சம அந்தஸ்தாயில்லை ஆனால் எல்லாவிதமாயிருக்கும் நீ தோழனாகவுமிருக்கக்கூடதா? என்றும் குறிக்கின்றான். வாழாமல் நாமொருவன் வாயினால் சிந்தியவை ஊழான என்வினையால் ஊகித்திலேனான் என்கின்றான். வாயினால் சொல்லத்தகாதவார்த்தைகளை அறியாமையினால் வினைப்பயனில் சிந்திவிட்டேன் என்று கூறி

37-வது பாவில் பகவானை பிதாவாகவும், குருவாகவும் ஏற்றுக்கொண்டு

38-வது பாவில் பகவானாகிய தமக்கு சரிநிகர் தானேயானீர் என்று கூறிவிட்டு

39-வது பாவில் "புத்திரன் அபராதமதை பிதாபொறுப்பதேபோல்" தன்னை பொறுக்கவேண்டுமென்கிறான். புத்திரன் என்னவிதமான தவறுதல் செய்தபோதிலும் புத்திரனை பொறுப்பது பிதாவின் சகஜம். "பெற்றமனம் பித்து பிள்ளைமனம் கல்லு" என்ற வசனப்படி பிதா எப்போதும் புத்ரவாத்ஸல்லியம் மிகுதியாக காண்பவிப்பார். துரியோதனன் எத்தனையோ தவறுதல்கள் செய்கிறான் என்று அறிந்திருந்த திருதராஷ்டிரன் தன் புத்திரனாகிய துரியோதனனை மன்னித்தும் தன் புத்திரன் பக்கமே நின்றான். துரியோதனனை மன்னித்த பிதா அவ்வளவு என்னையும் பகவானாகிய தாம் பிதாவாயிருந்துகொண்டு மன்னிக்கவேண்டும். "உத்தமப் பிரியைபின் உணர்வில் செய்கையை சித்தமதில்கொள்ள சீருள கணவன்போலும்" உத்தமமான பிரியத்தை தன்னிடம்கொண்டுள ஓர் மனைவி தன் அறியாமையினால் குற்றங்கள் செய்துவிட்டால் மனமதில் பெரிதாகக்கொள்ளுதல், சீருள கணவன் செயலன்று. உத்தம பிரியனான என் செய்கை அறியாமையினால் ஏற்பட்டது. மனமதில் பெரிதாகக் கருதாமல் என் குற்றமதை மன்னிக்க வேண்டுமென அர்ச்சுனன் கூறுகின்றான்.

40, 41, 42 அர்ச்சுனன் பகவானை பழைய இவ்யமங்களசுரூபம் காண்பிக்க துதிக்கின்றான்.

43, 44, 45 பகவான் வாக்குகள்.

46, 47-பாவில் விசுவரூபமகிமை கூறப்படுகின்றது.

11-வது அத்தியாய பாக்கள் விரித்துரை முற்றிற்று.

---

## 12-வது அத்தியாயம்.

1 நிம்மதியுடன் மனதை நின்பால் நிறுத்தியே
சம்மதியுள் பக்தர்கள் சத்வீக பிர்ம்மமதாம்
உம்மையே துதித்து உபாசிப்பாரிலெவர்
செம்மையுள்ளிய் யோகத்தை தெரிந்த சிரேஷ்டர் யாவர்.

2 என்றவ்வர்ச்சுனனும் எழிலுடையானைக் கேட்க
கன்றுடன் வாழ்ந்தந்த கிருஷ்ணனும் சொல்வான்
மன்றில் செய்கருமம் மனமொத்து எந்தனுக்கே
நன்றர்ப்பித்தார்கள் ஞானறி சிரேஷ்டராவர்.

3 இந்திரியமடக்கி இகத்தில் சமபுத்தியுடன்
சுந்தரரூபமுடை ஜகத்திற்கு நன்மையுய்த்து
அந்திரமனையும் நிறை அந்நிற்குணபிர்ம்மத்தை
வந்தித்துத் தொழுவானே வந்தெனையடைவான்காண்.

4 நிற்குண பிர்ம்மத்தின் நிலையடையயிச்சித்து
கர்மம்மத்தை செய்வதுவும் கடின கடினங்காண்
சர்மமுடை தேகமதை தள்ளிடுதலெளிதல்ல
வர்மமுடையான் செய்கை வளம் பெருதலருமையே.

5 கருமத்தைச் செய்துமே காமியம் விரும்பிலாதார்
நிர்குண பிர்ம்மத்தை நிலைபக்தியில் த்யானித்தால்
மிர்த்யூசம்ஸாரத்தை மீண்டுமடையாத
தர்மத்தில் சேர்த்திடுவேன் தடையிதிலுண்டோதான்.

6 சங்கல்பவிகல்பமாய் சலிக்கும் மனமதனை
இங்குமே என்பாலில் இணக்குடனிறுத்துவையேல்
சங்கையேதுமின்றி சர்வோத்தமனுமென்னில்
மங்குதலன்றி சேர்வை மறுபிறப்பறுப்பாய்காண்.

7 மனதை என்பால் நிறுத்த மாசக்தி தானிலையேல்
நினைவிலப்பியாசத்தால் நிலையோகமியக்குவாயே
நினைவில் நிலையோகமதும், நின்றமைதல் கடினமெனில்
அனைகர்மமென்பொருட்டு அவனியிலியக்குவாயே.

8 கருத்தினிலெனக்காக கருமம் செய்யியலிலையேல்
சரணமென்றடைந்தென்னை செய்கருமத்யாகம் செய்வை
கருமபல த்யாகமதை கடினமென நீயறிந்தால்
கருமபந்தம்விட்டு கடத்தலும் கடினம்கண்டாய்.

9 அப்பியாசயோகத்தால் அருள்ஞானமதுகிட்டும்
சுப்ரகாச ஞானத்தில் த்யானமே சிரேஷ்டமாகும்
செப்பும் த்யானமதில் செய்கரும த்யாகமேலாம்
ஒப்பும் த்யாகமேதான் உத்தம சாந்திகண்டாய்.

10 எல்லாப் பிராணிகட்கும் ஏதும் த்வேஷம் செய்யானும்
நல்லமித்திரனும் நற்கருணையுடையானும்
சொல்மமதை யற்றவனும் சுகதுக்கமற்றவனும்
வல்லகங்கார மில்லானும் வான்பொறுமையுள்ளானே.

11 நல்லடக்கமுள்ளோனும் நவிலில் நிச்சியமுள்ளோனும்
பல்வித மாமனதை பாவித்து எனக்கர்ப்பித்தானும்
சொல்லில் சந்தோஷமும் சதாத்யானம் செய்வோனும்
நல்ல என்பக்தனவன் நயமுள என்பிரியனும்காண்.

12 எவனைக்கா ஜனம் எப்பயமும் கொள்ளாதோ
எவனொருவன் ஜனத்தால் எப்பயமுங் கொள்ளானோ
எவன்கோபம் சந்தோஷம் எங்குமன குழப்பமிலானோ
அவனென் பிரியனிதை அறிவாயர்ச்சுனா நீ.

13 சுத்தமுடையானும் சுயபேக்ஷையில்லானும்
சோம்பலில்லானும் பக்ஷபாதமில்லானும்
சுத்தமனத்தோடு மனோ வியாதியில்லானும்
சர்வத்தையும் த்யாகம் செய்வானும்
எத்தயையடையினும் சுகதுக்கமில்லானும்
எண்ணரியதை யடைய வில்லையேல்
சித்த துன்பம் கொள்ளானும் அபேக்ஷித்து
சிறப்பு வேண்டானும் என் பிரியன்காண்.

14 சமமாயிருப்பான் சத்ரு சிநேகரிடம்
சமமாயிருப்பான் சாற்று மானவமானத்தில்
சமமாயிருப்பான் சிதோஷ்ண சுகதுக்கமதில்
அமர்ச்சியுடை மௌனி அகத்திலும் பற்றுதலற்றான்.

15 நெஞ்சமதில் நினைப்பான் எனையே
கொஞ்சங்கொண்டு கொள்வான் திருப்தி
அஞ்சுதலன்றி அலைந்து வருவான்
தஞ்சமென்று திருகித்தங்காண்.

16 இங்ஙன முறைசெய்த இவ்வரும் தருமங்களை
அங்ஙனமே யனுஷ்டிப்பார் அருள்தனை யடைவார்காண்
பொங்கு முத்தமனாம் பேருடையா னென்னை
சங்கையிலடைவோரே சாற்றுமென் பக்தராவர்.

## 12-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

## 12-வது அத்தியாயம் பாக்கள் விரித்துரை.

உலகத்தில் மானிடராய் பிறந்துள ஒவ்வொருவரும் கீதையை வாசிக்கவேண்டும் என்றும் அப்படி கீதை 18-அத்தியாயமும் வாசிக்கமுடியாதவர்கள் இந்த 12-அத்தியாயத்தைமட்டிலுமாவது வாசிக்கவேண்டுமென்று மஹாத்மா காந்தியவர்கள் சொல்லுகின்றார். ஆகலால் முக்கியமாக இந்த 12-வது அத்தியாத்தின் பெருமையைத் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த அத்தியாயத்தில் 1-வது பாவில்

"நிம்மதியுடன் மனதை நின்பால் நிறுத்தியே
சம்மதியுள் பக்தர்கள் சத்வீக பிர்ம்மமதாம்
உம்மையேதுதித்து உபாசிப்பாரிலெவர்
செம்மையுள்ளிய் யோகத்தை தெரிந்த சிரேஷ்டர்யாவர்,"

மனதை யாதொரு கஷ்டத்திற்கு இடங்கொடாமல் ஒதுங்கிய நிலையில் வைத்துக்கொண்டு, எந்த பக்தர் சம்மதத்தோடு சத்வீக பிர்ம்மமாகிற உமைதுதித்து உபாசனைஎன்ற இந்த யோகத்தை தெரிந்தவர் யாவர் என்று அர்ச்சுனகேட்க.

"மன்றில் செய்கருமம் மனமொத்து எந்தனுக்கே
நன்றர்ப்பித்தார்கள் நானறி சிரேஷ்டராவர்."

இங்கு அவரவர்கள் செய் கருமத்தை பகவானுகிற என் பொருட்டு செய்வதாக அறிந்தோர்களாய் எனக்கே அர்ப்பணம் செய்வார்கள் யாரோ அவர்களே "நானறி" என்னுல் அறிந்துக் கொள்ளப்பட்ட பக்தர்களில் சிரேஷ்டராவர் என்று பகவான் வாக்கு. அதாவது பக்தி செய்வதில் பலவிதமுண்டு எந்தமார்க்கமும் என்னிடமே கொண்டுவிடும் ஆனல் எனக்காக செய்யப்படும் உலக கர்மங்கள் சிலஉள. அதை செய்துமுடிப்போர்கள் என்னுல் அறிந்துக்கொள்ளத்தக்கவர்கள் என்று கூறப்படுகிறது. இப்படிப் பட்ட ஈசுவரார்ப்பணம் கர்மம் என்பது யாது? யாவன்செய்ய அருகன் என்ற கேள்விக்கு

12-ல் 3 பா. "இந்திரியமதடக்கி இகத்தில் சம புத்தியுடன்" எல்லா ஜீவனிடத்திலும் சமத்துவபுத்தியோடு இந்திரியங்களை அடக்கினவனுய், (அடக்கினவனுயென்றல் விட்டவன்என்று அர்த்தமல்ல.) இந்திரியங்களை உபயோகித்தும் தன் வசப்படுத்திக் கொண்டும் சமபுத்தியோடு

"சுந்திர ரூபமுடை ஜகத்திற்கு நன்மை உய்து"
ஜகத்தை அழகாகச் செய்வதற்கு நன்மை செய்து

"அந்திரமனைவயும் நிறை. அந்சிற்குண பிர்ம்மத்தை வந்தித்துத்தொழுவானே வந்தெனை யடைவான்காண்

எங்கும் நிறைந்திருக்கும் நிற்குண பிர்ம்மத்தைத்தொழுவானே வந்தெனையடைவான்காண் என்று கூறப்படுகிறது.

12-ல் 4. நிற்குண பிர்ம்ம உபாசனை கடினம் அதை அவலம்பிப்பவர்கள் என்னுல் அறியப்பட்டு என்னை உடனே வந்தடைவார்கள் என்று கூறப்படுகிறது.

12-ல் 5-வது பாவும் இதே அர்த்தமே தொனிக்கின்றது. மேலும் இஸ்லாம் மதத்தவர்களும், இயேசு மதத்தவர்களும் இந்த கொள்கையையே முக்கியமாக கடைப்பிடித்து நிர்குண பிர்ம்ம உபாஸனைசெய்து வருகிறுர்கள்.

12-ல் 6-வது பா. "சங்கல்பவிகல்பமாய் சலிக்கு மனதுதனை இங்குமே என்பாலில் இணக்கமுடனிறுத்தவயேல்" என்று சொல்லப் படுவதின் முக்கிய தாத்பிரியம் மனதை பகவான்மேல் நிறுத்த வேண்டும். மனதை நிறுத்துவதென்பது கடினம். மனதானது மாறி மாறி நினைக்கும் தன்மையுடைத்தது. ஆதலால் மனம் ஒரே வஸ்துவின்மேல் நிறுவப்படல் கடினமானுல்

12-ல் 7-வது பாவில் "மனதை என்பால் நிறுத்த மாசக்தி தானிலையேல்" என்றுகூறி மனமடங்குவதற்கு அப்பியாசயோகம் செய்யவேண்டுமென குறிப்பிடுவது கீழ்காண்க.

"நினைவிலப்பியாசத்தால் நிலையோக மியக்குவாயே."

மேலும் கூறுவதாவது நினைவில் நிலையோகமதும் நின்றமைதல் கடினமென்ருல் அனைகருமம், அவனியிலியக்குவாயே. அனைகருமம் உலகத்திற்கு உன்னுல் செய்யப்படவேண்டிய வேலை பலயிருக் கின்றது. தோட்டிமுதல் தொண்டமான் வரை உலக வேலையைத் தான் செய்கிருன். அப்படிப்பட்ட கருமத்தில் ஏதாவது செய்து கொண்டுபோனுல் கருமத்தினுல் சித்த சுத்தம் உண்டாகும் என்று கூறப்படுகிறது. மேலும்

12-ல் 8-பா. "கருத்தினி லெனக்காக கருமம் செயயியலிலை யேல் கருமத்தை (செய்கையை) எனக்காக செய்யக்கூடிய நிலை உன்னிடமில்லாவிடில் சரணமென்றடைந்தெனை செய் கருமத்யாகம் செய்வை.

எல்லாம் வல்ல கடவுளையே சரணுகதியாக அடைந்துவிடு. சரணமென்றடைந்த ஒருவரையும் கைவிட மாட்டேனென்று இங்கு வற்புறுத்தி கூறப்படுகின்றது.

12-ல் 9-பா. அப்பாசயோகம் ஞானம் தரும். ஞானம் த்யானத் தாலேற்படும். த்யானம் த்யாக தோடிருக்கவேண்டும். த்யாகமே உத்தம சாந்தியளிக்கவல்லது என்று கூறப்படுகிறது.

"த்யாகேன ஏகேன அமிர்தத்துவம் ஆனசுஹு" என்பது வேத வாக்கு த்யாகத்தாலே மோக்ஷம் சித்திக்கும்

10, 11, 12, 13, 14, 15, 16-பாக்கள். பக்தர்கள் நடந்து கொள்ளவேண்டிய விதம் கூறப்படுகிறது. இந்த பாக்கள் ஊன்றி வாசிக்கப்பட்டு அதின்படி மனித உலகு நடக்குமானல் மனித உலகையே தேவஉலகாக மாற்றிவிடலாம்.

12-ல் 14-வது பா. சமமாயிருப்பான் சத்ருமினேகரிடம் சத்துருவாகட்டும் அல்லது சினேகிதனகட்டும் அவனிடத்தில் சமமான எண்ணங்களுடையவனயிக்கவேண்டும். சத்துருவாக ஏன் ஒருவனைமதிக்கவேண்டும்? என்ற கேள்வி எழலாம். ஆத்ம ஞானி வேருெருவனை சத்துருவாக மதிக்காமலிருக்கலாம். ஆனல் அன்னியனெருவன் இவனை சத்துருவாககொள்ளினும் அவனிடம் இவன் சத்ருவாகயிருக்கலாகாது என்று கொள்ளவேண்டும்.

12-ல் 15-வது பா.

நெஞ்சமதில் நினைப்பான் எனையே
கொஞ்சங்கொண்டு கொள்வான் திருப்தி

பகவத் பக்தர்களின் தேவை கொஞ்சம். அதைக்கொண்டு அவர்கள் திருப்திகொண்டு விடுவார்கள்.

அஞ்சுதலன்றி அலேந்துவருவான்
தஞ்சமென்றுத் தருகித்தங்கான்.

எங்கேபோனலும் பயமின்றியிருப்பான். ஒருவனே கெதி என்று அவனையடையமாட்டான் உலகத்தில் எத்தனையோபேர்கள் இருக்கின்றுர்கள் இவனைவிட்டால் இன்னும் அதிகப்பேர்கிடைப்பார் என்ற எண்ணத்தோடு முயற்சிசெய்து நோக்கும், குணம்வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறது.

**12**-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

---

இனி பகவான் கூறுவதை 13-வது அத்தியாயத்தில் படிப்போமாக.



# ஸ்ரீ மஹாகணபதி
# கைக்குத்தல் அரிசி
# தொழிற்சாலை

**கன்னடியன் ரோடு, கல்லிடைக்குறிச்சி.**



கைக்குத்தலரிசியில், உணவின் சாராம்சம் கெடாமலிருக்கிறது. மில்லில் தயாராகும் அரிசியில், அரிசியின் நல்லபாகத்தை மில் எடுத்து விடுகிறது. மில்லரிசி உண்பவர்கள் கொடிய நோய்வாய்ப்படுகிறார்கள். "பெரி பெரி" என்ற வியாதி அவர்களையணுகி கஷ்டமடைகின்றார்கள்.

கைக்குத்தல் அரிசியே உங்கள் சரீர வலுவிற்கு போஷணை உண்டுபண்ணும். மில்கள் பெருத்த இந்நாளில் கைக்குத்தலரிசியிலும் ஏமாற்று இருக்கிறது. உங்களுக்கு நாணயமான கைக்குத்தல் அரிசி எங்களிடம் கிடைக்கும்.

எங்கள் ஆபீஸில் விபரத்திற்கு கேளுங்கள்.

**S. A. IYAH IYER,**
Proprietor.

Regd No M 4337. [15-4-'41] Vol. 1, Bk. No. 8.

# பகவத் கீதை.

## பக்தி யோகம்.

7-முதல் 12-அத்தியாயங்களின், தொகுத்துரை.



ஆக்கியோன்,

மஹரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள் கொண்ட 12-பிரதிகள். மாதந் தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## பக்தியோகம்

## 7-முதல் 12-அத்தியாயங்களின் தொகுத்துரை.

முன் 1-முதல் 6-அத்தியாயங்களில் பகவான் மனித ஜன்மா யெடுத்த ஒவ்வொருவரும் உலகத்திற்கு தன்னுலியன்ற வேலையை (கர்மத்தை) செய்யவேண்டுமென்றும், அப்படிச் செய்யப்படும் கர்மம் தர்மானுசாரம் இருக்கவேண்டும், அப்படி தர்மானுசாரம் செய்யப்படும் கருமத்திற்குத்தான் "கருமயோகமெனப்படுமெனக் குறிப்பிட்டு" கருமயோகத்தைசெய்யும் ஒவ்வொருவரும் மோக்ஷமடையமார்க்கமுளதென்று குறிப்பிட்டுக்கூறி கருமயோகத்திற்கு பக்திவேண்டுமென குறிப்பிடுவதேபோல் 7-முதல் 12-வரை பக்தியோகம் உபதேசிக்கின்றார். பக்தி என்றால் அன்பு என்று அர்த்தம் சொன்னால் முற்றிலும் பொருந்தாது. அன்பு என்பது தன்னில்மேலோரிடமும் தன்போன்றவரிடமும் தன்னில் தாழ்ந்தவரிடமும் ஏற்படுதல் சகஜம். ஆதலால் பக்தி என்ற பதத்தை அன்பெனவிவ்ரித்துவிடல்பொருந்தாது. ஆனால் அன்பின்பேரால் ஏற்படும் ஓர் உத்தம உணர்ச்சி பக்தி என்று ஏற்படும். மேலும் மாதா பிதா பக்தி, குருபக்தி தேசபக்தி இவைகளெல்லாம் ஓர்புரம். பகவான்பேரால் பக்தியெனப்படுவது ஓர்புரம். அறிவுடையார்க்கு ஏற்படும் பக்திக்கும், சாதாரண மந்தனுக்கு ஏற்படும் பக்திக்கும் நிரம்ப வித்யாசமுண்டு. கடவுள் நம்மை சிருஷ்டித்திருக்கிறார் நம்மிடம் மிககருணைகொண்டவர் அவரை நாம் த்யானிக்காவிட்டால் நமக்கு கஷ்டம்வரும், கஷ்டத்திலிருந்து விடுவிப்பவன் அவனேதான், என்றெண்ணத்தின்பேரில் பக்திசெய்வார் பலர். ஆனால் உலகமென்றாலென்ன? இதின் உற்பத்தி, ஸ்திதி, நாசம் இவைகளின் கெதி, இவற்றைப்பற்றி தீரவிசாரிக்கதொடங்கி ஆதிசக்தி விசாரத்தை மனதில் கொண்டுவந்து எல்லாவற்றிற்கும் ஓர் நியந்தாஇருக்கவேண்டுமென்ற முடிவுக்குவந்து அந்த நியந்தாவான பகவானிடத்தில் பக்திசெய்வார் ஓர்பகுதியார். ஆனால் இன்னொருபகுதியாரோ எல்லா வல்ல சக்தி ஒன்றாயிருக்கவேண்டும் என்பர்.

"இல்லாமை தனக்கு இருப்பிடமேயில்லை
அல்லில்லாமைக்கு அல்லாமையில்லை"

என்ற வாக்குப்படி ஏதோ ஓர் சக்திகண்ணுக்கெட்டாததாயிருந்தாலும் மனக்கண்ணால் சிந்திக்கக் கூடியதாயிருக்கின்றது. ஆதலால் அச்சக்தியே ஆட்டுவிக்கும் சக்தி, அச்சக்தியின் பிரபாவத்தை சிந்தித்தலே பக்திஎன்று பக்திசெய்வார். ஆகலால் உலகத்தில் ஆஸ்திகனாயிருந்துக்கொண்டு பகவத் பக்திசெய்வது மேலென்பதை குறிப்பிடவே

"தரித்திரிலிருந்துமே தேட்டில் பொருள் வேண்டுபவன்
தெரிந்த ஞானமதால் சுவரூபயிச்சையுடையான்
பெருந்தனம்வேண்டி பொருளாசை கொண்டோனும்
அருமாத்மஞானியும் அறிந்தெனை பஜிப்பார்காண்.

பணம் தேடும் தரித்திரன், தான் தெரிந்தவரை கடவுளை த்யானிப்பவன், பொருளாசையால் பெருந்தனம் வேண்டுபவன், இம் மூவரும் கடவுளை பிரார்த்தித்து வேண்டுவதையடையமுயல்வர். ஆத்மஞானி பகவானையறிந்தே பஜிக்கின்றான் என்றார். இதில் முக்கியமாக கூறவேண்டியது என்னஎன்று கவனிக்குமிடத்து தரித்திரன் தேவை தன் தரித்திர கஷ்டம்தீரவேண்டும் பெருந்தனம் வேண்டுபவன் கஷ்டந்தீர பணக்குவியல்கள்வேண்டும் இவைகளை பகவானை த்யானித்து அடையலாமெனினும் ஆத்மஞானி பகவானையறிந்து பஜிப்பான். இதில் விசேஷமிருக்கிறது மற்றமூவர்களும் உலகை அமைப்பு உணராமல் பகவத் சக்தியை, தன்மாட்டு உபயோகித்துக் கொள்ளபார்க்கிறார்கள். ஆத்மஞானியோ உலகமைப்பும் கடவுளின் சத்தாசக்தியுமறிந்தே வேண்டுகின்றான். இவர்கள் நால்வர்களுடைய செய்கையும் பக்தியை பின்பற்றியேயிருக்கிறது. தரித்திரன் பக்தி, பெருந்தனம் வேண்டுபவன் பக்தி, இவைகளெல்லாம் ஆசையோடு கூடினவை. ஆத்மஞானியின் பக்தியோ, நிராசையோடு தன்னை கடவுள் மயமாக ஆக்கிக்கொள்ளக்கோருதல். தானே கடவுளின் அம்சமாக கருதிகொண்டுவிட்டால், ஓர் வீட்டில் தனந்தேடிபிட்டு குடும்ப பாரம் செய்யுமொருவன் ஸ்தானம்போல், இவன் ஸ்தானமும் ஆய்விடுகின்றது. அப்போது அனன்னியபக்தி ஜனித்து விடுகின்றது. அதாவது தான்வேறு, கடவுள் வேறு என்ற பாவனை நசித்துவிடுகிறது. உதாரணமாக ஓர் சமயம் சாக்ஷாத் கிருஷ்ண

மூர்த்தியும் அர்ச்சுனனும் ஓர் நதிக்கரைபக்கமாக உலாவிக்கொண்டிருந்தார்கள். அர்ச்சுனனுக்கு தான் பகவான் பக்கம் நடந்துகொள்ளும் முறைதான் உத்தம பக்திசெலுத்தும் உத்தமவழியென, ஓர் அகம்பாவமிருந்தது. மேலும் அதுபோல் பக்தி செலுத்த மறு ஒருவராலும் முடியாதெனவும் நினைத்திருந்தான் சாக்ஷாத் எம்பெருமானுக்கு அர்ச்சுனன் தெரிந்துகொள்ளவேண்டியது வேறு இருக்கிறது என்ற எண்ணங்கொண்டவராய், இன்றைய நடிப்பை எடுத்துக்கொள்ளுகிறார். ஓர் சப்தம் கேட்கிறது அர்ச்சுனன் அப்பக்கம் கவனம் செலுத்துகிறான். பகவான் கவனமில்லாதுபோல் நடக்கின்றார். அர்ச்சுனன், ஸ்வாமி ஏதோ ஓர் பேரிரைச்சல் கேட்கின்றதே என்னவாகயிருக்கலாமென்றான். பகவான், எதுவாயிருப்பினும் நமக்கென்ன அந்நிய விவகாரங்களில் தலையிடாதிருப்பது மேல். நமது வழியே நடப்போமென்கின்றார். அர்ச்சுனன் ஸ்வாமி இச்சப்தம் புதியதோர் தொனியைக் கொடுக்கின்றது, இன்னதென அறியக்கூடவில்லை சற்றுஇவ்விடம், இருங்கள் நான்போய் கவனித்து வருகிறேன் என்றான், பகவான் இதுவேண்டாத ஜோலி அர்ச்சுன உந்தனுக்கு. உலகம் பலவிதம் நமது வழியேபோவதுதான் மேலென்றார். அர்ச்சுனனுக்கு சமாதானம்வரவில்லை. பகவானிடம் உத்தரவுபெற்று நதிக்கரைப்பக்கம் சப்தம்வரும் மார்க்கம் நடந்து சென்றான். அணுக அணுக சப்தமும் பெரிதாகக்கேட்க ஆரம்பித்தது. மனுஷ பிரகிருதியில் ஓர் பெரிய உருவம் சரீர முழுவதும், உரோமத்தோடும் நீண்டதாடியும், பார்க்கவே மிக பயங்கரமாக இருந்தது அத்தோற்றத்தால் நன்கு பிரகாசிக்கின்ற ஓர் பெரிய வாளாயுதம் பாறையின்மேல் தீட்டப்படுகின்றது. அத்தீட்டப்படும் சப்தமே அர்ச்சுனன் கேட்டது. சப்தத்தின் காரணம் தெரிந்து கொண்ட அர்சுனனும், அத்துடன் திருப்தியடையாமல் அத்தீட்டுபவனைநோக்கி ஐயா தாம் எதற்காக இந்த ஸந்திவேளையில் இவ் வாளாயுதத்தை மிகுந்த பயங்கரந்தரும் சப்தமோடு தீட்டிக்கொண்டிருக்கிறீர் என்று கேட்டான் அவ்வுருவம் பதிலொன்றும் சொல்லாமல் மறுபடியும் அதிக வேகத்தோடு வாளாயுதத்தை தீட்டிக்கொண்டிருந்தது. அர்ச்சுனன் உம்மைத்தான் கேட்கிறேன் எதற்காக வாளாயுதத்தை தீட்டுகின்றீர். அவ்வுருவம் பதில்தாராமல் மறுபடியும் அதிகவேகமாக தீட்டுகின்றது. அர்ச்சுனன் ஒருவேளை

இவர் செவிடாகயிருக்கலாமென நினைத்து உரத்த சப்தத்தில் தாம் எதற்காக இவ்வாளாயுதத்தைத் தீட்டி இப்பயங்கரத் தொனியை உண்டுபண்ணுகின்றீர்? உருவம் தலையையசைத்து நீர் வந்த வழி போகலாம் என்று சைகைசெய்து மறுபடியும் கத்தியை தீட்ட ஆரம்பித்தது.

அர்ச்சுனன். ஏ பயங்கர சுவரூபியே! அந்திசமயத்தில் இப் பயங்கர ஸப்தம் எதற்காக உண்டுபண்ணப்படுகிறது. இந்நதி பக்கம் ஸந்தியாவந்தனத்தை உத்தேசித்துவரும் ஜனங்கள் பயப்படு கிறார்கள்.

உருவம். (வெறுப்பாக உற்றுநோக்கி) அவரவர்கள் வேலையை அவரவர்கள் பார்ப்பது நல்லது என்று கூறிவிட்டு மறுபடியும் அதிக வேகத்தோடு வாளாயுதத்தை தீட்ட ஆரம்பித்தது.

அர்ச்சுனன். நான் வாளாயுதத்தை தீட்டவேண்டாமென்றோ அல்லது இச்சப்தத்தை உண்டுபண்ணவேண்டாமென்றோ உன்னை தடுக்கவில்லை. ஆனால் இங்கு உன்செய்கையின் நோக்கமதையறியச் சொல்.

உருவம். (கத்தியை தீட்டிக்கொண்டே) சொல்லித்தான் தீர வேண்டுமோ? நான் சொல்வது என்னவென்றால், அன்ய விவகாரகங் களில் நுழைந்துகொண்டு சாக்ஷாத் எம்பெருமானை அடிக்கடி கஷ்டப்படுத்துமொருவனை இவ்வுலகத்தைவிட்டு அப்புறப்படுத் தவே இக்காரியம் இங்கு செய்யப்படுகிறது.

அர்ச்சுனன். அய்யா, நீர் சொல்லும் வார்த்தையின் அர்த்தங்கள் என்மனதில் ஊடுருவிசெல்லுகின்றது. அப்படி எவனொருவன் அன்ய விவகாரத்தில் நுழைந்துகொள்கிறான்? அடிக்கடி எம்பெரு மானை கஷ்டப்படுத்துகிறான்? உம்பெருமான் யார்?

உருவம். எம்பெருமான் என்பவர் சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி. அவரைத்தன் சிறு அர்ப்ப காரியங்களுக்காக உலகாசையை முன்னிட்டு உபயோகித்துகொள்ளுபவன் அர்ச்சுனன். இந்த அர்ச் சுனனால் எம்பெருமான் செய்யத்தகாத வேலையெல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது. அதுமட்டிலுமல்ல உலக ரக்ஷகனை அவருக்கு

இவ்வளவு கேவலவேலை கொடுக்கும் அவ்வர்ச்சுனன் இவ்வுலகத்திலிருக்ககூடாது. அவனை முடிக்கவே இவ்வாளாயுதம் தீட்டப்படுகின்றதென்று அதிஉக்கிரகத்தோடு சொன்னார்.

அர்ச்சுனன். (யோஜித்தான்) என்ன இது. நானு அதிக கஷ்டம் கொடுக்கின்றேன் இதிலும் உண்மையில்லாமலில்லை என்று சொல்லிகொண்டே வந்தவழி திரும்பினான். பகவானிடத்தில் தான் கண்டவை, கேட்டவை சொல்லவேயில்லை.

ஆகவே மேல்கண்டவைகளிலிருந்து நாம் கவனிக்கப்பலயிருக்கிறது. பகவானிடத்தில் ஓரோர் அற்பகாரியத்திற்கும் ஆச்ரியத்தல் மதியீனம். மனிதன் இகத்திலடையவேண்டியதெல்லாம் பகவான் சிருஷ்டித்தாய்விட்டது; இனி பகவான் சிருஷ்டிக்க ஒன்றுமில்லை.

**9**-வது அ. **9**-வது பாவில்.

முன்னம் நான்செய்த முதலமைப்புத்தானும்
பின்னய் யாதொரு பேணுதலன்றியே
தன்னைத் தான்பெருக்கி தரணியை விருத்தியாக்கி
இன்னமும் முடிவுறுமை இலங்கும் விந்தையன்றோ.

பகவான் எண்பத்திநாலு லக்ஷம் ஜீவருசிகளை உற்பத்திசெய்து அப்படி உற்பத்தியாயிருக்கும் ஜீவருசிகளில் "வித்துகிரமம்" அமைத்து தம்தம் இனங்களை உற்பத்திசெய்துகொண்டு போகும் தன்மையையும் அமைத்திருப்பதாலே அப்படி அமைக்கப்பட்டிருக்கும் சக்தியால் உலக விருத்தி நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இப்படி உலக விருத்தி நடைபெற்றுக்கொண்டிருப்பதால் ஆதி உற்பத்திக்கு யாதொரு ஹானியில்லாமல் இருந்துகொண்டிருக்கிறது மேலும் பஞ்சபூதங்களும் சிருஷ்டிக்கப்பட்டு பூத சேர்க்கையால் பல வகைப்பட்ட ஸாதனங்கள் உற்பத்திசெய்வதற்கு ஹேதுவும் ஆகின்றது. எப்படி விளையாட விரும்பும் குழந்தைகளின் நுட்ப புத்தியையறிய ஓர் பிதாவானவர் சித்திரவெட்டுக்களை பலபல மாதிரியாக வெட்டி, சித்திரத்தை ஒன்றுசேர்த்து அமைக்கச்செய்து விளையாடுவாரோ, அல்லது தன்னை ஓர் இடத்தில் மறைத்துக்கொண்டு கண்டுபிடிக்க குழந்தைகளை ஏவுவாரோ, அதேபோல் உலகத்தில் தன்னை மறைத்துகொண்டு கண்டுபிடிக்க குழந்தைகளை

எவுதல்போல் தோன்றும். இப்படி உலகம் கடவுளால் சிருஷ்டிக்கப் பட்டும் இனி சிருஷ்டிக்க ஒன்றுமில்லை என்று பகவான் கூறிவிட்டு தன்னைத்தான் மறைத்துகொண்டிருக்கிறார். இப்போது ஜீவர்களுக் கும் பரமாத்மாவுக்கும் எதாவது தொந்தமிருக்கிறதா அல்லது சிருஷ்டி சமயத்தில் ஏற்பட்டதான ஓர் தொந்தம்தானு என்றதோர் கேள்விகேட்கலாம் பகவான் சிருஷ்டியை செய்துவிட்டு விலகி கொண்டுவிட்டாரா? அல்லது எப்போதும் சிருஷ்டியை செய்து கொண்டுதான் போகிறாரோ இவ்விதமான கேள்விகளெழலாம், கடவுள் சிருஷ்டியை செய்துகொண்டேதானிருக்கிறார் என்றால் சிருஷ்டிக்கும் கடவுளுக்கு, சக்தி குறைவு என்று கூறப்படுவதுபோல் தோன்றும், மனிதன் ஓர் வஸ்துவை உண்டு பண்ணுகின்றான் என்று சொன்னால், அவனால் உண்டுப்பண்ணப்பட்ட வஸ்து தன்போல் ஒரு வஸ்துவை உண்டுபண்ண சக்திவாய்ந்ததல்லாத தாயிருக்கிறது. அதுபோல் கடவுளும் ஒன்றை செய்தாரென்றால் கடவுளின் சக்தி மனிதன் சக்தியிலும் மீறியதாயில்லை. ஆனால் கடவுள் சிருஷ்டிக்குப்பிறது சிருஷ்டியிலிருந்து விலகிகொண்டிருக் கிறார். தன் சிருஷ்டி வஸ்துவிலேயே இனத்தைப்பெருக்கிகொள் ளும், சக்தியையும் அமைத்திருக்கிறார், என்று கூறுவோமானால், சக்தி வல்லமை அதிகப்படுகிறது. இங்கு கிருஸ்துவர்கள், மகம் மதியர்களால் கூறப்படும், சிருஷ்டி முறையை எடுத்துக்கொள்வோம் சிருஷ்டிக்கும் கடவுளுக்கு, ஓய்வு என்ற முறையில்லாத நிலையை ஏற்படுத்திகொண்டு, ஜீவர்களுக்கு ஓய்வுநாள் உண்டு என்று கூறப் படுகின்றது. அதாவது கடவுள் தானே தானே சிருஷ்டித்தொழிலை செய்கின்றார், புதிது புதிதாக ஜீவர்கள் உண்டாக்கப்படுகிறார்கள், மரணம் ஏற்பட்டதும் ஜீவர்கள் கல்லறையில் ஓய்வடைகின்றார்கள், குறிப்பிட்டதோர் காலத்தில் நியாயம் வழங்கும் நாள் ஏற்பட போகின்றது, அந்நாளில் பாபிகள் நரகத்திற்கும், நல்லவர்கள் மோக்ஷத்திற்கும், அனுப்பப்படுவார்கள் என்பது இயேசு, இஸ்லாம் இவ்விருமதத்தோர்களின் கூற்று.

ஆனால் ஸநாதன மதத்தோர்களான (ஹிந்து மதத்தோர்) கடவுள், சிருஷ்டியை செய்துவிட்டு ஜீவர்களுக்கு ஓர் விதமான சுதந்தரம் கொடுத்து, ஜீவர்களுக்கோ தன்போல் ஜீவர்களை பெருக்கிக்கொள்ளும் ஓர் சக்தியை அளித்து விட்டார், ஆகவே

தங்களைத் தங்கள் பாப புண்யானுசாரம் சிருஷ்டி செய்துகொண்டு அல்லது பெருக்கிகொண்டும், சுருக்கிகொண்டும், இந்த உலக சிருஷ்டிக்கிரமத்தை நடத்திகொண்டு போகப்படுகிறது, ஜீவர்களுக்கு ஓய்வு நாள் என்பதே கிடையாது, கர்மானுசாரம் ஜீவர்கள் பிறப்பை மாற்றிக்கொள்ளுகிறார்கள். நல்ல செய்கை செய்பவர்கள் கர்மம் ஒழிந்தவராய் கடவுளிடத்திலேயே மோக்ஷமென்ற ஓய்வை அடைகின்றார்கள். எந்த இடத்திலிருந்து ஜீவன் புறப்பட்டதோ அதே இடத்திற்கு சுற்றிகொண்டு மறுபடியும்போய் சேருகின்றது என்பது ஹிந்துக்களின் கூற்று, இங்கு இயேசு இஸ்லாம் இவர்கள் கூறுவதும் அடங்கியிருக்கிறது. எப்படியெனில் ஜீவர்கள் கல்லறையில் ஓய்வெடுத்துகொள்ளுகிறார்களென்றால் கர்மானுசாரம் ஓய்வெடுத்துகொள்ளுகிறார்கள் பிறகு யாத்திரை மறுபடியும் ஆரம்பிக்கப்படுகின்றது என்ற இயேசு இஸ்லாம் தத்துவத்தையும் உள்ளடக்கிகொண்டுவிடுகின்றது. ஆதலால் தான் நம் இந்தியாவில் வாழும் ஒவ்வொருவரும் ஹிந்துக்கள் தான். ஹிந்து என்றால் இந்தியாவில் பிறந்து இந்தியாவில் வாழுபவன் இந்தியாவையே தன் பிறவி நாடாகக்கொண்டவன் என்றே கூற்று ஏற்படுத்திகொண்டு மதவிஷயத்தை கடவுளைப்பற்றியறியும் கல்வியெனக்கொண்டுவிட்டோமானால் கல்வியில் புதிதுபுதிதாக ஏற்படுவதுபோல் கடவுளைத் தேடும் மார்க்கத்தையும் புதிதுபுதிதாக மனிதர்கள் ஏற்படுத்திக்கொண்டே போவார்கள் அறிவுபெருகப் பெருக கடவுளொருவர் உண்டென்ற ஓர் நம்பிக்கையிருக்குமானால் அவரை தேடவேண்டுமென ஓர் எண்ணமும் உண்டாதல் சகஜம். ஆதலால் மனிதசமூகம் அறிவு அடைய அடையதான் வந்தவழியை கண்டுபிடித்தேதீரும். கண்டுபிடிப்பதற்குரிய சக்தியும் மனிதர்களிடமிருக்கிறதென்று சிருஷ்டிக்கிரமம் சொல்வதுபோல் தோன்றும்.

பிறந்த இடத்தை தேடுதே பேதை நெஞ்சு
கறந்த இடத்தை நாடுதே கண்.

என்ற வசனப்படி சிருஷ்டிக்குட்பட்டதெல்லாம் தான் வந்தயிடம் தேடி அதாவது சிருஷ்டி தேடி முடிவடையும் கடவுளைத் தேடி முடிவடையும். கறந்த, எந்த இடத்திலிருந்து ஆகார வஸ்துக்களைப் பெற்றோமே அதேயிடத்தைத்தான் கண் நாடுவதுயியல்மேலும்.

**9**-வது அ. **27**-வது பா.

ஆசாரத்திலவன் அனுசாரியானாலும்
பாசாங்கில்லாத பக்தி என்னிடம் கொள்வானேல்.

பகவானிடம் யாதொரு ஸம்சியமற்ற பக்திகொண்டவன், ஏசாத அவன் செய்கை எழும் சிரேஷ்டமேயாம். அவனுடைய செய்கைக்கு எச்சுயில்லை தோஷமில்லை சிரேஷ்டத்தையே விளை விக்கும்.

„தாசாதி கருமத்தில் தகுந்த பக்தன் கெடுவானோ" பகவானை ஸர்வத்திற்கும் நியந்தாவான எஜமானாகக் கொண்டுவிட்டால் அவன் ஒருவிதத்திலும் கெடுவதில்லை. ஆகவே பக்தி என்பதுதான் ஜீவர் களுக்கிருக்கும் ஆறுதல். சில வகுப்பார்கள் கல்வியினால் சிந்தனை சக்தியுடைவர்கள் அவர்கள் கடவுளை கண்டிருப்பது தன் சிந்தனை சக்திமூலம் கடவுள் அரூபியாயுமிருக்கலாம் ரூபியாயுமிருக்கலாம் ரூபாரூபியாயுமிருக்கலாம். எங்கு நிறைந்தவராயும் காணதக்க தல்லாதவராயுமிருக்கலாம் என்ற எண்ணத்தின்பேரில் மதம் அமைத்துக்கொண்டவர்களாய் அதேமதத்தை பின்பற்றினால்தான் ஜீவர்களுக்கு சாந்தமேற்படும் என்று ஒரே கொள்கையைத்தான் பரப்புகின்றார்கள். வாஸ்துவம்தான் சிந்தனை சக்திமூலம் கடவுளிருக் கின்றார் என்ற முடிவுக்கும்வரலாம், கடவுளில்லை என்ற முடிவுக்கும் வரலாயிருக்கலாம். ஆனால் உலகத்தில் எத்தனையோ ஜனங்கள் கடவுளைகண்டு தொழவேண்டுமென்றும் பாவனையிலாவது கண்டு தொழுதால்தான் மனம் ஆறுதல் பெருகின்றார்கள்.

**11**-வது அ. **36**-வது பா.

தோழா என்றனைக்கூவி தோன்றியவெலாம் சொன்னேன்
பாழான என்செய்கை பரிகசம் தருமன்னோ
வாழாமல் நானொருவன் வாயினால் சிந்தியவை
ஊழான என்வினையால் ஊனித்திலேன் நான்

பகவானின் விசுவரூப தரிசனங்கண்ட அர்ச்சுனன் தான் பகவானிடத்தில் தோழமைகொண்டு நடந்துகொண்டது அபசார மாகுமென நினைந்து பகவானை மன்னிக்கக்கோருகிறான்.

"வாழாமல் நானொருவன் வாயினுல் சிந்ியவை" உன்னை தோழனாக அடையப்பெற்றும் இவ்வுலகத்தில் எனக்கு நல்வாழ்வு கிடைக்கவில்லை யென்பதிலிருந்தே பகவான் சாக்ஷி மாத்திரம் உலகத்திலிருப்பவரே தவிர பாக்கிய அபாக்கியம் அவனவன் கர்மத்தை பொருத்து என்றே ஏற்படுகின்றது (தொனிக்கின்றது.) மேலும் இதை தெரிந்துகொள்ளாதிருந்ததும் தன் ஊழ்வினை யென்றும் தெரிந்துகொள்ளுகிறான்.

மேலும் "பாழான என்செய்கை பரிகசம் தருமன்னே" என்ற கூற்றிலிருந்து தான் யுத்தம்செய்ப யுத்தகளம் அணுகியும் தான் நடந்துகொண்ட விதத்தைப்பற்றி நொந்துகொள்கிறான். ஆகவே அர்ச்சுனன் அறிந்துகொண்டவாறு நாமும் பகவானை யறிந்து கொள்ளவேண்டும். உலகத்தில் நடைபெறும் காரியங்களெல்லாம் நமக்கு இன்பம் தான் தந்துகொண்டிருக்குமென்றோ அல்லது துன்பமேதான் தந்துகொண்டிருக்குமென்றோ கிடையாது இன்பமும் துன்பமுமாகத்தானிருக்கும் இன்பம் கிடைத்தயிடத்து அதிக சந்தோஷத்தையோ துன்பம் வந்தயிடத்து அதிக துக்கத்தையோ கொள்ளாமல்

**12**-வது அத்தியாயம் **14** பாவில் கூறுவதுபோல்.

சமமாயிருப்பான் சத்ரு சினேகரிடம்
சமமாயிருப்பான் சாற்றுமானவமானத்தில்
சமமாயிருப்பான் சீதோஷ்ண சுக துக்கமதில்
அமர்ச்சியுடைமௌனி அகத்திலும் பற்றுதலற்றான்.

என்றபடி எல்லாவற்றிலும் சமபுத்தியிருந்தால் உலகத்தை வென்றுவிடலாம்: இதைத்தான் பக்த லக்ஷணமென்கிறார். மேலும் இன்னொருயிடத்தில் பக்த லக்ஷணம் கூறும்போது.

நெஞ்சமதில் நினைப்பானென்னையே
கொஞ்சங்கொண்டு கொள்வான் திருப்தி
அஞ்சுதலின்றி அலைந்துவருவான்
தஞ்சமென்று தருகித்தங்கான்.

என்னை மனதில் நினைப்பவர்கள் எது கிடைத்ததோ அதைக் கொண்டு திருப்திகொள்வர். அதாவது உலகத்தில்காணும் எல்லா

ஜீவர்களும் கடவுள் சிருஷ்டி. சிருஷ்டித்திருக்கும் பகவானே எல்லாருக்கும் சமர்த்தியாகயிருக்கும்படி சிருஷ்டித்திருக்கிறார். மேலும் பகவத் ஆக்ஞையும் சிருஷ்டி வஸ்துவினை அறிந்து பகிர்ந்துகொள் என்பதே. எல்லோருக்கும் எல்லாம் கிடைக்கவேண்டுமென்ற எண்ணத்தோடேயே நடந்துகொள்ளவேண்டும். அதையனுசரித்து பகவத் பக்தன் எதை அடைந்தாலும் திருப்தியோடு ஒப்புகொள்வான்.

"அஞ்சுதன்றி அலைந்து வருவான்." தான் நாளை எப்படி வாழப் போகிறோம் அல்லது நாளைக்கு நமக்கு கடவுள் தருவாரா என்ற சங்கையன்னியில் பயமன்னியில் இருப்பான். மேலும் தன்னுடைய பாகத்தை அன்னியர்கள் கவர்ந்துவிடுவார்களோ என்ற பயத்தையும் கொள்ளமாட்டான். மேலும் தன்னுடைய விரோதிகளால் தனக்கு பயம் உண்டாகும் என்ற எண்ணமில்லாமல் விரோதிகளேயில்லாமல் உலகத்தில் திரிந்துவருவான். அன்னிய சொத்திற்கு ஆசைபட்டு அபகரிப்பவன் தானே, பயங்கொள்ளவேண்டும் உதாரணமாக,

ஓர் ஊரில் ஒரு பிரபுயிருந்தார் பிறவிச் செல்வத்தோடு பல வழிகளிலும் செல்வம் பெருகியிருந்தது. என்ன செல்வமிருந்த போதிலும் மேலும்மேலும் தன்னை செல்வவானாக ஆக்கிக்கொள்வதில் என்ன ஆக்ஷேபகரமான காரியமாயிருந்தாலும் செய்ய துணிவது அவர் இயல்பு. அவருடைய குடும்பத்தை சேர்ந்த ஓர் பையனோடு பாகசம்பந்தமாக ஓர்முடிவு பண்ணவேண்டியிருந்தது. தானே அந்தபணத்தை திரும்ப ஒப்படைப்பதாகயேற்றுக்கொண்டு பையனுக்கு கவலைப்படாதே எல்லாம் நான் தருகிறேன் என்று வாக்குதானம் செய்துவிட்டார். சுமார் ரூ. 15000 வாக்குதானத்தின் விலை. வாக்குதானத்தை பூர்த்திசெய்யவேண்டிய காலம்வந்துவிட்டது பையன் இப்போது கொஞ்சம் பெரியவனாக ஆகிவிட்டான். கொடுத்தவன் கேட்கவே திரும்பி கொடுக்கவேண்டுமென்ற பயம் வந்துவிட்டது. ஆகவே பையனை காணும் சமயமெல்லாம் ஒளிந்துகொள்வார். வீட்டில்போய் பணங்கேட்டால் சரிசரி யென்று வீட்டிற்குள் போய்விடுவார். அப்படி செய்வதிலும் அவருக்கு ஓர் அனுகூலமில்லாமலிருந்தது. இப்பிரபுவின் மனைவி இந்தப் பையனுக்கு சகோதரி. அந்த அம்மாள் ஓர்விதத்தில் உத்தமி. தன் பர்த்தா செய்வது அக்கிரமம்தான் என்பதை உணர்ந்திருந்தாள்.

ஓர்நாள் பையனுக்கு ஆகவேண்டி தன் பர்த்தாவையும் கடிந்து கொண்டாள். இப்போது அப்பிரபு தன் மனைவிக்கும் பயப்பட வேண்டிவந்துவிட்டது. ஆகவே பிரபுவின் ஜன்மம் பயத்திலேயே முடிவுற்றது. பையன் தன் சகோதரியின் துக்கத்தை பகிர்ந்து கொள்ளபோன சமயத்து தன் புருடன் செய்கையை ஓர் வேதாந் திக்கு ஒப்பிட்டு ஓலமிட்டாளாம்.

அதுபோல் (அந்நியமான) தனக்கு என்று ஏற்படாததெல்லாம் பயமளிக்கத்தான் செய்யும். பக்தர்கள் தன்னதல்லாததை சுவீகரிக் கவேமாட்டார்கள் தன்னதல்லாததை தன்னதாக்கிகொள்ளும்போது தான் பயம் எற்படுகின்றது. மனிதனுக்கும் மற்றும் ஜீவப்பிராணி களுக்கும் நான்கு குணங்கள் உண்டு, அவையாவன:- ஆகாரம், நித்திரை, மைதுனம், பயம். முன்சொன்ன மூன்றும் இயற்கையில் அமைந்ததுபோல் நான்காவதான பயமும் கூடவேயிருக்கிறது. தனக்கு தேவைக்கதிகமான பணம்படைத்தும், திருப்திகொள்ள வில்லை இங்கு இப்பிரபு. "கொஞ்சங்கொண்டு கொள்வான் திருப்தி" இதற்கு மாறுனவர். அநேக பந்துஜனங்களை ஏமாற்றியதால் எப்போதும் பயந்து பூனைபோல் பதுங்கியிருந்தார். மேலும் இவருக் கேற்பட்ட நல்லதொரு மனைவியும் இவரால் சத்தர்மத்தை அனுஷ் டிக்கமுடியாமல் கடைசியில் (யத்பாவ தத்பவதி) எது எப்படி நடக் குமோ அப்படி நடக்குமென வேதாந்த ஓலமிட்டாள். கடவுள் 6 அத்தியாயத்தில் கூறியபடி யோகத்தில் நழுவியோனை தனவான் வீட்டில்பிறப்பானென்றார். தனவான்வீட்டில் தன்பிறப்பு ஏற்பட்ட போதும் தன்னை அந்த ஸ்திதிக்கு லாயகில்லாமல் ஆக்கிக்கொண்டு மறுபடியும் தரித்திரனுயே வாழுபர் சிலர், முன் ஜன்மாந்திர வசத் தால் தனக்கு கிடைத்திருக்கும் சில அனுகூலங்களை நன்ருக விவே கத்தோடு உபயோகிக்காதவர்கள், இவர்கள் கதி, மிகவும் வருந்த தக்கது. மேலும் பகவான் கூறுகின்றபடி.

"தனமதுசேர்த்தல்தனை தவிர்த்துமே நிற்போனும்
தினசரி வாழ்விற்காக சிறுதனம் சேர்ப்போனும்
இனத்தில் கர்மம் செய்யினும் கர்மம் செய்தானுகான்"

இங்கு பணத்தை சேர்த்தலென்றதை கண்டித்தாலுங்கூட தன் தினவாழ்விற்கு பணம் சேர்த்தலை தடுக்கவில்லை எனெனில்

நிராசையோடு பணம் வாழ்விற்குமட்டிலும் உபயோகிக்கப்பட சம்பாதிக்கவேண்டும். சேர்த்துவைக்கவேண்டும் என்பது பேருசையில் கொண்டுவிடும். இதைத்தான் இங்கு கண்டிக்கப்படுகிறது.

மேலும் தினசரி வாழ்விற்காக சிறுதனம் சேர்த்துவைத்து கொள்ளுதலே நிஷ்காமிய கருமமென கூறுவதற்கு சாக்ஷாத் எம்பெருமானுகிய கிருஷ்ணன் தூது சென்ற இடத்திலிருந்தும் ஓர் உதாரணம் சொல்லலாம். பாண்டவர்களுக்கு அவர்கள் நித்ய வாழ்வின் பொருட்டு ஓர் வீடுங்கொடுத்து சிறுதனமும் கொடுக்க பகவான் துரியோதனனை கேட்கிறுர் அதுவும் மறுக்கப்படவே யுத்தம் ஆரம்பமாகிறது. ஆதலால் கீதாவாக்கியத்திற்கிணங்க பகவானும் செய்து காட்டிருக்கின்றுர் என்று கொள்ளவேண்டும்.

சாதாரணமாக வாழ்க்கையை நடத்திக்கொண்டு போவதற்கு நிர்ஆசையோடு எவ்வளவுதூரம் சிறுதனம் சேர்க்கலாமோ அவ்வளவு சேர்த்துவைத்துகொள்வதை பகவான் அனுமதிக்கின்றுரென்றுல் உலகத்தில் உலக சிருஷ்டிவஸ்துக்களை எல்லோருக்கும்சமமாய் வழங்கும் தன்மையையும் ஆதரிக்கின்றதை குறிக்கவேண்டும்.

சமத்துவ புத்தியில்லாமல் அரசர்களாயிருந்தபோதிலும் ஏகாதிபத்தியமுறை, அதாவது ஒரு தனி அரசனின் கீழ் உலகத்தை அல்லது உலகத்தின் பெரும்பாகத்தை உள்ளடக்கி உலக உற்பத்தி வஸ்துகளின் நன்மையையெல்லாம் ஒரு ஜாதியாரே யனுவிப்பது என்பது கூடாதென்பதை இங்கு கண்டிக்கவே கௌரவ ஏகாதிபத்தியத்தை உடைக்கவேண்டுமென்றே பாதிருஜ்யம் பாண்டவர்களுக்கு கேட்கப்படுகிறது.

விசுவரூபம் காட்டி அர்ச்சுனனுக்கு உலகியல் போதிப்பித்து.

**11**-வது அ. **29**-வது பா.

ஆதலாலெழுவாய் அமைந்த சமருக்கு
நாதனீயென்று நாட்டில் புகழுறு
சூதன்றி நீயும் சுகபோகம் பெறு
சாதலடைந்தோரை ஜயிப்பது எளிதன்றோ.

எனகூறி அர்ச்சுனனை யுத்தம்செய்ய தூண்டி அந்த யுத்தத்தின் மூலம் கௌரவ ஏகாதிபத்தியத்தை உடைத்தெரிகின்றுர்.

உதாரணமாக இராமாயணத்தை படித்து ராமன்போல் நடக்கவும் பாகவத பாரதங்களை கேட்கவும் மட்டும் வேண்டுமென ஜனங்கள் சொல்லிகொள்வார்கள். இங்கு, இராமாயணத்தில் காணும் இராமனுக்குப்பிறகு கிருஷ்ணாவதாரம் என்று கவனிக்கவேண்டும். இராமாயண நீதிகள் இராமாயண காலத்திற்கும் கிருஷ்ணாவதாரத்திற்கு முந்தியும் சரி. சாக்ஷாத் பகவானே உலகமைப்பில் தற்ம ஸ்தாபனத்தின் பொருட்டு தான் அவதாரம் செய்திருப்பதாக சொல்லிக்கொண்டு நடத்தி காட்டப்படும் தற்மம் தற்மமாகாதென்று சொன்னோமென்றால் உலகத்தில் நாம் ஓர் மனிதனாகவோ அல்லது மனித சமூகமாகவோ ஆகமுடியாது. மேலும் கிருஷ்ணாவதார தர்மங்கள் அனுசரிக்கத் தக்கதல்லாமல் ஆய்விட்டதா? இராமன் கதைப்படி நட, கிருஷ்ணன் கதையைக் கேள் என்கிறார்களே? கிருஷ்ணன் நடந்ததுபோல் நடக்கக்கூடாதோ? அல்லது நடக்க முடியாதோ? என்ற கேள்விகளுக்கு பதில்வேண்டும். உண்மையாக பார்க்குமிடத்து இராமாயணக்கதை நீதிபோதிப்பது போலவே கிருஷ்ணகதைகளும் நீதிபோதிக்கின்றன. ஆனால் இராமாயணத்தில் இராமன் ஒருவன்மட்டும் கதாநாயகன். அவனொருவர் வாழ்வில்படும் நீதியை மட்டிலும்தான் சொல்லஇயலும். கிருஷ்ணகதை அனந்தம் எத்தனையோ கதாநாயகனோடுகூடி, கூட்டுணர்ச்சிகொள்ளுகிறார். ஆதலால் அநேக தர்மங்கள் பிரஸ்தாபிக்கப்படுகின்றது. அர்ச்சுனனை தன்னிஷ்டம்போல் தற்ம பிரசாரம்செய்யவே விசுவரூப தரிசனம் காட்டுகிறார். மேலும் இராமாயண காலத்தில் பிதுருவாக்ய பரிபாலினம் சகோதர சினேகம் இவைகள்போன்ற தர்மங்கள் முக்கியமாக பிரஸ்தாபிக்கப்பட்டு அதற்குவேண்டும் உதாரணங்களும் எடுத்துகாட்டப்பட்டன. அதே தர்மங்கள் நாளடைவில் குடும்ப பெரியார்களால் துர் பிரயோகம் செய்யபட்டுவிட்டதை யறிய வேண்டும் குடும்ப கௌரவத்தின்பேரால் மக்களுக்கும் சகோதரர்களுக்கும் இழைக்கப்பட்ட கொடுமை பல இவைகளுக்கு ஓர்முடிவு கட்டவேண்டிய பொருப்பு ஏற்பட்டுவிட்டது. குருவாகிய துரோணர் அகங்காரம் மிகுந்தவராய் சகிப்புதன்மையில்லாதவராய் அரசாக்ஷி ஆசையடைந்து இராஜகக்ஷியிலே நின்றுவிட்டார். குடும்ப பெரியார் பீஷ்மர் எவ்வளவோ தற்மங்களை யறிந்தவராயுமிருந்தும் திருதாஷ்டிர புத்திரர்கள்தான் அரசுரிமையுள்ளார்கள் என்றதான எண்ணத்தின்பேரில் இராஜகக்ஷியில் நின்றுகொண்டார்.

கௌரவ ஏகாதிபத்யம் தொலையவேண்டுமானால் தர்ம முரண்பாடுகள் பலதீர்க்கயிருக்தன. இவைகளையெல்லாம் அர்ச்சுனனுக்கு தெரியச்சொல்லவே விசுவரூபதரிசனம் காட்டப்படுகிறது. மேலும் பகவான் அர்ச்சுனனுக்கு பலவிதத்தும் தைரியம்கூறி அர்ச்சுனன் மூலம், தன்உலக அமைப்பை திருத்தியமைத்துக்கொள்கின்றார் அர்ச்சுனனும்.

**11**-வது அ. **38**-வது பா.

"தமக்கு நிகர் தாமேயானீர்
உமக்கு மேலே ஒருவருமில்லை
எமக்கு அருளும் எங்குல குருவே
சுமக்கும் தன்மை சுளுவில் கண்டேன்."

என்று கூறுகின்றார். சுமக்கும் தன்மை சுளுவில் கண்டேன். உலகத்தில் என்னால் செய்யப்படவேண்டிய பளுவான சுமையை, "சுமக்கும் தன்மை சுளுவில் கண்டேன்" ஆகலால் யுத்தம் செய்கின்றேன் என்று சொல்லுகிறான். இப்படி யுத்தம்செய்வதுதான் க்ஷத்திரியனாகிய தன்கருமம் என்றபடி இப்படிதான் செய்யவேண்டிய கருமம் தெரிந்துகொண்ட அர்ச்சுனனுக்கு கருமம் சுயகருமமாயிருந்தாலும் அப்படிபட்ட சுயகருமத்தையும் பக்தியுடனும் தர்மானுசாரமும் இருக்கவேண்டுமென்று கூறவே.

எல்லாப் பிராணிகட்கும் எதும் தோஷம் செய்யானும்
நல்லமித்திரனும் நற்கருணையுடையானும்
செல்மமதை யற்றவனும் சுகதுக்க மற்றவனும்
வல்லகங்கார மில்லானும் வான் பொறுமையுள்ளோனும்
நல்லடக்கமுள்ளோனும் நவிலில் நிச்சியமுள்ளோனும்
பல்விதமா மனதை பாவித்தெனக் கர்ப்பித்தானும்
சொல்லில் சந்தோஷமும் சதாத்யானம் செய்வோனும்
நல்ல என்பக்தனவன் நபமுள என்பிரியனும் காண்.

என்று 12-வது அத்தியாயம் 10, 12 பாக்கள் கூறுகின்றது.

மேற்கண்ட குணங்களோடு கூடி எவன் தன் சுயகருமத்தை செய்கிறானோ அவனே என்னால் அறியபட்டவன் என்கிறார். பகவானால் அறிபப்பட்டவனென்றால் ஜீவ உலகத்தில் விசேஷமல்லவா.

உதாரணமாக ஓர்ஊரில் ஒரு விசித்திரபாஷினி இருந்தான் எப்போதும் தனக்கு எல்லாப் பெரியார்களையும் நேரில் தெரியு மென்றும் அவர்களோடு சம்பாஷணை செய்திருக்கிறேனென்றும் சொல்லி கௌரவம் பேசிக்கொள்வான். அவனிடம் ஓர்நாள் ஓர் சினேகிதன் சந்தித்து, நீ எல்லாப் பெரியமனிதர்களையும் தெரியு மென்கிறாய் இவ்வூர் அரசன் மாளிகையில் இராஜனைக் கண்டு பேசி னேன் என்கிறாய். உனக்கும் இராஜனுக்கும், எப்போது, எங்கே சம்பாஷணை நடந்தது என்று கேட்டான், அப்பாடா இவ்வளவுதானா ஓர்சமயம் இராஜனது வீட்டில் ஓர்நகை களவுபோய்விட்டது. அதை திருடியவன் என் அயல்வீட்டுக்காரன் அவன் பெயர் ஊர் முதலிய தெரிந்தவன் நான்தான் என்னை கேட்டுகொண்டு தெரிந்து கொள்வதற்காகவும், அவனால் விட்டபட்டிருந்த வஸ்திரத்தின் அடை யாளம் கண்டு சொல்வதற்கும் என்னை கூட்டிக்கொண்டுபோனார்கள். அதுசமயம் அரசன் என்னிடம் சில கேள்விகேட்க பதில் சொன் னேன். இது இராஜ சம்பாஷணமல்லவா என்று கேட்டானும். இங்கு பகவத் சிருஷ்டியில்பட்டவர்கள்தாம் உகை ஜீவருசிகள். ஆனால் தெரிந்துகொள்ளப்பட்டவர் யார்யார் எதுஎது என்றால் 10 அத்தியாயத்தில் பகவான் கூறியிருப்பதை கவனிக்கவேண்டும். ஆதலால் பகவானால் தெரிந்துகொள்ளப்படுவதற்கு பகவத் பக்தியே முக்கியமெனவும் பகவத் பக்தியிலும் "நல்ல என் பக்தனவன்" என்ற சொல்லுக்கு லாயக்குடையவராயும் பவிக்கவேண்டும். மேலும் பக்தியோக முடிவில்.

12-வது அ. 16-வது பா.

இங்ஙனமுரை செய்த இவ்வரும் தருமங்களை
அங்ஙனமே அனுஷ்டிப்பார் அருள்தனை அடைவார்காண்

என்னுடைய அருளைப்பெறவேண்டியவர்கள் என்னால் கூறப் படும் தருமங்களை அனுஷ்டிக்கவேண்டும் அனுஷ்டித்தால்.

"பொங்கு முத்தமனும் பேருடையானென்னை
சங்கையிலடைவாரே சாற்றுமென் பக்தராவர்."

என்னுடைய சாயுஜ்ய பதவியை அடைவதோடு உலகத்தில் என்னுடைய பக்தர்கள் என்றதான புகழும் அவர்கள் பெறுவர்.

பகவான் உரைசெய்திருக்கிறபடி நடப்பது சாதாரண மனிதர்களால் முடியக்கூடியதா? மனமடக்கவேண்டும் நிராசையோடு, நிஷ்காமிய கருமம் செய்யவேண்டும். இவைகளை யனுஷ்டிப்பதென்பது முடியாதகாரியம் எதாவது ஓர் கஷ்டமில்லாத மார்க்கம் ஒன்று சொல்வீர்களென்றால் அதின்படி பக்திசெய்து அவனையடைய முயலுவேன். அதுதான் என்னால் சாத்தியம், என்று கேட்கும் ஒருவனும், பகவானால் அருளப்பட்டிருக்கும் வாக்கையும் கவனிக்க வேண்டும்.

"கருத்தினிலெனக்காக கருமம் செய்யியவியலேயேல்
சரணமென்றடைந்தென்னை செய்கருமத்யாகம்,
[செய்வை"

த்யான யோக்கியதையிலாத ஒருவன் தன்னால் பகவத் கைங்கிரியம் செயமுடியவில்லையென்று நினைத்து செயாதவரை அவனுக்கு

"சரணமென்றடைந்தென்னை" ஓ கடவுளே நீயேதான் எல்லாவற்றையும் சிருஷ்டித்து அளித்து அழிக்கின்றாய் நான் உன்லீலா சக்தியென்ற சமுத்திரத்தில் வாழும் ஓர் சிருமீன். என்னைரக்ஷிக்கும் உன்னை பிதாவெனக் கண்டுகொண்டேன்" சரணமடைகின்றேன் என்றுகூறி எல்லாசெய்கைகளும் அவன்பொருட்டே என்றுகூறி, நான் என்ற அகம்பாவத்தை யொழிக்கும் அடிப்படியிலேறி விட்டாலே போதும், அதே யோகத்தைசெய்யும் ஓர் யோகியின் லக்ஷணமாய்விடும். ஆதலால் உனக்கும் மோக்ஷம் நிச்சியம் விழித்துக்கொள். காலை மாலையில் அவனை நினை கூடுமானால் எப்போதும் நினை. "நீ நினைப்பதுபோல் நீயுமாவாய்" கடவுள் ரக்ஷணை நமக்குண்டு.

பக்தியோக தொகுத்துரை முற்றிற்று.

---

இனி பகவான் கூறுவதை 13-வது அத்தியாயத்தில் படிப்போமாக.

**REGD. NO. 3175.** **ESTD. 1930.**

# CHANDRA APPALAM DEPOT.

## சந்திரா அப்பளாம் டிப்போ.

உங்களுக்கு மணமும், குணமும், ருஜியும், சுத்தமும், வைதீகமும் விலை சகாயமுள்ள அப்பளாம் வேண்டுமென்றால் மேற்கண்ட விலாசத்திற்கெழுதுங்கள். ஏனெனில், நாங்கள்:

இவ்வியாபாரத்தில் 10 வருட பழக்கத்தோடு எங்கள் எல்லா வாடிக்கைக்காரர்களையும் திருப்தி செய்துவருகிறோம். விலையில் போட்டியிட்டு விற்கின்றோம். நயத்தில் நல்ல சாமான்களை தயார் செய்கின்றோம். பிராமணர்களே அப்பளாம் தயார்செய்வதால், வைதீகத்திற்கு ஏற்றதாயிருக்கின்றது. உங்கள் ஆர்டரை ஓர் தடவை தந்து எங்கள் வாடிக்கைக்காரர்கள் ஆகுங்கள்.

**R. S. & K. S. IYERS,**
Proprietors.
CHANDRA APPALAM DEPOT., KALLIDAIKURICHI

---

## ஷண்முக விலாஸம் காபி ஹோட்டல்.

தெற்கு ரதவீதி, அம்பாசமுத்திரம்.

நேர்த்தியான குளிர்பானங்கள், மிட்டாய் தினுசுகள், புதுமாதிரி நல்ல காபி, டீ, கொக்கோ, ஓவல்டைன் கிடைக்கும்.

**PRO:- K. S** சங்கரய்யர்,

---

## காபி & சாப்பாடு ஹோட்டல்.

கல்லிடைக்குறிச்சி தேரடித்தெருவில் நடந்துவரும் S. சுப்பய்யா அய்யர் கிளப்பில், பொதுஜன சௌகரியத்தை உத்தேசித்து நேர்த்தியான சாப்பாடு கிளப்பும் பங்குனி முதல் நடத்திவருகிறார்கள்.

அன்பர்கள் ஆதரிக்கக் கோருகின்றோம்.

Regd No. M. 4337. [15-5-'41] Vol. 1, Bk. No. 9.

# பகவத் கீதை.

13, 14 அத்தியாயங்கள்.

பாக்கள், விரித்துரை.



ஆக்கியோன்,

மஹரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ. 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.

## 13-வது அத்தியாயம்.

கழிந்த 12 அத்தியாயங்களில் கர்மயோகம், பக்தியோகம் பகவானால் உபதேசிக்கப்பட்டது. முதல் ஆறு அத்தியாயங்களில் கர்மயோகங் கூறி 7-முதல் 12-அத்தியாயங்கள் பக்தியோகங் கூறி எவ்வித கர்மமும் பக்தியுடன் இருக்கவேண்டுமென்று உபதேசித்து பக்தியும் ஞானத்துடனிருக்க வேண்டுமென்று சொல்லவே 13-வது அத்தியாயம் முதல் 18-அத்தியாயங்கள் முடிய, ஞானயோகம் உபதேசிக்கப்படுகின்றது. மனிதர்களுக்கு பகவத் பக்தி உண்டாவதற்கு ஒருக்ஷண நேரம் போதும். தன்னால் தாங்கமுடியாத துக்க வந்தவிடத்தும் அல்லது அதிக இன்பம் வந்தவிடத்தும் மனிதர்களும் அதை தெய்வீகமெனக்கொண்டு பயத்தின்பேருலும் இன்ப மாறிவிடக்கூடாதென்ற எண்ணத்தின்பேருலும் பக்தி செய்வது இயல்பு. உதாரணமாக ஓர் ஊரில் ஒரு பிரபு எப்போதும் எந்தச் செய்கையையும் கடவுள் செய்கின்ருர் என்று சொல்லிவருவது அவர் இயல்பு. தன்பக்கம் தனம் சேருமிடத்து தனக்கு சௌகரியங்கள் வருமிடத்தும் இப்படியே சொல்லிவந்தார். ஓர் சமயம் ஒரு யாத்திரை புறப்படவேண்டிவந்தது அநேக ஊர்கள் கழிந்து போய்ச் சேருமிடமிருந்தது. பக்கத்திலுள்ள கிராமங்களில் தெரிந்தவர்கள் எல்லாரும் இவர் வந்ததறிந்து உபசாரம் கூறி வீட்டிற்கு அழைத்து சென்று சுவையுண்டி அளித்துவந்தார்கள். அப்போது இப்பிரபு எல்லாம் ஈசன் செயல், அவனிடம் பக்தி செய்தால் தனக்கு யாதொரு குறைவும் ஏற்படாது என்று சொல்லி தன்னுடைய பக்தியை மெச்சிக்கொள்வார். இவரை யாரென தெரிந்துகொள்ளாத கிராமங்களில் தங்கவேண்டிவந்தது. ஒருவரும் இவரை கவனிக்கவில்லை. தன்னுடைய முயற்சியிலேயே எல்லாம் செய்துகொள்ள வேண்டிவந்தது. இந்த கிருமத்தில் ஜனங்களுக்கு பக்தி என்பதே கிடையாது எல்லோரும் நாஸ்திகர்கள் என்று சொல்லி கோபமடைந்தோடு பகவான் பக்தி செய்யுமெந்தனுக்கு ஓர் உபகாரமும் செய்யமாட்டேனென்கிருர்கள். ஆதலால் பகவத் பக்தியில் யாதொரு பிரயோஜனமுமில்லை என்று குறை கூறினர்.

தனக்கு சௌகரியம் சிறிதளவு குன்றினும் பகவான் பேரில் கோபங்கொண்டால் பக்தியாகாது. ஆதலால் பக்தி என்பது தன்னுடைய சௌகரியம் அசௌகரியத்தைப் பொருத்ததாயில்லாமல், உலக அமைப்பு, கடவுளிருப்பு முதலியவைகளைப்பற்றி ஞானம்வேண்டும். அப்படி ஞானம் அடைந்தோர்கள்தான் பக்தியை பின்பற்றுவதில் திடமாயிருப்பார்கள் என்பதை கூறவே இந்த 13-வது அத்தியாயம் ஞானயோகம் கூறுகின்றது.

1 கேசவாயியம் பென கேட்பானர்ச்சுனனும்
மாசில் பிரகிருதியும் மன்னு புருஷனும்
ஆசில் க்ஷேத்திரமும் அலங்கா க்ஷேத்திரக்ஞனும்
பாசமகற்றும் ஞானம் பண்புடைஞேயமுமென்னே.

2 அர்ச்சுனனுக்கங்கு அமலனும் உரைப்பான்
சரீரமே க்ஷேத்திரம் சரீரத்தமர்ந்துளான்
நற்க்ஷேத்திரக்ஞன் நாடிடும் க்ஷேத்திரமதில்
நிற்கும் க்ஷேத்ரஞன் நானே யென்றறிவை.

3 தேகமாத்மாவிதினை தெரிந்தறிதலேயே
பாகமுள ஞானமென பகருதல் என்கூற்றா
தாகமுடன் நீ கேட்கும் தவறில் க்ஷேத்ரமதை
ஏகன் க்ஷேத்ரக்ஞனை இயம்புவேன் நீ கேட்பாய்.

4 இருஷிகளிதுபற்றி இயம்பியுள்ளார்கள்
பொருஷவேதமும் பிர்ம்ம சூத்திரமும்
கருத்தினிலில்படவே காட்டியிருக்கக்கான்
அர்ச்சுன உனக்கிதை அருள்செய்வேனென்றார்.

5 பஞ்சமாபூதங்களும் புத்தி அகங்காரமும்
கொஞ்சமும் தோன்றாத குணமில்மாயையும்
எஞ்சுமிந்திரியங்கள் ஈரஞ்சும் மனமொன்றும்
தஞ்சமுள க்ஷேத்ரத்தின் தாரணையெனக்கொள்.

6 விருப்பும் சுகமும் வெறுப்பும் துக்கமும்
கருமசங்காதமும் சேதனமாம் ஞானமும்
பெருந்தைரியமும் பேணும் க்ஷேத்ரமதை
சுருக்கத்திலிதையறி சுகுண விஜயா நீ.

7 தன்னை புகழாமை டம்பமில்லாமை
சத்குருஸேவை அஹிம்ஸை
உன்னும் பொருமை கபடமின்மை
உன்மன சுத்தி சரீரசுத்தி
மன்னுமுயற்சி தேகஸ்வாதீனம்
மற்றுமிந்திரிய சுகவெறுப்பு

8 முன்னகங்கார மின்மை மூப்புநோயறிதல் பிறப்பிறப்பு
சொன்ன தாயாதிகளில் சுக துக்கமபியானமின்மை
மன்னிலேற்படுமிஷ்டம் அனிஷ்டமதில் சமமும்
என்னையே பக்திசெய்தல் இவையெலாம் ஞானமேயாம்

9 இன்னமும் ஞானபாகம் இதமுடனுரைக்கக்கேள்
தன்னே வஸித்தல் தனியிடந்தனிலே
அன்னிய கூட்டமதில் அவாவின்றி ஆத்மவிசாரம்
உன்னிச்செய்வதிங்கு உத்தம ஞானமேயாம்.

10 அறியவேண்டியதே அறிஞர் ஞேயமென்பர்
அறிந்தடை மோக்ஷம் அதையே பிர்ம்மமென்பர்
தெரிந்தார்களிதை சத்தசத்தாக கொள்வதில்லை
சரியாம் பிர்ம்ம லக்ஷணம் சாற்றகேட்பாய் நீ.

11 எங்கும் கால்கள் கைகளுடைத்து
எங்கும் கண்கள் தலைகளுடைத்து
எங்கும் முகங்கள் காதுகளுடைத்து
எங்கும் வியாபித்தே எங்கும் நிறைந்தது.

12 இந்திரியமன்றியறிவான் இயக்கும் சக்திவான்
அந்திரமதிலொட்டான் ஆதாரமாயிருப்பான்
எந்தகுணமும் ரக்ஷித்து எக்குணமிலானுயும்
அந்தமுள பூதங்களிலே அகம்புறமெங்குமுள்ளான்.

13 சாமாயசாமாய் சூக்ஷ்மமாய் தன்னை
அறியக் கூடாததாய் அதிதூரமுள்ளான்
தெறிந்தனுகும் வண்ணம் சமீபத்திலுள்ளான்
பிரிவில்லான் பூத சிருஷ்டன் பூதரக்ஷகநாசனுமவனே.

14 அளிக்குமாம் பிரகாசத்தை அருவ பிரகாசத்திற்கு
தெளிஞானமதாய் தெரிந்தடை ஞ்ஞானமதாய்
எளிதிலக்ஞானத்தின் எதிரிடையாய் நின்று
தெளிவாயிருதயமதில் தோன்றுவதே ஞேயமாகும்.

15 இவ்விதம் க்ஷேத்திரம் ஞானம் ஞேயத்தையும்
செவ்வையிலறிவானே சீருள என் பக்தனவன்
அவ்விதமறிந்தாலும் அந்தமுளென் சுவரூபமதை
எவ்விதமு மடைவதற்கு இயம்பும் யோக்கியனேகாண்.

16 பிரகிருதியு மனதியாகும் புருஷனு மனதியாவான்
பிரகிருதியிலுண்டானவை பின்னின்ற விகாரத்தோடு
சரமோகாதிகளாய் சுக துக்கமளித்து நின்று
பிரகிருதிமாயையிலே பின்னிற்கும் தன்மை கேளாய்.

17 சுக துக்கங்கொள் ஜீவனே புருஷனவன்
சுக தேகேந்திரியங்களுடை பிரகிருதியே மாயையாகும்
சுக துக்க அனுபவமே சுயம் பிரகிருதி ஆக்ஞையாகும்
ஜகத்தில் செய் கர்மமே ஜனனத்திற்கு காரணமாம்.

18 இத்தேகத்திலிலங்கும் இஜ்ஜீவன் தானாய்
அத்தேகமதிலிருந்தாலும் அன்னியமேயாகி நின்று
இத்தேகமதை யடக்கியாள இச்சா சக்தியுடையோனாய்
இத்தேகத்தை யாள்வதோடு இலங்கும் பிர்ம மாவான்.

19 ஓங்கிய மனத்தினாலும் உயர் பிர்ம்ம மெய்வான்
தாங்கும் ஞானத்தாலும் தாரண சக்தியாலும்
சாங்கிய யோகத்தாலும் சத்துவ சேர்கையாலும்
பாங்கில் செய் கருமத்தாலும் பரமதை யடைவார்காண்.

20 இவைகளை யறிந்திலாதார் இயம்பும் பிர்ம்மம்காண
நவை (குற்றம்) தீர் உலகத்தில் நற்குருவை நாடிடுவார்
சுவைதரும் உபதேசம் சுவரூப ஞானங்கொள்வார்
கவை (கிளை) சம்ஸாரமதை கடிதனில் தாண்டிடுவார்.

21 தேகமதாம் க்ஷேத்திரமதையும்
தேகத்திலமை க்ஷேத்திரக்ஞனையும்
வேகத்திலறியவே விஜயா நீயிங்கு
மோகப் பிரமையை முற்றிலும் நீக்குவாயே.

22 சர்வ பூதங்களிலும் சமமாய் தோன்றமிந்த
சர்வோத்தமனும் சத்பரமன் தனை
சர்வ பூதங்களும் தன்னுச முற்றிடினும்
சர்வன் நாசமுறானென சாற்றுவானறிந்தானவன்.

23 சர்வத்திலுமெனை சமமே பார்ப்பதோடு
சர்வேசனும் நான் சகலத்திலிருப்பேனென
தர்க்கமின்றி உணர்வானே தன்னுசமற்றவனுய்
நற்பவம் பெறுவானும் நாடு மோக்ஷமெய்வானும்.

24 பல்வித கருமமதை பிரகிருதி செய்கை யெனவும்
நல்லதன ஆத்மாவை நாடிச்செய் கர்த்தாதான்
அல்லவனென்றெவன் அறிவானோ உணர்ச்சிதனில்
வல்லறிவுள்ளானவன் வானுட்சியடைவானவன்.

25 பல்வேறு பேதமுள பிரபஞ்ச ரூபமதை
சொல் பிரகிருதிதனில் சொக்கி நிற்பதாக
வல் பிரகிருதிதானும் வளம்பெறச் செய்வதையும்
நல்லறிவில் கொண்டாரே நற்பிர்ம்ம மடைவார்காண்.

26 காணுந் தேகமதில் காணுமலிருந்தாலும்
பேணுந் தன்மையில்லான் பிரிந்து மொட்டாவிலான்
ஆணும் பெண்ணுமிலான் அனுதியாவானவன்
நாணும் நாசமற்றான் நிற்குண பரமேயவன்.

27 அறியு மாகாசம் அளவில் காணுததேபோல்
தெரியு மாத்மாவும் தேகத்திலடையக்காண்
பெரிதாம் சூரியனும் பிரபஞ்ச பிரகாசியேபோல்
சரியே க்ஷேத்திரக்ஞனும் சரீரத்திலமைவானே.

28 க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞ பேதமது யறிவாரும்
ஆத்திரங் கொள்ளாமல் ஆதிபூத காரணமதை
சாத்திர பிரகிருதியினால் தெரிந்துமே யறிவாரும்
தோத்திரிக்குமந்த சுயம்பரமடைவார்காண்.

13-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

## 13-வது அத்தியாய பாக்களின் விரித்துரை.

1-வது பாவில் அர்ச்சுனன் ஸ்வாமியை நோக்கி பிரகிருதி, புருஷன் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன், ஞானம் ஞேயமென்றால் என்ன என்று கேட்கிறான். 2-வது பாவில் ஸ்வாமி பதில் தருகிறார். சரீரம், க்ஷேத்திரம், சரீரத்தில் உள்ளிருப்பவன் க்ஷேத்திரக்ஞன், அந்த க்ஷேத்திரக்ஞனே நான் என்று சொல்லி 3-வது பாவினால் தேகமென்றால் என்ன, ஆத்மா என்றால் என்ன, இவ்விசாரணையை தெரிந்து அறிதலையே ஞானமென்றும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞனைப்பற்றி விரிவாக கூறுவதாகச் சொல்லுகிறார்.

4-வது பாவினால் முன் ரிஷிகள் இதுபற்றி சொல்லியிருப்பதை சொல்லி வேதம், பிர்ம்ம, சூத்திரம் இவைகளிலும் சொல்லியிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

5, 6-வது பா. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்சபூதங்களும் புத்தி, அகங்காரம், மாயை, (ஸப்தம், ஸ்பரிசம், ரூபம், கந்தம், ரஸம், சுகதுக்கம், விருப்பம், வெறுப்பு, தைரியம்) மனம் இவைகளெல்லாம் சரீர அனுபவங்கள்.

7, 8-வது பா. ஞான இலக்ஷணம் கூறப்படுகிறதோடு ஞேயமும் 9, 10 பா. கூறப்படுகிறது.

11-முதல் 20-பாக்கள் பிர்ம்ம இலக்ஷணம் கூறப்படுகிறது.

21-முதல் 28-வரை பிர்ம்மத்தை அறிந்தான் நிலையும் அவன் அடையும் நிலையும் கூறப்படுகிறது.

## குறிப்புரை.

க்ஷேத்திரமென்றால் சரீரம், க்ஷேத்திரக்ஞனென்றால் சரீரத்திலமை ஆத்மா, ஞானமென்றால் உத்தம நடத்தை, சத்விக அமைப்பு இவைகளையும் இவைகளல்லாதவைகளையும் அறிந்துகொண்டு சத்விக விஷயமாக நடப்பதையே ஞானமென்றும் அதை தெரிந்துகொள்வதையே ஞேயமென்றும் கூறப்படுகிறது. சரீர தத்துவம் கூறப்பட்டு பிர்ம்ம இலக்ஷணமும் கூறப்படுகிறது. மேலும் இச்சரீரத்தில் ஆத்மா அமைந்திருக்கும் விதம், "அறியுமாகாசம் அளவில் காணாததேபோல் தெரியு மாத்மாவும் தேகத்திலமையக்காண்" இடைவெளி ஒன்று இருப்பதை யறிந்தாலும் அதை அளப்பதற்கு முடியவில்லை. இதேபோல் சரீரத்தில் ஆத்மா இருப்பது தெரிகின்றது விசாரத்திற்கு. ஆனால் ஆத்மா அமைப்பு ஆகாசம் போன்றதே என்று குறிப்பிட்டு இந்த ஆத்மா இலக்ஷணமும் அவ்வாத்மா தேகத்திலமைந்திருக்கும் இலக்ஷணமும் இவ்வத்தியாயத்தின் குறிப்பு.

13-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.



## 14-வது அத்தியாயம் பாக்கள்.

1 எதை யடைந்தால் எவ்வுத்தமம் கிடைக்குமோ
அதை உந்தனுக்கின்னும் உரைப்பேன் கேட்பாய் நீ
சிதையா ஞானமது சுவரூப சித்தியாக்கும்
அதை யடைந்தாரும் அப்பிறப்பிறப்படையார்.

2 எல்லா உற்பத்திக்கும் என்செய்கையே காரணமாம்
வல்லிப்பிருதிருதியில் வளமுடன் விதையிடவே
சொல் கருப்பத்தில் சேர்ந்த விதையங்கு
நல்ல சிருஷ்டியாக நானித்திலமைந்ததுவே.

3 கர்ப்பமாம் பிரகிருதியும் குண மூன்றுடைத்து
சொர்ப்ப மென்றாத்மாவை சத்வாதி தமத்தால் கட்டும்
நிற்கும் சத்துவமே ஞானமதைத் தந்து
தர்க்கமின்றி ஆத்மாவின் தளைதனை நீக்கிடுமே.

4 இரஜோ குணமது இங்காசா ரூபமதாய்
கருத்தில் கொண்டதையே சிரமமே யபிமானித்து
தாத்தில் கிட்டாததை சதாய பேக்ஷித்தும்
கருமபந்தமதிலே கட்டு மாத்மாதனே.

5 பின்னுள தமோகுணம் பிறவி மோஹத்தோடு
அன்பின்றி சோம்பலும் அயர்ச்சி நித்திரை தந்து
முன்னின்றாத்மாவை மூழ்கிடச் செய்யுங்காண்
சொன்ன சத்ரஜ தமமே சுக கரும அக்ஞானம்.

6 ஒவ்வோர் குணமும் தான் ஓங்கி நிற்கவேண்டி
வெவ்வேறும் இரு வேற்றுமை குணமடக்கி
அவ்வப்போதங்கு அதினதின் சேஷ்டையாலே
முவ்வகை குணமதிலுள முதல் குணமாயமையக் காண்.

7 சத்துவ குணமிங்கு சர்வஞ யனுக வேண்டி
அத்துவைத நிலைகாட்டி ஆசக்தியுண்டாக்கி
உத்தம இந்திரியங்கட்கு உணர்ச்சி சுகந்தந்து
எத்தருணமும் சிதைபாத இஞ்ஞானமதை யளிக்கும்

8 பொருளாசை யுண்டாக்கி பெரியதொரு யிச்சையோடு
கருமம்செய்யத் தூண்டிடும் கருத்தினில்ரஜோ குணமும்
குறித்ததமோகுணபோ காணுமவிவிவேகங்கொண்டு
கருமத்தைச் செய்யாமல் காண்பிக்கும் மோஹமதை

9 இத்தேகம் விட்டு ஜீவன் இறங்கும் தருவாய்தனில்
உத்தமருலகெய்வான் உணர்வுடை சத்துவனும்
மத்திம உலகமதில் மானிடனாய் ரஜோவானும்
அத்தமோ குணத்தானே ஆனினம் அடைவானிங்கு.

10 ஸாத்வீக குணந்தான் சத் சுகமளிக்குமய்யா
காத்த ரஜோகுணம் கொடுக்கும் துக்கமதை
ஆத்திரத்தை மூட்டி அக்ஞான மூடத்திற்கு
பாத்திரமதாக்கும் பார்தனில் தமோகுணம்.

11 சொல்லும் சத்துவமே சேர்ந்த ஞானம் தரும்
எல்லா மாசைதரல் இரஜோகுணச் செய்கை
பொல்லா தமோ குணமோ பற்றுடையார் தமக்கு
அல்லல் தந்தந்த அக்ஞானமதில் தள்ளும்.

12 சத்வ குணமுடையோர் சால நல்லோகம் புகுவர்
நித்யமில் ரஜோகுணத்தை நியமித்திலேர்ப்போர்கள்
மத்திம உலகினிலே வாழ்வடைய வருவாரே
வித்தமில் (ஞானம்) தமோகுணத்தான் வீழ்வான் கீழுலகில்.

13 முன்சொன்ன முக்குணங்கள் மூலமாமாத்மாவை
தன்படியே யணுகாமல் தனித்திருக்கக் காண்பானும்
அன்றியுமக் குணத்தை அன்னியமா யறிவானும்
என்னையும் என் ரூபத்தையும் எளிதலடைவான்காண்.

14 தேகத்துடை ஆத்மாவை சேர்ந்த முக்குணங்களை
ஊக்கத்திலறிந்துமேதான் உணர்வில் சேராதான்
மோகத்தை கடந்தவனாய் மூப்பிறப்பற்றவனாய்
தாகந் தணிந்தவனாய் தருமானந்த மடைவானே.

15 எக்குணமும் நிறைந்த எந்தலே என்குருவே
முக்குணமும் விட்டவனின் முக்கிய இலக்ஷணத்தை.
அக்குணத்தானுசாரம் அவன் கருமந்தன்னை
இக்கணமே எனக்குரையும் என்றானெழில் விஜயன்.

16 யாவனொருவன் பிரகாசத் (யஜஸ்) தையும் எப்பிருவர்த்தியோடு
நாவினால் துவஷித்தே நீக்கியுமபேக்ஷியானோ [மோஹமதையும்
பாவனையில் சாக்ஷியேயென பலமுள குணச் செய்கையை
கேவலம் சலிக்காதன் குண ரஹிதனாவானவன்.

17 கொஞ்சமும் சலியாத குண நிஷ்டையுடையானும்
நெஞ்சிலொன்றென்பான் நிலமண் தங்கமதினை
எஞ்சி நின்றால் தீரம் ஏளனம் துதிமதியான்
மிஞ்சுமானவமானம் மித்ர சத்ரு சமமென்பான்.

18 துக்க சுகங்களை சமமே கொள்வானும்
எக்கர்மமுமியக்கிட இணக்கமது கொள்ளானும்
முக்குணமும் விட்டங்கே முனைந்து நிற்கும் பக்தியினால்
எக்காலத்துமெனை பஜித்து ஏத்தும் பிர்மமாவான்காண்.

19 எனையே பரமாத்மாவிற்கு எதிர்காணும் பிம்பமென
எனையே அழிவற்ற இம்மோக்ஷ மளிப்பானென
என்னையே நித்தியனென எத் தர்மாதிபதியென
எனையே இஜ்ஜகத்தில் இலங்கும் குருவெனக்கொள்.

14-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

---

## 14-வது அத்தியாயம் விரித்துரை.

**1**-வது பா. ஞானமடைந்தோர்கள் பிறப்பு இறப்பு அடையாரென்றும் எந்த ஸ்வரூபமானது ஒரே ஸ்வரூபமாக கூறப்படுகின்றது? அதை சித்திக்க (அடைய) ச்செய்யும்.

**2**-வது பா. உலக உற்பத்திக்கு தானே காரணமெனக் கூறி முதல் உற்பத்தி தன்னால் செய்யப்பட்டிருப்பதை உறுதிகூறி பிறகு உலக விருத்திக்குக் காரணம் கர்ப்பமெனவே கூறும்போது வித்துக்கிரமும் அதிலும் ஆரோக்கிய வித்துக்கிரமும் கூறுகின்றார்.

**3**-வது பா. சிருஷ்டிக்கு 3 குணங்கூறி அதாவது சத் ரஜோ தமோகுணங் கூறி இம்மூன்று குணங்களும் ஆத்மாவை பந்திக்குமெனவும், ஆனால் சத்துவ குணம், ஆத்மதளையை நீக்குமென்றும் கூறப்படுகிறது.

**4**-வது பா. இரஜோ குணத்தின் செய்கையை கூறுகிறது.

**5**-வது பா. தமோகுணச்செய்கை கூறி சத் ரஜோ தமம் என்ற மூன்றும் சுகம், கர்மம், அக்ஞானம் எனகூறும்.

**6**-வது பா. ஒவ்வோர் குணமும் மற்றுள குணங்களோடு சேராமல் மற்ற குணங்களை ஓங்கவிடாமல் தான் தானே பிரகாசிக்கின்றது.

**7**-வது பா. சத்வகுணம் ஞானசாதகம் அளிக்கும்.

**8**-வது பா. ரஜோகுணம் இச்சையோடு கருமம் செய்யத் தூண்டும் தமோகுணம் அவிவேகத்தினல் மந்தனுக்கும்.

**9**-வது பா. சத்வ குணமுடையார்க்கு மோக்ஷம். ரஜோ குணத்தான் மானிடராய்ப் பிறப்பான். தமோகுணத்தான் மிருக ஜாதியில் பிறப்பான்.

**10**-வது பா. சத்வகுணம் சுகத்தையும் ரஜோகுணம் துக்கத்தையும் தமோகுணம் அக்ஞான மூடத்தையுந் தரும்.

**11**-வது பா. சத்வம் ஞானம், ரஜோகுணம் ஆசை, தமோ குணம் மூடத்தில் தள்ளும்.

**12**-வது பா. 9-வது பாவின் அர்த்தம்.

**13**-வது பா. சத்வ, ரஜோ, தமோ மூன்று குணத்திற்கும் புறம்பானவன் என்னையறியவும் என் ரூபம் பார்க்கவும் சக்தி வானவன்.

**14**-வது பா. முக்குணமும் தேக சம்பந்தமான தென்றறி பவன். ஆனந்த பரிதனவன்.

**15**-வது பா. குணரஹிதனின் நிலை என்னவென்று கேள்வி.

**16, 17, 18, 19**-வது பாக்கள். குணரஹிதன் முக்குணமும் விட்டவன் நிலை கூறப்படுகின்றது.

14-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

---

## 14-வது அத்தியாயம் குறிப்புரை.

இந்த அத்தியாயத்தில் முக்கியமாக மனிதன் தனக்கு பிறவியினல் கிடைத்துள்ள சத்வ ரஜ தமோகுணம் பற்றி விவாதிக்கப்படுகிறது. இந்த ஜன்மத்தில் சத்வ குணத்தையுடையானும் அது போலவே சத்வ குண பழக்கத்தையே அனுசரிப்பவனுக்கு பிறப் பிறப்புபற்றி பரமாத்ம ஐக்கியம் கூறப்படுகிறது.

ரஜோகுணத்தான் செய்கையால் ஆசை அதிகமாகி மறுபடியும் அதை தீர்த்து கொள்ளவேண்டுமென்ற எண்ணத்தோடேயே மனித உலகில் வருகிறான்.

தமோகுணத்தான் தன் அக்ஞானத்தினால் மிருக ஜாதியில் மறுபடியும் பிறக்கிறான் என்று கூறப்படுகிறது.

மனித ஜாதியிலிருந்து ஒருவன் எதற்காக கீழ் தள்ளப்பட வேண்டும் மிருக இனத்தில் பிறக்கக் காரணமென என்ற கேள்விக்கு உத்திரம். சாதாரணமாக நம்முடைய சரீரத்திலமைந்துள்ள சில உருப்புகளை நாம் உபயோகப்படுத்தாவிடில், இக ஜன்மத்திலேயே அவ்வுருப்புகள் பிரயோஜனமில்லாமல் போய்விடுகிறதை காண்கிறோம். மனிதன் சத்வ குணவானாய் இருப்பதற்கு சகல சௌகரியமும் கடவுள் தந்திருக்கிறார். அப்படிப்பட்ட உருப்புகளை அவன் உபயோகப்படுத்தி பேன்மேலும் விருத்தியை கோருபவன் விருத்தியையே அடைகிறான். அதை விட்டுவிட்டு மக்களாகிய நமக்கு ஆரறிவு தந்திருந்தும் மாக்களைப்போல் (மிருகங்கள்) ஐந்தறிவை மட்டும் உபயோகப்படுத்தி ஆறுவது அறிவான தெரிந்தறிதலையே உபயோகப்படுத்தாத தமோகுணத்தான் அவ்வறிவை உபயோகிக்காத தோஷத்தினால் இழந்து அவ்வறிவற்ற மிருக ஜன்மத்தையே யடைந்துவிடுகிறான். அஜ்ஜீவனடைந்த சம்பாத்திய மெதோ அதே மறுபடியும் கிடைக்கிறது. உதாரணமாக ஓர் ஒட்டுமாஞ்செடியை எடுத்துக்கொள்வோம். ஓர் செடியிலுள்ள சில பாகங்களை வெட்டியும் அதேபோல் மற்ற செடியிலுள்ள சில நல்ல பாகங்களோடு சேர்க்கபட்டு புதியதோர் செடியாக அமைக்கின்றோம். சில நல்லதல்லாத பாகங்கள் விலக்கப்படவே இரண்டு செடியிலுள்ள நல்ல பாகங்களின் அணுக்கள் விருத்தியாகின்றதை காண்கிறோம். மேலும் அதே ஒட்டுசெடி சாதாரண விருட்சத்தைப் போல் அதிக காலம் உயிருடனிருப்பதில்லை. இதுபோலவே மனிதர்களுக்கு ஆறு அணுக்களும் மிருகங்களுக்கு ஐந்து அணுக்களும் தானிருக்கிறது மிருகங்களை காட்டிலும் மனிதனுக்கு "தெரிந்தறிதல்" என்ற ஆறுமறிவு அமைந்திருக்கின்றது அந்த ஆறுமறிவை மனிதன் விருத்திசெய்யாமல் அதின் ஆதார அணுவை குன்றச் செய்தால் எப்படி ஒட்டு மரத்தின் ஆதார அணு குன்றி சீக்கிரத்தில்

கெட்டுவிடுகின்றதோ அதேபோல் மனிதனின் ஆறாவது அறிவு என்ற அணு கெட்டு ஐந்தறிவுள்ள மிருககுண மீதமே மிருக ஜன்மத்தில் இவனைக் கொண்டுவிடுகின்றது. இதை உணர்த்த "அத்தமோ குணத்தானிந்த ஆவினத்தில் உதிப்பான்" என்று கூறப்படுகின்றது ஆகவே மனிதன் தனக்கு கிடைத்திருக்கும் உத்தம அறிவின் அணுக்களை விருத்தி செய்துகொண்டுபோனால் மேலான ஜன்மம் கிடைக்குமெனக் கொள்ளவேண்டும். இந்த சுலோகத்தினால் ஐரோப்பிய டார்வின் முறையும் உறுதிப்படுதல் காணலாம். ஆனால் டார்வின் முறை மனித உலகு குரங்கு உலகுலிருந்து வந்திருக்கிறது என்கிறார். அது கேவலம் உடலமைப்பைப்பற்றியுள்ள விவாத முடிவு. ஆனால் இந்த குண அணுவின் கூற்றை காண்க. ஆகவே மனிதன் தனக்கு கிடைத்திருக்கும் முக்கிய குண ஆதார அணுக்களை விருத்தி செய்துகொண்டால் தான் தன் ஜன்மத்தின் நோக்கத்தை பூர்த்தி செய்தானாகிறான். மேலும் இந்த 14-வது அத்தியாயத்தில் முக்குணமும் விட்டவனின் முடிவும் கூறப்படுகிறது.

"தேகத்துடை ஆத்மாவை சேர்ந்த முக்குணங்களை
ஊகத்திலறிந்துமேதான் உணர்வில் சோராதான்"

ஆத்மாவை பற்றியுள்ள முக்குணங்களை யறிந்துகொண்டு அதை ஆத்மா பற்றற்று நிற்கச்செய்தால்,

"மோகத்தை கடந்தவனாய் மூப்பிறப்பற்றவனாய்
தாகந் தணிந்தவனாய் தருமானந்த மடைவானே"

மோகம் நீங்கி மூப்புபிறப்பு நீங்கி வேண்டுமென்ற தாகமில்லாமல் எப்போதும் ஆனந்தமாயிருப்பான் என்று கூறப்படுகிறது.

மேலும் சத்வ குணத்தையுடையானுக்கு மோக்ஷமுண்டு என்று கூறப்பட்டு, பின்னால் முக்குணமும் விட்டவனே மேல் என்று கூறப்படுகிறதே என்ற கேள்விக்கு விடையாவது.

முக்கியமாக சத்வகுணம் பிறர்மாட்டு நன்மையைக் கோரிய காரியமாகவே செய்கை செய்யத்தூண்டும். ஆயினும் நன்மை தீமைகளை பகுத்தறிந்து செய்யும்போது நன்மை தீமையாக பலித்துவிடலாம். செய்கை நன்மையாகயிருந்தால் பிறர் பெறுவதாயிருப்

பதால் அவர்களின் குணத்தைப் பொருத்து அவை பயன்பெறும். ஆதலால் முக்குணமும் விட்டவன் தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்வதோடு அன்னிய துஷணையற்றவனுகவே யிருப்பான். மேலும் பிறர் துன்பங்கண்டு உதவிசெய்தல் என்பது, பிறர் துன்பமும் மனதிற்கு ஓர் கஷ்டம் தரும் அதை சிந்தையாலும் சிந்தியாத நிலை முக்கியமாக ஆனந்த நிலையேதான் என்று கூற வேண்டும். சிந்தைக்கு வந்துவிட்டால் சத்வகுண தற்மப்படி நன்மையையே செய்வதுதான் முக்கியம். ஆதலால் இங்கு முக் குணம்விட்ட குணம் சிரேஷ்டத்திலும் சிரேஷ்டமென கருத வேண்டும். ஓர் ஊரில் ஒருவன் எப்போதும் பகவத் பக்திசெய்து கொண்டு தன் சக்திப்படி முயற்சிசெய்து அதினுல்வரும் ஊதியத் தால் காலந்தள்ளிவந்தான். அவனுக்கு மூன்று புத்திரர்கள் மூத்தவன் பிதாபோல் நல்லகுணமுடையானும் பிதாவின் முயற் சிக்கு அனுகூல நிலையிலிருந்து தன் காலந்தள்ளுவான். இளையவன் அதிக ஆசைகொண்டவன் பிதாவின் வாழ்க்கை பிடிக்கவில்லை விஸ்தார உலகத்தில் காணும் அனேக தோற்றங்கள் அவன் மனதில் புக அதை யனுசரித்து தன் வாழ்நாள் அமைத்துக்கொள்ள விரும்பும் குணமுடையோன். கடைசி குமாரனே பிதாவின் முயற் சியின் தன்மை அறியாமல் தன் நிலையறியாதவனுயிருந்து கொண் டிருந்தான். சில காலங்கழிய பிதாவிற்கு மரணம் ஏற்பட்டது. புத்திரர்கள் மூவர்களும் பிரிந்தார்கள். முதலாமவன் தன் பிதா போனவழியில் முயற்சி செய்துகொண்டு தனக்கு கிடைக்கும் ஊதியம் கொஞ்சமானுலும் சிக்கனமாக வாழ்க்கை நடத்திக்கொண்டு தன்னுலியன்ற உதவியை பிறருக்கு செய்துவந்தான். இரண்டாவது புத்திரன் தன் பாகத்திற்கு கிடைத்த பூஸ்திதிகளை விற்றுக் கொண்டு ஓர் மோட்டார் ஓட்டும் கம்பெனி ஏற்படுத்திக்கொண்டு அதில் அதிகலாபம் வருவதை கண்டதும் மோஹம் ஜாஸ்தியாகி இரண்டொரு புது கார்கள் மூலம் அதிகலாபம் சம்பாதிக்கக் கருதி சில வேலையாட்களை நியமித்துக்கொண்டான். மூன்ருவது புத்திரன் நிலை பரிதபிக்கக் கூடியதாயிருந்தது எப்போதும் சோம்பலும், முயற்சியின்மையும் வேண்டாத டம்பமும் தன் பிதாவின் குடும்ப நிலை தெரிந்துகொள்ளாதவனுயும் காலந்தள்ளிவந்தான். சில வருடங்கள் கழிந்தன. மூத்தகுமாரன் இப்போது கிருமத்தில் நல்ல

உழைப்பாளி என்ற பெயர் அடைந்ததோடு விவசாயத்தில் எல்லா மார்க்கத்திலும் அவனுக்கு அனுகூலம் பெருகிவந்தது. அவனுடைய வீட்டு குழந்தைகள் நல்ல பழக்கமுடையவர்களாயும், பிதாவின் தொழிலுக்கு அனுகூலமுடையவர்களாய் இருந்து கொண்டிருந் தார்கள். வீடு கிருமத்தில் சிறியதாயும் சுத்தமாய் நல்ல காற்றுடைய தாயும் பல செல்வமும் பொருந்தியிருந்தது. அவன் வீட்டிற்கு வருபவர் பசித்து திரும்புவதில்லை.

இரண்டாவது புத்திரனோ மோட்டார் மூலம் முதல் இரண்டு வருடத்தில் சம்பாதித்த பணம் மூலம் டவுன் பக்கம் ஓர் வீடு அமைத்துகொண்டான். எல்லா வேலை செய்வதற்கும் வேலையாட்கள் அவனுடைய மனைவி கிருமத்திற்கு வருவதாயிருந்தாலும் மோட் டாரிலேயே வருவாள். நகர வாழ்க்கையின் சின்னங்கள் முழு வதும் அவளிடமிருந்தது. மெலிந்த சரீரம், தாங்கமுடியாமை பட்டு வஸ்திரம், வெள்ளை கம்மல்கள், உய்யார பேச்சு, வணக்கமின்மை, காலைக் காப்பி உண்டதும் தாளாமை அடிக்கடி பிரஸவம், குழந்தைகள் பலவீனம், ஆத்திரம், கோபம் இவைகளோடு கிரும வீட்டிற்கு வந்துவிட்டால் கிருமத்துக் குழந்தைகளால் தன்பிள்ளை கள் அடிப்படமும். அம்மா குழந்தையின்பொருட்டு சண்டைக்குப் போவாள். கிரும பெண்டுகள் சிரிப்பார்கள். அதனால் வரும் அவமானம். மேலும் எப்போதும் கிரும வாழ்க்கையில் வெறுப்பு இருந்தாலும் கிருமத்திற்கு வந்துவிட்டால் புதியதோர் தோற்றம் நல்ல காற்று இவைகளெல்லாம் அவளை அறியாமலேயே வசிகாப் படுத்தும். மோட்டார் ஓர் நபர்மேல் ஏறிவிட்டது. அதனால் அதிக நஷ்டம். டவுன் வீடு ஏலம், மோட்டார் ஓட்டம் நின்று விட்டது. இப்போது பணம் வருவாயில்லை. தரித்திரம் குடும்பத்தில் தானும் ஐந்து குழந்தைகளுடைய தாயாரும். ரூ 800—0—0 கொடுத்து வாங்கிய வைரக்கம்மல் ரூ 100—0—0க்கு கேட்பாரில்லாததினால் அந்த வைரக்கம்மலும் தான் பாக்கி. இவைகளெல்லாம் கண்ட இரண்டாமவன் கிருமத்தில் தன் தமயன் மூலம் எப்படியாவது வாழலாமென்ற எண்ணத்தின்பேரில் கிருமம் வந்து சேருகிறான்.

மூன்றாவது புத்திரன் கிருமத்திலேயே குடியிருந்தாலும் வெற்றிலைப் பாக்கு புகையிலை, சுருட்டுகள் எப்போதும் வேண்டும்.

எப்போதும் தூக்கம் சோம்பல் இவைகளினுலும் தன் நேரம் முழுவதும் கழித்துவந்தான். முடிவில் சொத்துக்கள் விற்கப்பட்டு சோம்பலினுல் அஜீரணம் ஏற்பட்டு அகால மரணமடைந்தான். தன்னிடம் வந்த தனது தம்பிக்கும் தன்னுல் உதவிசெய்து கொடுத்து சத்வகுண பிரதானியாய் மூத்தகுமாரனும் ரஜோகுணத்தினுல் தன்னுசை பூர்த்தியாகமல்போன இரண்டாவது குமாரனும் தமோகுணத்தால் அகால மரணத்திற்குட்பட்ட மூன்ருவது குமாரன் கதையும் கூறப்பட்டது. இவைபோன்ற உதாரணங்கள் சத் ரஜோ தமோகுணத்தைக் காட்டுகின்றன. முக்குணம் விட்டவனின் கூற்று என்ன என்று கேட்கப்படலாம். முக்குணம் விட்டவன் யார்? எப்படியிருப்பான் என்பதற்கு பகவான் தரும் பதிலே கவனிப்போம்.

துக்க சுகங்களே சமமே கொள்வானும்
இக்கர்மமுமியக்க இணக்கமது கொள்ளானும்
முக்குணவிட்டவனுப் முனைந்துநிற்கு பக்தியினுல்
எக்காலத்துமெனைபஜித்து ஏத்தும் பிர்ம்மமாவான் காண்

துக்கம், சுகம் இரண்டும் சமமாய்கொண்டு எந்த விதமான செய்கையிலும் ஈடுபடாமலும் பக்தியையே பிரதானமாய் கொண்டாலும் முக்குணமும் விட்டவனுயும் எனையே எப்போதும் பஜிப்பவன், பிர்ம்மமே அவனுவன், ஆகையினுல் முக்குணமும் விட்டவன் பிர்ம்மத்தோடுலயித்திருப்பதால் அவர்களால் செய்யப்படும் கர்மம் அல்லது செய்யாதிருக்கப்படும் கர்மம் இரண்டும் ஒன்றெனக் கொள்ளவேண்டும்.

**14**-வது அத்தியாயம் குறிப்புரை முற்றிற்று.

---

இனி பகவான் கூறுவதை 15-வது அத்தியாயத்தில் படிப்போமாக.



REGD. No. 3175. ESTD. 1930.

# CHANDRA APPALAM DEPOT.

## சந்திரா அப்பளாம் டிப்போ.

உங்களுக்கு மணமும், குணமும், ருஜியும், சுத்தமும் வைதீகமும் விலை சகாயமுள்ள அப்பளாம் வேண்டுமென்றால் மேற்கண்ட விலாசத்திற்கெழுதுங்கள். ஏனெனில், நாங்கள்:

இவ்வியாபாரத்தில் 10-வருட பழக்கத்தோடு எங்கள் எல்லா வாடிக்கைக்காரர்களையும் திருப்தி செய்துவருகிறோம். விலையில் போட்டியிட்டு விற்கின்றோம். நயத்தில் நல்ல சாமான்களை தயார் செய்கின்றோம். பிராமணர்களே அப்பளாம் தயார்செய்வதால், வைதீகத்திற்கு ஏற்றதாயிருக்கின்றது. உங்கள் ஆர்டரை ஓர் தடவை தந்து எங்கள் வாடிக்கைக்காரர்கள் ஆகுங்கள்.

R. S. & K. S. IYERS,
Proprietors.
CHANDRA APPALAM DEPOT., KALLIDAIKURICHI.

---

### அம்பீஸ் தேள்கடி மருந்து

இம்மருந்தானது தேள்கடி விஷத்தை உடனே கண்டிக்கக் கூடியது. தேள் கடித்த இடத்தில் ஒரு மாத்திரையை பன்னீரிலோ அல்லது ஜலத்திலோ குழைத்துத்தடவவேண்டும் ஐந்து நிமிஷத்திற்குள் வலி விட்டுவிடும். ஒரு தடவை வாங்கி உபயோகித்துப் பார்த்தால் குணம் நன்றாய்த்தெரியும்.

3 மாத்திரைகள்கொண்ட ஒரு பாக்கெட் விலை அணா இரண்டுதான்

---

### அம்பீஸ் பற்பொடி.

இது மிகவும் நேர்த்தியாகவும் வைத்திய சாஸ்திர முறைப்படிக்கும் தயாரிக்கப்பட்டது. பல்வலி முதலான சகலவிதமான பல்வியாதிகளையும் குணப்படுத்தும் சக்தியுள்ளது.

ஒரு பாக்கெட் விலை அணா ஒன்றுதான்.

கிடைக்குமிடம்:—

அம்பி அய்யர், சன்னதித்தெரு, அம்பாசமுத்திரம்.

Regd. No. M. 4337. [15-6-'41] Vol. 1, Bk. No. 10.

# பகவத் கீதை.

15, 16, 17 அத்தியாயங்கள்.

பாக்கள், விரித்துரை.



ஆக்கியோன்,

மஹரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved.) 1941. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

# பகவத் கீதை.



## 15-வது அத்யாயம்.

முன் 13-வது அத்யாயத்தில் க்ஷேத்ர க்ஷேத்ரக்ய விபாகம் சொல்லப்பட்டது. 14-வது அத்யாயத்தில் சத் ரஜோ தமம் என்ற முக்குணங்களையும் பற்றியும், குணாரஹிதத்தையும் கூறி இந்த 15-வது அத்யாயம் ஸம்ஸாரத்தின் தன்மையையும் கூறி புருஷோத்தமனென பிர்ம்மத்தை யடைவதற்குரிய சாதனங்கள் சொல்லுகின்றது.

1 மேலான பாகமதை மேன்மைக்கு மூலமாயும்
சாலான கிளையோடு சோலையிலையசுவத்தம்
போலான சம்ஸாரம் பாழாகாதெனச் சொலும்
நூலான வேதமறிவர் நன்றறிந்தாருவார்.

2 குணமே விர்த்தியும் கூறும் விஷயம் துளிரும்
வணருடை கிளைகள் வானும் கீழும் பரவ
உணர்வில் கருமசேஷம் ஊக்கமுளவேராக
பிணங்கலது கொண்டு பெருகிப் பரவியதுகாண்.

3 எங்கும் பரவியுள்ள ஏகமாம் விருட்சமதின்
பொங்குமிடமதினை பூர்ணமாயறிந்தேதான்
மங்குதலில்லாதந்த வைராக்கிய வாளினாலே
சங்கையன்றி சேதித்து சரணஞ்செய் ஸர்வன்தன்னை.

4 அகங்காரமபிமானம் ஆசைமுழுது மற்று
சுகதுக்க மற்று சொல்லக்ஞான மகற்றி
இகமதில் புத்திராதி இஷ்டஜன அபிமானத்தை
அகமதில் கொஞ்சமும் அடையானே யடைவான் என்னை.

5 திரும்பி வாரான்காண் திவ்ய ஸ்தானம் பெறின்
பெருஞ் சூரிய சந்திரன் பிரகாசம் வேண்டாமிங்கு
அருமக்ஞானியுமங்கு அருஞ்ஜோதி தாரானய்யே
தருமத்தானமே தனியன் என் ஸ்தானமாகும்.

6 என்னுடை யம்சமாம் எங்குமனாதி ஜீவன்
மன்னுமாசையாலே மனதா மிந்திரியத்தை
சொன்ன சம்ஸாரத்தின் சுகபோகமதைக்காண
தன்னிலிழுப்பதையே சத்விஜபா யறிவையே நீ.

7 வாசனைதனைத் தரும் வாடா புஷ்பமதின்
நேசமதைக்கொண்டு காற்று நெடுமணந்தருவனேபோல்
தாசசரீரமதை தரித்துள ஜீவன்தானும்
மோசமிந்திரியத்தை முற்றிலும் கிரகிப்புதைக்காண்.

8 காதாலும் கண்ணாலும் காணாதுவக்கால் நாவால்
ஆதாரமனத்தால் ஆண்புடைபஜ்ஜீவன்
சாதாவிஷயமதை சமமாய் நுகர்வதாலே
ஏதாலும் சந்தேகம் இதிலில்லை யறிவாயே.

9 எப்பாவுமிருப்பான் எத்தேகத்திலும் மாறுவன்
செப்பும் விஷயமதில் சேர்ந்தனுபவிப்பான்
ஒப்பும் இஜ்ஜீவன்தனை உண்மை முயற்சிதனில்
தப்பில் காண்பாரே தவமுடை ஞானியாவர்.

10 கூறிய அக்னிதனில் காணும் பிரகாசமும்
சூரிய சந்திரர்களில் தோன்றும் தேஜஸ்நான்
நேரில் என்பலத்தால் நெடும் பூமியைத்தாங்கியே
பாரினில் பயிர்களை பரிவுடன் போஷிப்பன் நான்.

11 பாரினில் காணுமந்தப் பிராணிகள் தேகமதில்
சூரிய அக்னியாய் கும்பியில் புகுந்துமே நான்
மாரியமைப்பேனுன் மனமோடு உண்டந்த
பேரிய உண்டியையும் புசிக்கவல்லான் காண்.

12 எல்லாவற்றிற்கும் இயங்கும் ரூபியேயாய்
சொல்லால் முழங்குமந்த சத்வேத ரூபிகுருவும்
அல்லாமலங்குமறதி அறிவு நினைவாதிகளை
வல்லான் நானேதான் வகுத்தேனிங்கு உலகில்.

13 மன்னுமுலகமதில் முறையில் க்ஷரனக்ஷரனென
உன்னுபுருடர்கள் உணர்வாலிருவருளர்
முன்னவன் க்ஷரனே முடிவுள அசேதனமாம்
பின்னவனக்ஷரன் பிடியுள சேதனன்காண்.

14 வேதத்தாலறிவாயே வேண்டும் பரந்தன்னை
பேதமில்லாதிவன் பேதிப்பான் க்ஷரனக்ஷரந்தன்னை
சேதனனின் உத்தமனுய் திகழுமெந்தனையே
வேதமதுகூறிடுமே வேத்யபுருடனுமென்னை.

15 நிச்சிய ஞானத்துடன் நிர்மலமாயுள்ள
உச்சத்தில் காணுமென்னை உண்மை மூர்த்தியேயென
அச்சமிலறிந்தார்கள் ஆராதிப்பாரென்னையவரும்
மெச்சலுள சாஸ்திரமிதை மெய்யெனயறிவாய் நீ.

15-வது அத்தியாய பாக்கள் முற்றிற்று.

---

## பாக்கள் விரித்துரை.

1-வது பா. மேலான பாகமதை மேன்மைக்கு மூலமாயும்; உயர்தலுக்கு காரணமானது மேலான பாகம்;

சாலான கிளையோடு சோலையிலை அசுவத்தம்போலான சம்ஸாரம் அதிகமான கிளையோடும் நிறைந்த யிலையோடும்கூடியுள்ள அசுவத்த மரம் போன்ற இந்த சம்ஸாரம்;

பாழாகாதெனச் சொலும் நூலான வேதம்.
முடிவுபெருது என்று சொல்லும் வேத நூல்;

அறிவர் நன்றறிந்தாரவர்
தெரிந்தவரே நன்ருகத் தெரிந்துளார்கள் என்று கொள்ளவேண்டும்

"மேலான பாகமதை மேன்மைக்கு மூலமாயும்" — என்று சொன்னயிடத்து பகுதிக்கு மேல்பட்ட பாகம், மேன்மைக்கு மூலமென்றல் தான் விருத்தியாவதற்கு "மூலம்" வேராக அமைந்துள்ளது 'சாலான கிளை' எப்படி ஸம்ஸாரம் அநேக கிளைகளோடு அமைகின்றதோ அப்படியும் "சோலையிலை அசுவத்தம்" நிறைந்திருக்கும் இலை

களோடு கூடியிருப்பதை கவனிக்கவேண்டும். ஆகவே அநேக கிளைகள் இலைகள் எப்படி அசுவத்தத்தை தாங்குகின்றதோ அதே போல், இந்த ஸம்ஸார விருட்சம் படர்ந்தும் அடர்ந்தும் மேலான பாகத்தை வேராக ஊன்றிக்கொண்டும் தன்னை பலப்படுத்திக் கொண்டிருக்கிறது. இந்த ஸம்ஸார விருக்ஷம் குலைக்கப்படவேண்டு மென்றால்,

> "எங்கும் பரவியுள ஏகமாம் விருக்ஷமதின்
> பொங்குமிடமதினை பூர்ணமாயறிந்தேதான்
> மங்குதலில்லாத வைராக்கிய வாளாலே
> சங்கையில் சேதித்து சரணஞ்செய் சர்வனைத்தான்"

"இப்படி பரவியுள விருக்ஷத்தின் அடிப்படியை யறிந்து வைராக்கியமென்ற வாளினாலே சேதித்து" அறுத்து தள்ளி ஸர்வனு யிருக்கும் கடவுளைச் சரணஞ்செய் அப்படி சரணமடைவதற்கு ஸாதனம் 4-வது பாவில் கூறியிருக்கிறது.

5-முதல் 12-பாக்கள். பிர்ம்ம நிலை கூறப்படுகின்றது. 13-வது பா. க்ஷரன் அக்ஷரன். க்ஷரன் என்றால் அசேதனன் (ஜீவனில்லாதவைகள்) அக்ஷரன் என்றால் சேதனன் ஜீவனுடைய வைகள் அதாவது ஜீவாத்மா என்ற விபாகங்கூறி 14, 15-பாவில் தன்னை ஆராதிக்கவேணுமென்று கூறப்படுகின்றது.

15-வது அத்யாயம் விரித்துரை முற்றிற்று.

—oo—

## 16-வது அத்யாயம் பாக்கள்.

1 பயமின்மை மனசுத்தி பவித்ரமாம் ஆத்மஞானம்
தயவுடை தானம்செய்தல் சமாதி எக்ஞம் செய்தல்
அயலிந்திரியங்களை அடக்கியாளுதலையும்
ஜயமுடன் பிர்ம்ம எக்ஞம் ஜபயெக்ஞம் செய்தலையும்.

2 உயரிய நேர்மையும் உண்மை தவத்தையும்
அயலார் தமக்குமே அறிவு துன்பம் செய்யாமை
நயமுடன் சத்யம் நலமிலா கோபமின்மை
துயர்தரும் கோள்தனை சொல்லா தொழிலும்.

3 இன்னமும் கேளென்று இயம்புவானெழிலுடையான்
உன்னதக் கொடையும் ஒழுங்காய் மனமடக்கல்
சொன்ன விஷயமதில் சொல்பாசையுமில்லாதான்
அன்றியும் இன்னமும் அர்ஜுனா நீ கேட்பாய்.

4 பெருந்தன்மை சபலமின்மை பொறுமை தைரியம்கொளல்
ஒருவருக்கும் துரோகமதை ஒருக்காலும் செய்யாமை
பெருமையுளிச் செய்கை பெருந்தேவப் பிறப்பான்
அருளுடனடைவனென அர்ஜுனா நீ யறிவாய்.

5 கோபமும் தற்புகழும் கொடூரத் தன்மையாலும்
தாபமுடன் டம்பமும் தனதிகாரமதுவும்
பாபமுள செய்கையிவை பாரில் அஸுர சம்பத்தாம்
சாபமோடு ஜனித்தாரை சார்ந்தவை யென்றறிவாய்.

6 பந்தமதை நிவிர்த்திக்கும் பெருந்தைவ சம்பத்து
அந்தமில அசுரசம்பத்து அடைவிக்கும் பந்தமதை
குந்தி புத்ராகேள் கூடும் தைவசம்பத்தே
உந்தனிடமிருக்கக் காண் உறுதிகொள்வாய் நீ.

7 தூசுடை யிவ்வுலகில் தைவமென்றொன்றும்
ஆசுரமென்றொன்றும் அமையும் சிருஷ்டிதனில்
மாசுயில் தைவசிருஷ்டி மன்னஉனக்குச் சொன்னேன்
ஆசுர சிருஷ்டிபற்றி அறைவேன் கேளென்றார்.

8 தற்ம பிரவர்த்தியற்றார் சுத்தமாசாரமற்றார்
பெரும் பிரபஞ்சம் வேத பிரமாண மற்றதென்பார்
தருமா தருமம் பேணார் தனியீசனில்லை யென்பார்
புருட ஸ்திரீ காமமே பூவுலகின் காரணமென்பார்

9 ஜகத்தினை யழிக்க வேண்டி செம்மையில் சார்வாகர்கள்
அகங்கார மனத்தோடு அற்ப புத்தியோடவர்கள்
சுகமிலிர் கர்மங்களை துர்ப்பிரயோகஞ் செய்வார்
ஜகவிரோதியிவர் ஜகந்நாசஞ் செய்வார்காண்.

10 சமனமாக காமமதை சதாயனுசரித்து
மமதை டம்பம் கர்வம் மத அக்ஞானத்தோடு
தமம்செய் குணத்தோடு சத்வமிலா விரதமதை
சுமந்துமே செய்வாரிவர் சார்வாக மதத்தார்கான்.

11 நீங்கிலா யிக்கவலையை நினைவில் மரணம்வரை
ஓங்கிவளர்த்தியவர் உடலின்பம் பெரிதென்பர்
ஆங்கவருமிக்காமத்தை ஆச்ரியத்தனியாயமாய்
தேங்கச் செய்வார்கான் திரவிய கும்பல்தனை

12 இப்பொருளெனதென்பர் என்மனம் பெரிதென்பர்
எப்பொருளுமெனதென்று ஈட்டுவதே மேலென்பர்
தப்புபல செய்வேனுன் சத்ருஹதம் செய்வேனுன்
ஒப்பில் பிரபு என்றே எப்போகமுமெனதென்பர்

13 போகமெலாமெனதென்பர் பலம் சுகமெனதென்பர்
யாகமது செய்திடுவேன் தானமது செய்திடுவேன்
மோஹ அக்ஞானத்தை மோஹிப்பாரிவரெல்லாம்
சோகஞ்செய் நரகமதில் துன்புற வீழ்வார்கான்.

14 தற்புகழுடையோராய் தனங்கொள் கர்வமுடன்
துற் அகங்காரியாய் சத்வணக்கமில்லாருய்
அற்ப ஆசைகோபம் அகந்தை டம்பமுள்ளோரால்
தற்பமுடன் செய்யெக்ஞம் சார்வாகர் செய்கையாகும்.

15 செய்கையில்லிதமுளார் ஜனன மார்க்கந்தனில்
உய்விலா அசுரயோனி உத்பவமாவார்கான்
உய்விலா அதமரிவர் உண்மையிலெனையடையார்
வெய்யரடை பிறவிதனில் வீண் ஜன்மம் பெறுவாரே.

16 காமக்குரோதலோபம் கருத்தினில் கொண்டுளார்கள்
க்ஷேமமது பெறூர்கான் சேர்வார் நரகமதில்
காமக்குரோதலோபம் கருத்தினில் விட்டவர்தான்
க்ஷேமமது பெறுவதோடு ஜயமோக்ஷமடைவாரே.

17 சாத்திரமதுவிட்டு தன்மனம் போனவாறு
தோத்திரித்து நடப்போர்கள் சுகமோக்ஷமடையார் காண்
சாத்திரப் பிரமாணமதை சரியே நீயுணர்ந்து
ஆத்த (உண்மை) முடன் செய்கருமம் அறமுளகருமமேயாம்.

16-வது அத்தியாய பாக்கள் முற்றிற்று.

---

## விரித்துரை.

1, 2, 3, 4 பாக்கள். தைவசம்பத்துபற்றி கூறுகின்றது. 5, 6, 7 பாக்கள் அஸுரசம்பத்துபற்றி கூறுகின்றது. ஆகவே மனிதனிடம் காணும் பழக்கங்கள் இரண்டு ஒன்று தைவசம்பத்து என்றும் மற்றொன்று ஆசுரமென்றும் ஆகின்றது. ஆகவே மனிதன் தன்னிடமிருக்கும் தைவசம்பத்துக்கு பலம் தேடவேண்டும். 8-முதல் 17-பாக்கள் சார்வாக மதத்தோர்கள் நடத்தை கூறப்பட்டு கண்டிக்கப்படுகின்றது. மனிதர்களில் இரண்டு குணமுண்டென்றும் ஒன்று தைவசம்பத்து இன்னொன்று அஸுரசம்பத்து இவை யிரண்டும் ஒன்றிற்கொன்று முற்றிலும் மாறுபட்டதாயிருந்தாலும் இவையிரண்டும் தனித்தனியே மாறிமாறி மனிதனிடம் காணுதலியல்பு. ஆகையால் மனிதன் முக்கியமாக தைவசம்பத்தின் நிலையறிந்து அதையே அனுஷ்டிக்கக் கோரப்படுகின்றான். 16-அத்தியாயத்தில் 1, 2, 3, 4 பாக்கள் தைவசம்பத்தாககூறி 5-வது பா-மூலம், கோபம் தற்புகழ் கொடூரத்தன்மை தாபம் டம்பம் தனமிகுதியால் அதிகாரம் இவைகளையெல்லாம் பாபச்செய்கையென கூறி அசுரசம்பத்தென கூறுகின்றார். மேலும் தைவசம்பத்தால் மோக்ஷமும் அஸுரசம்பத்தால் கட்டுதலும் உண்டாகுமெனக்கூறி அர்ச்சுன உந்தனிடமிருப்பது தைவசம்பத்து ஆதலால் யுத்தம் செய்என்கிறார்.

16-ல் 9-வது பாவில். "சமனமாக காமமதை சதாயனுசரித்து" காமத்தை பூர்த்திசெய்வது என்பது கஷ்டம்; முடியாதது அப்படி பூர்த்திசெய்யமுடியாத காமத்தை எப்போதும் அனுசரித்துபோனால் நிலை என்னாகும். ஆதலால் மனித ஜன்மமெடுத்தோர்கள் முக்கியமாக அறிந்துகொள்ளவேண்டியதை அறிந்து செய்யவேண்டும்.

9-முதல் 14-பாக்கள். அசுரசுபாவம் கூறப்படுகிறது. இதை ஆழ்ந்து வாசித்தால் இவைகளை தவிர்க்கவேண்டி அடிக்கடி நினைவு வரும்.

16-ல் 15-வது பா. காமம், குரோதம், லோபம் மூன்றும் உடையார் க்ஷேமத்தை அடையமாட்டார்களென்றும் இம்மூன்றும் விட்டால்தான் மோக்ஷமார்க்கம் திறக்கப்படுமென்றும் கூறப்படுகிறது.

16-ல் 6-பா.

சாஸ்திர ஞானத்தை நன்றாய் பெற்று கருமம் செய்யவேண்டுமென்று கூறப்படுகிறது.

16-வது அத்தியாயம் பாக்கள் விரித்துரை முற்றிற்று.



## 17-வது அத்யாயம் பாக்கள்

1 கிருஷ்ணா யியம்புவீரென கேட்பானர்ச்சுனனும்
சிரத்தையோடொருவன் செய்கருமம் மீறி
கருத்துடன் பகவானின் கிருபைதனைக் கோருவனேல்
சுருக்கத்திலவன் செய்கை சத்தா ரஜஸ் தமமா.

2 தேகத்துடையார்தம் சேர்ந்த செய்கைதானும்
பாகத்திலவர் செய் பாவித்த கர்மப்படி
ஏகனும் நானுரைத்த யஜஸ்ஸடை ஸாத்வீகம்
மோக ராஜஸமும் மூடத்தாமதமே காண்.

3 அந்தகரணப்படியே அவரவர் சிரத்தைகொள்வர்
அந்தியம்வரை எந்தனையே ஆராதிப்பார் சாத்வீகர்கள்
வந்திப்பார் யக்ஷர்தமை வளர் ராக்ஷஸர்களும்
சிந்தைதனில் பூஜிப்பார் தாமஸர் பூதப் பிரேதமதை.

4 ஆத்மாவை சரீரத்தை ஆனபூத கூட்டமதை
கூத்தாக ஆக்கியதனை கேடு செய்வார்காண்
தோத்திரப் பிரியராம் சோம்பலவிவேகிகளை
நாத்த அஸுரரென அறிவாயர்ஜுனா நீ.

5 மூன்றுவித ஆகாரம் முக்குணத்தோருக்குண்டு
சான்றுள செய்கையும் எக்ஞம் தபசு தானமாகும்
ஊன்றிக்கேள் பேதமதை உந்தனுக்கு சொல்வேன் நான்
தோன்றுமிப்பாரின் சூக்ஷ்மமதை யறிவாயே.

6 உற்சாகம் பலந்தந்து உயிருடன் பலந்தரும்
நற்பசை தைலமுடன் நற்சுவை யாகாரம்
சொற்பமாக உண்பர் சத்வீக ஜனங்களவர்
பற்று மிவ்வுணவு பவித்திரமாகுங்காண்.

7 உப்புடன் புளிகசப்பு உவந்து அதிகமுண்பர்
தப்பாமல் ரோகம் சோகம் துக்கமதை உண்டுபண்ணும்
ஒப்பியே இவ்வுணவை அவ்விராஜஸனுண்பானே
செப்புமிவைகள் தாம் மத்திமமாகுங்காண்.

8 தாமஸன் உண்ணுமந்த தாமிலா உணவுதனை
பூமகள் ஆளுமந்த புனித விஜயர்கேள்
சேமம் செய்துளதாம் செம்மைதனைத் தாராத
தூமத்தூர் வாஸனையும் தேங்கிய உண்வேதாம்.

9 சாத்வீக எக்ஞமதில் த்யாகமே முக்கியமாகும்
ஆத்ம திருப்தியுடனே அனுஷ்டிப்பான் ராஜஸனும்
சாத்திரப் பிராமணமற்று தக்ஷிணை தானமற்று.
தோத்திரப் பிரியரெக்ஞம் தாமஸ மெக்ஞமாகும்.

10 தேவருடன் பிராமணரையும் தெய்வஞானி குருவினையும்
பாவமில் பூஜிப்பதுவும் பிர்ம்ம சரியம் நேர்மையும்
ஆவலன்றிருப்பதுவும் அன்னியனை துன்பிக்காமை
ஜீவனுள தேகமதால் செய்தவமாகுங்காண்.

11 சத்யமதுரைத்து சாஸ்திர வேதங்கற்று
சுத்தியுள மனமுடனே சொல்லின்ப முடைத்து
எத்தகைய ஜீவனையும் எள்ளிநோகச் செய்யாமை
இத்தகைய தபசுதனை இவ்வாக்கால் செய்தவமென்பர்.

12 நல்விருத்தியிலே நலமுடன் மனதிருத்தி
எல்லாப் பொழுதிலும் ஏகனை த்யானித்து
அல்லளி கபடம் ஆடும் குரூரமற்று
வல்லயித் தபஸை மனத்தவமே யென்பர்.

13 தேகம் வாக்கு மனமென்ற சொல் தப மூன்றும்
சோகந்தீர் பெரியோர்கள் சாத்வீக மென்பார்கள்
மோகமுடன் பொருளிட்ட முனைந்து செய் தவமதினை
லோகமதிக்கச் செய்வான் உண்மை ராஜஸனும்.

14 மூடபுத்தியோடும் முனைந்த கோபத்துடன்
ஆடம்பரத்தோடு அங்கமதை வருத்தி
தேடி யொருவனுக்கு தீமை யளித்திடவே
நாடிடும் செய்கைதனை நலமில் தாமஸ மென்பர்.

15 கால தேசமறிந்து கல்வியுள பிராமணர்க்கு
சாலச் செய்தானமது சாத்வீக மாகுங்காண்
மேலப்பலன் வேண்டி மனம்வருந்தி செய்யும்
கோலமில் தானமதை குறை ராஜஸமென்பார்.

16 அகாலமதிலேயும் அவமறியாதையுடனேயும்
தகாதவர்பொருட்டு தானமது செய்தலையும்
நிகாதரிவர் செய்கை நீர்சூழ் நிலந்தனிலே
விகாதச் செயலென்று வீண் தாம்ஸமென்பர்.

17 ஓம் தத்ஸத்தென்று ஓதுவார் பிர்ம்மமதை
ஆமென்றுரைப்பார் அறிவுடை ஞானிகளும்
ஓமென்ற பெயரால் உத்தம பிராமணரும்
ஓம் நீங்க தத்ஸத் ஓங்கும் வேத எக்ஞங்காண்.

18 ஓங்கும் பிர்மம் நாமம் ஓம் தத்ஸத்தாகும்
பாங்கினில் வேதமதை பகுத்தறிந்தார்கள்
ஆங்கவர் செய்யும் எக்ஞதான தபசுதனை
ஓங்கார மந்திரமாம் ஓமென்றே தொடங்குவார் காண்.

19 தத்தென்றுச்சரித்து தான எக்ஞம் செய்வர்
அத்தானம் செய்வோரும் அதின்பலன் வேண்டார்
வித்தமுடன் மோக்ஷமதை விரைவிலடையவே தான்
சுத்தமுள மனத்தோடு தத்தென்றுரைப்பார் காண்.

20 ஸத்பாவத்திலும் ஸாது பாவத்திலும்
ஸத்தென்ற பதமே ஸர்வதாவருங்காண்
ஸத்கர்ம செய்கையிலும் ஸத்துக்கள் செய்கையிலும்
ஸத்தென்பதையே ஸதா கேட்பாயே.

21 சிரத்தையற்ற ஹோமம் தானம் தபஸு கருமம்
பரத்திலொரு விதமும் பயன்படாது காண்
சிரத்தையில்லாமல் செருக்குடை கர்மமெல்லாம்
பிரயோஜன மெங்குமே பாலிக்காது காண்.

17-வது அத்யாயம் பாக்கள் முற்றிற்று.



## விரித்துரை.

1. அர்ச்சுனன் கேள்வி.

2. பூர்வ கருமப்படியே செய்கையும் பவிக்கும்.

3, 4-பாக்கள். ஸத்வ ரஜோ தமோ குணத்தாரின் மாறு பட்ட வணக்கம் கூறப்படுகின்றது.

5, 6, 7, 8. ஸத்வ ரஜோ தமோ குணத்தாரின் மாறுபட்ட ஆகாரம் கூறப்படுகின்றது.

9-வது பா. மூன்று குணத்தோரின் செய்கை கூறப்படு கின்றது.

10, 11, 12-பாக்கள். தேகம், வாக்கு, மனது இவைசெய் தவம் கூறப்படுகின்றது.

13, 14-பாக்கள். சத்வ, ரஜோ, தமோ குணத்தார் செய் எக்ஞம் கூறப்படுகிறது.

15, 16-பாக்கள். மூன்று குணத்தோர்களின் தான மாறு பாடு கூறப்படுகின்றது.

17, 18, 19, 20, 21-பாக்கள் ஓம், தத், ஸத் விபரம் கூறப் படுகின்றது.

17-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

## 18-வது அத்தியாயம் பாக்கள்.

1 சன்யாசமென்பதென்னை தியாக மென்பதின்னை
என்மனதில் பதிந்திடவே ஏந்தலே எனக்கருளும்
என்றுமே அர்ச்சுனன் எழிலுடையானைக் கேட்க
நன்று கேட்டாயென்று நவில்வான் தருமறித்தோன்.

2 காமியகருமங்களை கட்டுடன் விடுவதையே
சௌமிய சன்யாமென சாற்றுவார் ஞானிகளும்
காமியசிறிதுமிலா கருமபலத்யாகமே
பூமிசை த்யாகமென புகல்வர் புலனுடையார்.

3 விவேகிகளிர் சிலர் வேண்டாம் கருமமென்பா
விவேகம்வேண்டியே வேண்டுந்தவமென்பர்
சுவேச்சை த்யாகமும் செப்ப மூன்றாகும்
விவேக மனமடைய விதிப்படி எஃஞம் வேண்டும்

4 பார்த்தா நீ கேட்பாய் பகரெக்ஞம் தான தவம்
ஓர்த்தறிந்து செய்வதாலே உலக முய்யுங் கண்டாய்
ஈர்த்தபிமானத்தை ஈயும் பலன் தள்ளி
கார்த்துச் செய்தலே கடனெனக் கொள்வாயே.

5 அவசியம் செய்கருமம் அவலம்பித்தல் நன்று
அவலம்பிக்கா திருத்தல் அத்தாமஸ குணமாகும்
இவணிதில் துக்கம் இயக்கப்பிரயாசமுளதென
எவன்தான் விடுவனோ எவ்விதமவனுய்வான்

6 நித்யம் செயவேண்டும் நியமகருமமதை
பத்திய அபிமானத்தை பலனையும் விட்டவனும்
சித்திபெறச் செய்வாயேல் சீரான கர்ம்மமதை
சத்விக கருமமென சாதிப்பாரிவ்வுலகில்

7 சுக துக்க கருமமிதை த்வேஷிக்கான் சத்தவனும்
அகத்யாகமுளான் அசய்சியவானவன்
ஜகமதில் கருமமன்றி தேகத்தோடிருந்தோர்காண்
இகமதில் கருமம் செய்து ஈயும் பலனறுப்பன் த்யாகி.

8 சுகமென்றும் துக்கமென்றும் சுக துக்கமென்றும்
ஜகத்தில் மூன்றுவித செய்கை பலனதிவை
இகத்தில் பலயிச்சையன்றி இக்கருமம் செய்தார்க்கு
இகலோகம் விட்டதவும் இக்கருமபலம் சித்திக்கும்.

9 எக்கருமத்தையுமிங்கு எளிதில் சித்திக்க வேண்டின்
எக்கருமத்தையுமிங்கு எளிதில் நசிப்பிக்க வேண்டின்
திக்கெங்கும் பரவியுள சத்ரூபம் விளங்க வேண்டின்
தக்கதான ஐந்துமுறை சாற்றுவேன் நீ கேளாய்.

10 தேகமும் தேகியுடன் தெளிவுடன் காணங்களும்
ஆக கரணமதின் ஆக்கு செய்கைகளும்
தேகமுதல் காணமதை செய்கையிலயக்குமந்த
மோக ஈசுவானும் முக்கிய காணங்களாம்.

11 வாக்கு மனது சரீரத்தால் வளர் மனிதன் செய்கை
நோக்கில் யுக்தா யுக்தமாக நாடும் கருமமதிற்கு
ஊக்கம் செய் காரணம் ஐந்தென அறிவதோடு
ஆக்கமிலிச் செய்கையில் ஆத்மா ஒட்டான் காண்.

12 கர்த்தா நானேயென்பான் கருத்தினில் விஷயப்பற்றிலான்
அர்த்த உலகமல்ல அவனி வாழ்வை எல்லாம்
சிரத்தையில் கொன்றுளெனினும் செய்கையில் கொன்றுள
விர்த்திக்கும் கருமமதிலும் வீணிலமையான் காண். [கான்

13 கருமத்தை நடத்தவஸ்து காண்தக மூன்றுளது
அருமையாம் ஞானம் அறியுடை வஸ்து இரண்டு
பெருமையுள அறிவான் பேணும் இம்மூன்றினையும்
கருமத்திலாச்ரியம் செய்வான் காணம் கிடை வஸ்துவாகும்.

14 குண சாஸ்திரமதிலே ஞானம் கருமம் கர்த்தாவென
குணத்தில் சாத்வீகமே கூர்மை ஞானமாகும்
சுகுணத்திலடை ஞானமது பேதமிலாமலெங்கும்
அணியவ் வஸ்துவே அவினாசி யறிதலுங்காண்.

15 எங்கும் நிறைந்துள ஏகனும் ஜீவன்தனை
அங்கெங்கும் காணும் அரும்சுருபம் பலதெனவே
மங்குதலோடு அறிமானிட ஞானமே
இங்கு ராஜஸமென இயங்குதல் நீ காண்பாய்.

16 தேகமதில் மிளிர் தேஹியாம் ஜீவன்தனை
மோகத்தால் மயக்கி முடிவேயில்லானென
ஏகமுடிவெய்யுமந்த இசையா ஞானமதை
தாகமில் தாமஸமென சாற்று வாரிதைக்காண்.

17 நித்ய கர்மத்தைதயிங்கு நிர் அபிமானத்தோடு
பத்தியுடனே யொருவன் பலா பேக்ஷையன்றி
முத்தியடைய வேண்டி முயலும் கர்ம்மமதை
சத்விக கருமமென சாற்றுவாருலக மாந்தர்.

18 தன்னையே கர்த்தாவென தனியகங்காரமுடன்
பின்னை மற்றோர்கள் பின்பற்ற அருகரல்லர்
அன்னினைவனோடு அவலம்பிக்கும் கர்ம்மமதை
முன்ன முறைத்தவாரே மோஹ ராஜஸமென்பர்.

19 பின்வருவன எல்லாம் பேணி யோஜியாதான்
தன் சக்தியறியாமல் தேடும் தனம் தொலைத்து
அந்தமில் கருமமதை அகங்காரமொடு செய்வான்
சொந்த ஞானமிலாத தாமத குணத்தோன்தான்.

20 சொல்ல பேக்ஷயில்லான் சுயம் கர்த்தாவென நினையான்
எல்லா உழைப்பாலும் எம்முயற்சி செய்யவே
தொல்லை சுகம் வரினும் தொடர்ந்து கர்மம் செய்வான்
எல்லையில் சாத்விகனென எழிலர்சுஞ யறிவை.

21 தன் தனமதிலபிமானம் தனியிச்சை யுடையானும்
அன்னியர் தனமதில் ஆக்ரஹ முடையானும்
பின்னின்று ஹிம்ஸை பேணிச் செய்வானும்
அன்னவனே ராஜஸனென அறிவாய் நீ யிங்கு.

22 வணக்கமில்லாதான் விவேகமில்லாதான்
பிணக்குண்ட மனத்தான் பேதை சோம்பலுடையாண்
சுணக்கமது செய்வான் தன் சக்தியறியாதான்
இணக்கமின்றி விசனிப்பான் இவனை தாமஸனென்றறி.

23 சத்வாதி குணத்திலமை சத்லக்ஷணத்தைக் கேள்
புத்தியின் தைரியத்தின் பேதமதுரைப்பேன் நான்
புத்தியில் தருமா தருமம் பெந்தம் பயாபயமதை
சத்விக புத்தியுள்ளோர் சுயமே யறிவான்காண்.

24 சந்தேகமது கொள்வான் தருமா தருமத்தில்
பந்தம் நீக்கும் குணம் பேதம் தெரியான் ராஜஸன்
சந்தேகத்துடன் விபரீத செய்கை நினைப்பானும்
அந்தமில் புத்தியில்லான் அக்ஞான தாமஸனுமே.

25 சலியா மனமுடையான் ஸர்வேந்திரிய அடக்குடையான்
மலையான தைரியமதில் மதிப்பே சத்விகமென்பர்
பலன் பலய பேக்ஷித்து பற்பல செய்கையோடு
நிலையா தைரியத்தான் நிலத்தில் ராஜஸனே.

26 துஷ்ட புத்தியோடு துர்குண தாமஸனும்
இஷ்டம் நித்திரையிலும் எழும் பயமதையும்
கஷ்ட விசனத்தையும் கடின வியாகூலத்தையும்
நஷ்ட யியக்கத்தையும் நாடி செய்வான் காண்.

27 சுகமதில் மூன்றுவிதம் தெளிவுடனுரைக்கக் கேள்
அகமதில் சந்தோஷம் அப்பியாசத்ாலடைவானும்
ஜகமதில் துக்கம் தள்ளி துவக்கம் கஷ்டம் வரினும்
சுகமே முடியுமென்பான் சாத்விக ஞானிதானும்.

28 ஆரம்ப சுகத்தோடு அந்தியம் கஷ்டமாக
மாறுமிந்திரிய சுகம் மன்ன ராஜஸமாம்
ஆரம்ப அந்தியம்வரை அற்ப சுகம்வேண்டி
தாருமாறுக செய்வன் தாமஸ குணமுடையான்தான்

29 சத்வாதி முக்குணங்கள் ஜகமெங்குமமையக்காண்
சத்வாதி முக்குணங்களே ஜாதிப்பிரிவு செய்யுங்காண்
ஒத்த யிவ்வாக்யமதை ஓங்கச் செய்தலிங்கு
சத்வாதி முக்குணங்களும் தனித்தனி யமையக்காண்.

30 மனமிந்திரிய மடக்கி மனவாதி தவமுடனே
மனசுத்தி பொறுமை நேர்மை மன்னு சாஸ்திர ஞானம்
அனுபவ ஞானமோடு ஆதிவேதங் கற்பதையும்
ஜனமதில் பிராமணனும் செய் கருமமென யறிவாய்.

31 யுத்தமதில் பராக்ரமும் வீரமொடு கீர்த்தியும்
எத்தருணமும் கொடையும் ஏற்கும் செங்கோலும்
புத்தியோடு சாதுர்யமும் புரமது காட்டாளும்
க்ஷத்திரிய தருமமென க்ஷத்திரிய நீ யறிவை.

32 பயிர்தனை செய்தலோடு பால்மாடு ரக்ஷித்தலும்
துயர் நீங்க வியாபாரம் செய்திடுவான் வைசியனும்
உயரிய மூவர்க்கும் உற்றதுணை செய்திங்கு
அயரு உணர்ச்சி கொள்வான் அத்திரு சூத்ரரும்.

33 தன்தன் கருமமதை தழுவி நிற்போர்கள்
தன் மகிழ்ச்சியோடு தனி ஞானம் பெறுவார் காண்
தன் கரும செய்கையாலே சுயஞானம் பெறுமந்த
தன் சித்திபற்றியிங்கு சாற்றுவேன் நீ கேளாய்.

34 ஈசுவரனே எவுமென என்றே யறிந்தார்கள்
ஆசுவாஸத்துடனேயே அவரவர் கருமம் செய்வர்
தேசுடையவர் கர்மம் சிரேஷ்டமதே யாகுங்காண்
மாசுடன் செய்தாலும் மகா பாபமாகாதே.

35 சுவ தர்மமிங்கு தந்திடும் தோஷமேனும்
அவமே யாகுமது அதினை விட்டிடுதல்
நவ அக்னியுமே நற் பிரகாசந்தரினும்
தவ தூமமதை தரித்திருக்க கண்டிலையோ.

Regd. No. 3175. Estd. 1930.

# CHANDRA APPALAM DEPOT.

# சந்திரா அப்பளாம் டிப்போ.

உங்களுக்கு மணமும், குணமும், ருஜியும், சுத்தமும் வைதிகமும் விலை சகாயமுள்ள அப்பளாம் வேண்டுமென்றால் மேற்கண்ட விலாசத்திற்கெழுதுங்கள். ஏனெனில், நாங்கள்:

இவ்வியாபாரத்தில் 10-வருட பழக்கத்தோடு எங்கள் எல்லா வாடிக்கைக்காரர்களையும் திருப்தி செய்துவருகிறோம். விலையில் போட்டியிட்டு விற்கின்றோம். நயத்தில் நல்ல சாமான்களை தயார் செய்கின்றோம். பிராமணர்களே அப்பளாம் தயார்செய்வதால் வைதிகத்திற்கு எற்றதாயிருக்கின்றது. உங்கள் ஆர்டரை ஓர் தடவை தந்து எங்கள் வாடிக்கைக்காரர்கள் ஆகுங்கள்.

**R. S. & K. S. IYERS.**

Proprietors.

CHANDRA APPALAM DEPOT., KALLIDAIKURICHI·

---

## மஹரெஷியின் வாத நிவாரணி.

கை, கால், சந்திப்புகளில், வீக்கத்துடனும் அதிக வலியும், குத்துதலோடு கடுமையான காய்ச்சலுமிருக்கும். இதற்கு தகுந்த அவுஷதம் நமது வாத நிவாரணியே. அஷ்டாங்கிருத வைத்தியத்திலும், இங்கிலீஷ் வைத்தியத்திலும் குணமாகாத நோயாளிகளுக்கு, இந்த அவுஷதம் குணம் செய்திருக்கிறது. 7 மாத்திரைகள் 3½ நாட்களுக்கு கொடுக்கப்படும். 10 நாட்களில் பூரா குணம் கிடைத்து விடும் அனுபான முறையோடு விலை ரூ. 5 மட்டும். ஆர்டர் தரும் போது நோயாளியின் வயது, தேகநிலை முதலியவைகளை எழுதுக.

தீராத வயிற்று நோய்க்கு விபரமாக எழுதுங்கள், மருந்துகள் மூலமும், யோக முறையிலும், வைத்தியம் செய்யப்படும். ஆலோஜனைக்கு ரூ. 1 மட்டும்.

வெண்குஷ்டம்: — ஆரம்பத்திலேயே வைத்தியம் செய்து கொண்டால் குணமாகும். மருந்தின் விலை அணா 1 தான். ஆனால் நாங்கள் தயார் செய்தனுப்புவதற்கு ரூ. 5 தரவேண்டும் ரூ. 1 அனுப்பி, செய்முறை தெரிந்துகொண்டால் நீங்களே செய்து கொள்ளலாம்.

மஹரேஷி கிருஷ்ணஜி, யோகாச்ரமம், கல்லிடைக்குறிச்சி.

Regd. No. M. 4337. [15-7-'41] Vol. 1, Bk. No. 11 & 12

# பகவத் கீதை.

18-வது அத்தியாயமும், தொகுத்துரையும்.



ஆக்கியோன்,

மஹாரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941. (விலை அணா 4.

18-அத்தியாயங்கள்கொண்ட 12-பிரதிகள். மாதந்தோறும் வெளிவரும். முன்பணம் ரூ 2—8—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

உ

ஸ்ரீராமஜெயம்.

# பாரத் ரெடிமேட் எம்போரியம்,

முனிஸீப் கோர்ட்டுக்கு எதிர்புரம்

அம்பாசமுத்திரம்.

ஆண், பெண், பாலர் யாவருமணியும் எல்லாவித அழகான ஸில்க், செக் சிட்டித்துணிகளில், புதுமாதிரி தையல்வேலைப்பாடுள்ள ஆடை உடைகளும், "வேஷ்டி, துவாலை, டவல் ஜவுளி தினுசுகளும் எங்களிடம் சகாயவிலைக்கு கிடைக்கும்.

தயாராகுமிடம்:-

**T. S.** சங்கரய்யா ஸ்டோர்ஸ்,
மதுரை.

**R.** நாராயணன்,
ப்ரோப்ரைட்டர்.

அறிவிப்பு.

பகவத் கீதா பூரா பிரதிகளும் ரூ. 2/-க்கு கிடைக்கும். சில காப்பிகளே இருக்கின்றன. முந்துங்கள்.

மஹரேஷி கிருஷ்ணஜீ,
கல்லிடைக்குறிச்சி.

# பகவத்கீதை.

## 18-வது அத்தியாயம்.

---

"சுவதர்மமிங்கு தந்திடும் தோஷமேனும்" ஒருமனிதன் தன்னுடைய சுவதருமத்தை அதாவது பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர என்று கூறப்படும் நாலு வருணத்தார்கள் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் தர்மம் அல்லது கர்மம் செய்தல் கஷ்டமாகயிருப்பினும் அல்லது அதிகபலம் தரத்தக்கதாயில்லாதிருப்பினும்,

"அவமேயாகுமது அதினை விட்டிடுதல்" அகர்மத்தை விட்டு விடுதல் கெடுதலேயே தரும்.

"நவ அக்னியுமே நற் பிரகாசந்தரினும்" புது அக்னியானது நல்ல பிரகாசத்தைத் தந்தாலும்,

தவத்தூமமதை தரித்திருக்க கண்டிலேயோ அதே அக்னியோடு கூடி புகையும் இருக்கக்காண்கிறோம். அதேபோல் புகையிருக்கின்றது எண்ணத்தின் பேரில் எப்படி நெருப்பை வெறுக்கமாட்டோமோ அவ்விதமே கஷ்டமிருக்கின்றதென்று சுவதர்மத்தை (கர்மத்தை) விடல் நன்றன்று. ஆகவே அவரவர்கள் தங்கள் தங்கள் மரபுக்குறிய கருமத்தை விடாமல் செய்துகொண்டு போனால்தான் உலகம் நடந்தேறும். உதாரணமாக சூத்திர கர்மத்தை எடுத்துக்கொள்வோம். பயிரிட்டு பால்மாடு ரக்ஷிக்கும் ஒரு வைசியனுக்கு தன்னைத்தானே காரியம் செய்துகொள்ளல் என்பது அசாத்யம் அவனுக்கு கட்டாயம் கூலிவேலை செய்ய ஆட்கள் தேவை. தான் கூலிக்கு ஆட்கள் அமர்த்தி கூலிப்பணம் கொடுக்க அஞ்சினால் தன் வேலை திட்டமாக நின்றுவிடும். அதேபோல் கூலியாள் ஒருவன் வேலையே செய்யாமல் தன் காரியம் நடக்குமென நினைத்தால் அதுவும் முடியாமல் போய்விடும். ஆதலால் இங்கு தன் சுயகர்மம் என்ற கூலிவேலையில் ஓர் இழுக்கு இருக்கிறதெனக் கருதி வேலை செய்யாமல்விட்டால் சூத்ர கர்மம் நடைபெறாமல் உலகவிருத்தி நின்றுவிடும். ஆதலால் ஒவ்வொரு ஜாதியும் உலகு நடைபெற தன்தன் காரியத்தையே செய்துகொண்டு போதல் நன்று என்று கூறப்படுகிறது. மேலும் பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர என்று சொல்லப்படும் நாலு வர்ணமும் புத்தி, பலம், தந்திரம், உழைப்பு

என்ற தலைப்பின்கீழ் வருகின்றது. புத்தியை விருத்திசெய்து புத்தியினால் செய்யவேண்டிய காரியங்களில் ஈடுபட்டு வேலை செய்பவர் பிராமணன். பலத்தை விர்த்திசெய்துகொண்டு அதினால் உலக காரியங்களை செய்துகொண்டு போவான் க்ஷத்திரியன். தந்திரத்தால் வியாபாரம் செய்வான் வைசியன். சரீர உழைப்பால் வேலைசெய்வான் சூத்ரன். இந்நான்கு வகை வேலைகளிலும் தனித் தனியே கஷ்டமும் சுகமும் உண்டு. கஷ்ட சுகங்களை சமமாக பாவித்துக்கொண்டு உலக முன்னேற்றத்தின் பொருட்டு தன்தன் சுயகர்மத்தை செய்துகொண்டு போதலே நல்லதென கூறுவதோடு அப்படி சுயகர்மத்தை செய்பவன் மோக்ஷ அருகனாகின்றான் என்றும் கூறப்படுதல் இங்கு முக்கியம்.

36 எல்லா வஸ்துவிலும் இல்லையேல் அபிமானம்
வல்லானாத்மாவை வகையாக ஜயிப்பானும்
எல்லா கர்மத்திலும் எதுபலம் வேண்டானும்
நல்லான் த்யாகியாவன் நலமிகு சன்யாசி காண்.

37 பிர்மஞான முடிவின் பிரமை நீங்கக்கேள்
பரிசுத்தம் நிச்சியம் தைரியம் புத்தியிந்திரிய சப்தம்விட்டு
விருப்பு வெறுப்பு நீக்கி வாக்குமன தேகமடக்கி
விருப்பில் மித ஆகாரமுடன் விஷய வைராக்கிய முளானே.

38 பிர்ம த்யான விருப்புவான் பிடிவாத அகங்காரமிலான்
தரமிலா ஆசை கோபம் துன்மார்க்க மெதுவுமில்லான்
ஒருவித மமதையற்றான் ஒழிவையே யடைந்தானும்
பிர்ம்மமே தானென்று பிரிந்து தனிவாழ்வான்.

39 தானே பிர்மமென்று தனி மகிழ்ச்சி கொண்டோனும்
ஏனே விசனங்கொள்வான் இஜ்ஜீவனை சமமே என்பான்
நானே பிர்ம்மமென நலமதில் கண்டார்கள்
கோனே யெனையடைந்து கூடிடுவார் சாயுஜ்யமதில்.

40 என்னிடத்தில் கருமபலனை எண்ணமலேற் பவித்து
என்னையே யடைதலையே எழில் ஸ்தானமாகக் கொள்
என்னை சிந்திப்போனை எவ்விதமும் ரக்ஷிப்பேனான்
என்னை நம்பாதார் எள்ளளவும் நன்மைபெறார்.

41 என் சொல்லையிங்கு ஏற்று யுத்தம் செய்யாயேல்
உன் நிச்சயமது தப்பி உண்மையில் மாயைதானும்
நின்கரும சேஷமதால் நினை கருமத்திலேவும்
உனைத்தூண்டுமீசன் உண்மையை யிங்கு யறிவை.

42 உலகத் தெங்குமுளான் உன்னிருதயத்துமுளான்
பலகலை கற்றநீயும் பவித்திரனவனைக்காண்
சிலை கொண்டிங்கு செம்போர் செய்வாயேல்
தலை ஸ்தானமதை தவறில் நீ யடைவாய்.

43 இரகபத்தி ரகசியமாம் இக்கீதா சாஸ்திரமதை
பரமனு மென்னாலே பார்த்தா நீ யறிந்தாய்
நரர்களிலுத்தமனே நான் நவின்றததறிந்து
உரர்கள் செய்வனபோல் உன்னிச்சைப்படி செய்வாய்.

உரர்கள் = அறிவுடையோர்கள்.

44 என் மித்திரனே எழிலர்ச்சுனனே
உன் நன்மைக்கே உவந்துரைத்தேன் நான்
என்னிடம் பக்திகொண்டு எனையே ஆராதிப்பாய்
என்னையே வணங்குவர் எனையே யடைவார்காண்.

45 எத்தருமமும் வேண்டாமல் எனையே சரணங்கொள்
எத்தகைய பாபமும் எக்கணமுமணுகாதுனை
மெத்த வருத்தம் வேண்டாம் மேன்மையுறுவாய் நீ
சத்துவமாம் பிர்ம்மமென்னை சரண்கொள்வார் துன்புறாரே.

46 என்னையிங்கு தூஷிப்பானும் எத்தபசும் செய்யானும்
சொன்ன பக்தியில்லான் சுயம் சேவை செய்யாதான்
உன்னத கீதார்த்தத்தை ஒருபொழுதும் கேட்பதற்கு
அன்னவனருகனுகான் அறிவை யர்ஜுனு நீ.

47 என் பக்தர்களுக்கு என்னரும் கீதைதனை
உன்னி உபதேசிப்பான் உண்மை பக்தியோடு
என்னை யடைவான்காண் இதில் சமுசியமில்லை
இன்னிதினும் பிரியம் இம்மையில் வேறில்லைகாண்.

48 இத்தகைய சம்வாதத்தை இயற்றி படிப்பானே
உத்தம எக்ஞியென உவந்துமே கொள்வேனன்
அத்தம மனிதனேனும் அசூயையில்லாமலே
இத்தரும கீதம் கேட்பின் இம்மையில் பிறப்பறுப்பான்.

49 தனஞ்சயனே நீயும் தவறில் கீதைதனே
மனதிலறிந்தந்த மனமோஹம் விட்டனேயோ
அனலில் ஆஜ்யமதை ஆகுதி செய்தாலிங்கு
என நிலையுண்டோ இதை யடைந்துளாய் நீ.

## அர்ச்சுனன் வாக்கு.

50 அக்ஞானமதகல ஆத்மரூப மறிந்தேன்
மெய்ஞான வஸ்துவினை மெய்யாகக் கண்டேனன்
எக்கணமும் நானுமிங்கு இவ்வாக்கினைதனை மீறேன்
இக்கணமே யுத்தம்தனை இயக்குவேனென்றான் விஜயன்.

## சஞ்சயன் வாக்கு.

51 சஞ்சயனும் சொல்வான் சம்வாதம் கேட்டேனென
தஞ்சமென்றடைந்தோருக்கு சரணுகதமளிக்கும்
கஞ்சன் மருமகனும் கமலச் செங்கண்ணன்
அஞ்சலென்றுரைந்த அருள்கீதா வாக்யமதை.

52 வியாஸனுக்ரஹ வரமது பெற்றதாலே
சுயாஸ மன்றியிங்கு சுயோததனுக்குச் சொன்ன
தயாமூர்த்தி யந்த திருகிருஷ்ணன் நேரிலேயே
வியாதமன்றி நானும் வியப்புற கேட்டேனே.

வியாதம் = வேறுபாடு.

53 திர்தாஷ்டிரரே கேளீர் தெவிட்டா சம்வாதம்
கிர்ஷ்ண அர்ச்சுனனிடை கேளிக்கை நடப்பனபோல்
திருஷ்டியில் நான்கண்ட செம்மை விசுவரூபம்
விருஷனி குலம்வந்தான் வேடிக்கைதான் போலும்.

54 யோகங்களுக்கீசன் எப்பக்கமுளானே
பாகத்தில் சிலையுடன் பர்க்குனன் நிற்குமிடம்
ஊகத்தில் நியாயமும் உண்மை விருத்தியும்
ஏகமா யமைந்தன இது என்னபிப்பிறும்.

18-வது அத்தியாயம் பாக்கள் முற்றிற்று.

## 18-வது அத்தியாயம் பாக்கள் விரித்துரை.

1-வது பா. சன்யாசமென்பதென்ன த்யாகமென்பதென்ன என்று கேள்வி கேட்கிறான் அர்ச்சுனன்.

2-வது பாவில். காமிய கருமங்களை கட்டுடன் விடுவதையே சௌம்ய சன்யாசமென கூறுவர். காமியமிலா கரும பலத்யாகமே த்யாகமெனப்படும் என்று கூறுகின்றது.

3-முதல் 7-பாக்கள். கருமத்தை செய்துகொண்டே கரும பலத்யாகத்தோடிருத்தல் மேலென கூறப்படுகிறது.

8-வது பா. சுகமென்றும், துக்கமென்றும் சுகதுக்க மென்றும் மூன்று பலன் கருமத்தினால் ஏற்படும். பரலோகத்தில் கருமபலம் சித்திக்கவேண்டின், இகத்தில் பலனற்ற செய்கையே நன்று எனக் கூறப்படுகின்றது.

9, 10-பாவால். கருமத்தை நடத்துபவனின் செய்கையை விவரிக்க ஐந்துமுறை கூறப்படுகிறது. அதாவது தேகம், தேகி, கரணம், கரணச்செய்கை, ஈசுவரன் ஆக ஐந்து என்று கூறப்படு கிறது. எப்படியெனில் தேகமும், தேகத்திலமைந்துள, தேகி (ஆத்மா) கரணம் (இந்திரியங்கள்) கரணச்செய்கை இவைகளை யேவும் ஈசுவரன் இந்த ஐந்தும் கூடித்தான் கருமம் செய்யமுடியும் என்று கூறி,

11-வது பாவால். வாக்குமனது சரீரத்தால் செய்யப்படும் கருமத்திலும் ஆத்மா ஒட்டவில்லாமல் இருக்க கூறப்படுகிறது.

12-வது பாவில். உலக வாழ்வையெல்லாம் துறந்தபோதிலும் செய்கையில் துறந்தானுகான் என்று கூறி,

13-வது பாவால். கருமத்தை நடத்துபவனின் ஞானம் குறி யுள்ள வஸது. அதையடைய வேண்டுமென்ற எண்ணம் இவைகளை மனதில்கொண்டு மற்ற இந்திரியங்களுதவியால் அதினை அடைதல் கூறப்படுகிறது.

14-வது பாவால். ஞானம் கருமம் கர்த்தா ஞானத்தோடு கூடிய கருமம் கர்த்தாவான அவிஞசியான பிர்ம்மத்தைச் சேருதல் கூறப்படுகிறது.

15-வது பா. ஜீவன், ஏகன் அவன்தோற்றம் பலபலவாயிருப்பினும் ஏகனே என்று முடிவுகொள்ளாமல் பல ஸ்வரூபி என்று எண்ணுபவன் இராஜஸன்.

16-வது பா. ஜீவன் பரமாத்மா ஐக்யம் பெறமாட்டான் என நினைப்பது தாமஸகுணம்.

17-வது பா. தன் தன் நித்ய கர்மத்தையும் பக்தியோடு பலாபேக்ஷையின்றி செய்தல் சத்விக குணமாகும்.

18-வது பா. தான் என்ற அகந்தையோடு தன்னையொப்ப ஒருவருமில்லை யென்ற எண்ணத்தோடு கர்மம் செய்தல் இராஜஸம்.

19-வது பா. பின்வருவன யோஜியாமல் தேடிய தனம் (சுகிர்தம்) தொலைத்து அகங்கார புத்தியோடு கூடிய செய்கை தாமஸம்.

20-வது பா. கர்மம் இயக்குவதில் என்ன கஷ்டம் அல்லது சுகம்வரினும் மதியானுய் கர்மத்தைத்தொடர்ந்து செய்பவனே சத்விகன்.

21-வது பா. தன் தனத்தில் ஜாஸ்தியபிமானமும் பிறர் தனத்தை அபகரிப்பதில் அவா உடையானும் ஹிம்ஸையை கைகொள்பவன் ராஜஸன்.

22-வது பா. வணக்கம், விவேகம், பிணக்குள மனம், சோம்பல் சுணக்கம், தன் சக்தியறியாமை, விசனம் இவைகளெல்லாம் தாமஸ குணம்.

23-வது பா. சாத்விகன் தைரியத்தோடு தருமாதருமம் அறிந்து பந்தம் பயாபயம் அறிந்து கர்ம பிரவர்த்தி செய்வான்.

24-வது பா. சந்தேகத்தோடு செய்தல் இராஜஸம் விபரீத புத்தியோடு செய்தல் தாமஸம்.

25-வது பா. பூர்ண தைரியம் சாத்விகம். பலாபேக்ஷையோடு கூடியது இராஜஸம்.

26-வது பா. துஷ்டபுத்தி தருவது தாமஸகுணம்.

27-வது பா. அப்பியாசத்தால் அகத்தில் சந்தோஷங்கொண்டு துக்கத்தை தள்ளி ஆரம்ப கஷ்டத்தை பெரிதென மதியாமல் சுகமே முடிவெய்தும் என்றெண்ணத்தின் பேரில் சாத்விகன் செய்கை செய்வான்.

28-வது பா. கடைசி கஷ்டத்தை பெரிதென மதியானுய் ஆரம்ப சுகத்தையே கருதுபவன் ராஜஸன். அற்பசுகம் வேண்டி செய்பவன் தாமஸன்.

29-வது பா. எல்லா ஜகத்திலும் முக்குணங்களுண்டு இவையே ஜாதிப்பிரிவைச் செய்யும். இம்முக்குணங்களும் தனித் தனி யமைந்திருத்தல் இயல்பு.

30-வது பா. பிராமண தர்மம் இந்திரியங்களடக்கினவனுப் மனம்வாக்கு கர்மம் இவைகளுடைய தவங்கொண்டு மனசுத்தி யோடு பொறுமை, நேர்மை, சாஸ்திரஞானம், அனுபவஞானம் ஆதிவேதங் கற்பது இவைகளெல்லாம் பிராமண தர்மம்.

31-வது பா. க்ஷத்திரிய தர்மம், யுத்தத்தில் பராக்ரமம், வீரம் கீர்த்தி விரும்புவதோடு, கொடுக்கும் தன்மையும், செங் கோலும் புத்தி சாதுர்யம் எடுத்த காரியம் நிறைவேற்றல் இவைகள் க்ஷத்திரிய குணம்.

32-வது பா. வைசிய தர்மம். பால்மாடு ரக்ஷித்து பயிர்செய்தல் வியாபாரம் செய்தல், மேல்சொன்ன மூவருக்கும் துணையாய்நிற்றல் சூத்ர கருமம்.

33-வது பா. அவரவர்கள் செய்யவேண்டிய கர்மத்தை செய்துகொண்டு ஞானம் அடைதல் விசேஷமென கூறப்படு கின்றது.

34-வது பா. எல்லா பிறப்பிற்கும் எல்லாச் செய்கைக்கும் ஈசுவரனே ஏவுகிறவர் என்ற எண்ணமுடையார்கள் அவரவர்கள்

கர்மத்தை செய்து முக்தியடைவார்கள். இதை யறிந்தவர்கள் கர்மம் செய்கையில் "மாசு" குறைவு இருந்தபோதிலும் அதினால் பாபம் ஏற்படுவதில்லை.

36-வது பா. எல்லா வஸ்துவையும் தள்ளி ஆத்மாவை ஜயித்து கர்மம் செய்துகொண்டும் செய்யும் கர்மத்தில் பலனை விரும்பாதான் த்யாகியும் சன்யாசியுமவனே.

37-38 பாக்கள். பிர்ம்ம ஞானியின் நிலை கூறல்.

39-வது பா. பிர்ம்ம சாக்ஷாத்காரம் பெற்றோர் எல்லா ஜீவர்களை சமமாகப்பார்த்துக்கொண்டு ஆனந்தமாயிருத்தலோடு சாயுஜ்ய பதவியும் அடைவர்.

40-வது பா. யாதொருவிதமான விகல்ப எண்ணங்களைக் கொள்ளாமல் என்னிடம் கருமபலனை ஏற்பவிப்பாய். என்னை சிந்திப்போனை எவ்விதமும் ரக்ஷிப்பேனன். என்னை நம்பாதார் நன்மை பெறப்போவதில்லை.

41-வது பா. நான் சொல்லுகிறபடி யுத்தஞ்செய்வாய் இலையேல் உன் கருமசேஷமே அதைச் செய்யத்தூண்டும்.

42-வது பா. எங்கும் பரந்துளான் உன்னிடமும் உளான் யுத்தம்செய்து மோக்ஷம்டைவதே க்ஷத்ரிய உன் தர்மம்.

43-முதல் 47-வரை கீதா ரகசியமறிய யோக்கியதை சொல்லப் படுகிறது.

48-முதல் 54-பாக்கள். வாசிப்பதிலேயே எளிதில் துலங்கும்.

18-வது அத்தியாயம் விரித்துரை முற்றிற்று.

---

## ஞானயோகம் தொகுத்துரை.

ஞானமென்றால் அறிவு எனப்படும். அறிவு என்றால் எதை அறிதல்? ஆத்மதத்துவம்பற்றியறிதல் என்றே கூறவேண்டும்' இங்கு மனிதன் சரீரம் பாலப்பருவம் வாலிபப்பருவம் கழிந்து மூப்பு ஏற்பட்டு மரணமடைகின்றது. இவை காணப்படுகிறது. மரணத்திற்குப் பின் கதிஎன்ன என்பதுபற்றி விசாரிப்பதே அறிய வேண்டிய அறிவு எனப்படுகின்றது அதேபோல் மனிதன் தாயார் வயற்றிலிருந்து ஜனிக்கிறான். ஜனனத்து முன்னுள் கதியென்ன? என்றறிவதே அறிதலாகும். ஆகவே மனிதனின் ஜனனத்திற்கு முன்னும், மரணத்திற்கு பின்னும், மனிதன் அடைந்திருந்த நிலை என்ன? என்ற கேள்விக்கு விடைவேண்டும். இக்கேள்விக்கு விடை எளிதில் வரக்கூடியதில்லை. மரணமென்றால் சரீரம் வீழ்தல் ஜனனம் என்றால் சரீரம் வருதல். ஆகவே சரீரத்தைபற்றியது: ஜனன மரணம் சரீரம் வருவதும் போவதுதான் நாம் பார்க்கிறோமே அதில் என்ன விசாரிக்கயிருக்கின்றது? ஒன்றுமில்லை எனலாம். ஆனால் சரீரமென்பதுமட்டும் போதல் வருதல் என்றதாயிருந்தால் மட்டும் ஒருவரும் கவனிக்காமலிருந்துவிடலாம். இங்கு சரீரத்திற்கு மேல் ஒன்று இருக்கக்காண்கிறோம் அதுதான் சரீரத்திலமைந்துள ஜீவன். இஜ்ஜீவ உணர்ச்சி சரீரத்திலிருந்தால்தான் சரீரம் பிரகாசிக்கிறது. ஜீவன்போகவே சரீரம் நசித்துவிடுகிறது ஆகவே ஜீவன் தான் சரீரத்திலும் மேலானதை உணருகிறோம்.

இஜ்ஜீவன் என்பதுயாது. எங்கிருக்கிறது எப்படி வந்தது இவைகளெல்லாம் முக்கியமான கேள்வியெனக்கொண்டு விடை தரவேண்டும்.

சரீரம் பிறக்கும்போது இஜ்ஜீவனிருக்கக்காண்கிறோம். ஆகவே இஜ்ஜீவனுனது சரீரத்தில் புகத்தப்பட்டிருக்கும் ஓர் தனிசக்தியா அல்லது ஜீவன் சரீரத்தின் ஓர் பிரிவில்லாத அணுதானு என்ற கேள்விக்கு விடைவேண்டும். இதுவரை உலகத்தில் ஏற்பட்டிருக்கும் சமயங்களெல்லாம் சரீரம் வேறு ஆத்மாவேறு என்றே சித்தாந்தம் செய்திருக்கிறார்கள். மேலும் சரீரத்தினின்றும் ஆத்மா வேறு. அல்லது ஆத்மாவினின்றும் சரீரம் வேறு என்ற கேள்வி

எழுகின்றது. சரீரத்தைவிட்டு ஆத்மா பிரிந்துவிட்டால் சரீர நிலை நல்லதல்லாமல் போவதுடன் உதவாக்கரையாகின்றது. ஆகவே சரீரப் பிரகாசம் ஆத்மாயிருக்கும்வரைதான் ஆனால் ஆத்மாவோ சரீரம் போனபிறகும் இருப்பதாக சித்தாந்தம் செய்கிறபடி. ஆத்மா ரூபமற்றவனாய் இருக்கிறதாகவேகொள்ளுகிறோம். ஆதலால் ஆத்மாபற்றின சரீரம்தான் என்ற முடிவு எய்தவேண்டும். ஆகவே ஒவ்வொரு மனிதனும் ஆத்மா விசாரம் செய்தால்தான், தான் யார்? தான் என்பது சரீரமா ஆத்மாவா என்ற கேள்விகளெல்லாம் எழுப்பிக்கொண்டு விசாரம்செய்ய இயலும் இந்த விசாரக்கிரமத்தில்·

13-வது அத்யாயம் 2-வது பா.

அர்ச்சுனனுக்கங்கு அமலனும் உரைப்பான்
சரீரமே க்ஷேத்ரம் சரீரத்திலமைந்துளான்
நற்க்ஷேத்ரக்ஞன் நாடிடும் க்ஷேத்ரமதில்
நிற்கும் க்ஷேத்ரக்ஞன் நானே என்றறிவை.

சரீரமே க்ஷேத்ரமென்றும் சரீரத்திலமைந்திருக்கும் ஆத்மாவே க்ஷேத்ரக்ஞனென்றும். அக்ஷேத்ரக்ஞனே தானென்றும் பகவான் கூறுகின்றார்.

ஆதலால் ஆத்மாவை பகவானின் சின்னமெனக்கொள்ளல் அதாவது நாசமுறா சின்னமெனக்கொள்ளல் வேண்டும்.

ஆகவே கடவுள் சின்னம் நம்சரீரத்திலமைந்திருக்கிறது என்ற முடிவெய்தி அச்சின்னத்தால் நாம் அடையவேண்டியதை பகுத்தறிந்து முடிவு செய்யவேண்டும்.

14-வது அத்யாயம் 3-வது பா.

கர்ப்பமாம் பிருகிருதியும் குணம் மூன்றுடைத்து
சொர்ப்பமென்றாத்மாவை சத்வாதிதமத்தால் கட்டும்
நிற்கும் சத்துவமே ஞானமதைத் தந்து
தர்க்கமின்றி ஆத்மாவின் தனை தனை நீக்கிடுமே.

கர்ப்பத்தில் பிறந்த சரீரத்திற்கு, குணம் மூன்றயிருக்கிறதென்றும் அக்குண மூன்றும் அதாவது சத்வரஜோ தமமென்ற குணத்தால் ஆத்மாவை பந்திக்குமென்றும் அதில் சத்வகுணமே

ஞானமதைத்தந்து ஆத்மத்தளையை நீக்கிடும் என்று கூறப்படு கிறது. ஆகவே ஆத்மத்தளை நீக்கப்படவேண்டுமென்றால் சத்துவ குணத்தையே அவலம்பிக்கவேண்டும்.

14-வது அத்யாயம் 7-வது பா.

சத்துவ குணமிங்கு சர்வனை யறுகவேண்டி
அத்துவைத நிலைகாட்டி ஆசக்தியுண்டாக்கி
உத்தம யிந்திரியங்கட்கு உணர்ச்சி சுகந்தந்து
எத்தருணமும் சிதையாத இஞ் ஞானமதையளிக்கும்.

சத்துவ குணப்படி (சத்துவ குணத்தைப்பற்றி கீதையில் படிக்கவும்) நடக்கும் ஒருவன் பரமாத்வை யறுகவேண்டி முயற்சி தனை செய்துகொண்டு ஆத்மா திருப்தியோடு கூடி ஞானவானு யிருப்பான் என்று கூறப்படுகின்றது.

ஆகவே மனிதன் சத்துவ குணத்தை யவலம்பிப்பவனுயிருந்து கொண்டுபோதல் நன்று எனக் கூறுவதோடு முக்கியமாக மானிட ருய் பிறந்த ஒவ்வொருவரும் மோக்ஷயிச்சை யுடையவராயிருந்து கொண்டு இகத்தில் ஆத்ம திருப்தியோடு பரத்தில் ஆத்மா ஐக்யத்தை யடைவதற்கு இக்கீதா கிரந்தம் கர்மயோகத்தை பிர தானமாக முதல் 6 அத்தியாயங்களில் எடுத்துசொல்லுகிறது. மேலும் கர்மயோகத்தை

விரிவாக கூறவிடைத்து,

தற்கால உலகத்தில் பிராமண கர்மம் சூத்ர கர்மத்திலும் உயர்ந்தது என்றும், க்ஷத்திரிய கர்மம் பிராமண கர்மத்திலும் உயர்ந்தது என்றும், எல்லாவற்றிலும் வைசிய கர்மமே உயர்ந்தது என்றும் பேசப்பட்டு வருகிறது,

"ஈசுவரனே ஏவுமென யறிந்தார்கள்
ஆசுவாசுத்துடனேயே அவரவர் கர்மம் செய்வார்"

என்று பகவான் கூறுவதை கவனிக்கவேண்டும். எல்லா வற்றிற்கும் ஆதி கர்த்தாவான பகவான் ஏவுகின்றார். அதின்படி நாம் செய்கின்றோம் என்ற எண்ணத்தோடிருக்கவேண்டும். உலகத்தை நடத்திச்செல்லும் பகவான் தோட்டிக்கு ஓர் ஆக்ஞை

கொடுக்கிறார். தொண்டமானுக்கு ஓர் ஆக்ஞை கொடுக்கிறார். ஆக்ஞைப்படி நாம் நடக்கவேண்டுமேதவிர ஆக்ஞைமறுத்தல் பக்தியாகாது.

தோட்டி தொண்டமானாகவோ அல்லது தொண்டமான் தோட்டியாகவோ மாறுதல் முடியாது. மாறுவதும் தர்மம் ஆகாது. பகவானே எவுகின்றார் என்றமுடிவை அடைந்துவிடில். நம்மில் சிலரை பிராமண பிறப்பில் புகுத்தியவரும் அவரே ஆதலால் பிராமண பிறப்பில் உண்டானவர்கள் பிராமண கர்மத்தையே செய்துகொண்டுபோகவேண்டும். அதை விட்டு விட்டு பணம் ஜாஸ்தியாக அடையலாமென்ற எண்ணத்துடன் வைசியனாக மாறினால் பகவத் ஆக்ஞைமீறினதாகவேயாகும். இதேபோல் எல்லா வர்ணத்தவருக்கும் கொள்ளல்வேண்டும். பரசுராமன் பிராமணன் தன் குலவிருத்தியைவிட்டு க்ஷத்ரியனாகமாறினதால் ஸ்ரீ ராமனால் தண்டிக்கப்பட்டான். அதேபோல் சூத்ரன் ஒருவன், தன் குல விருத்தியைவிட்டதினால் அவனும் தண்டிக்கப்படுகிறான். துரோணர் பிராமணர். க்ஷத்திரியவிருத்தி. பகவத் தண்டனை ஏற்படுகிறது. இதைபோல் இக்காலத்திலும் பல குறிப்பிடப்பொருந்தும் ஆயினும் முக்கியமாக செல்வத்தினால் கடவுள் அனுக்ராஹம் உள்ளவர்கள் ஜாதியாசாரப்படி நடந்துகொண்டு சீக்கிரம் மோக்ஷமடையலா மெனக் கூறுதலையே இங்கு குறிப்பிடலாம்.

நம் முன்னோர்கள் கர்மயோகத்தை பிரதானப்படுத்தி அதற்கும் தெய்வீகத்தன்மை தந்திருக்கிறார்கள். ஒவ்வொருவரையும் கர்மம் செய்யத்தூண்டும் சாக்ஷாத் எம்பெருமான் கிருஷ்ணமூர்த்தி வாக்கையனுசரித்து நடந்தால் திட்டமாக நாமும் நமது ஜனசமூகமும் இகத்திலும் பரத்திலும் நற்கதியையடையவோமென்பதில் சம்சயம் கொள்ளவேண்டாம். கர்மயோகத்திற்கு பக்தி பிரதானம் வேண்டும் அதற்காக பக்தியோகம் 6-அத்தியாங்களும் பக்தியும் ஞானத்தோடியிருத்தல்வேண்டும் அதற்கும் ஞானயோகம் 6-அத்தியாயங்களும்கொண்ட 18-அத்தியாயங்களுள்ள பகவத் கீதை முற்றிற்று.

---

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.



REGD. No. 3175. ESTD. 1930.

## CHANDRA APPALAM DEPOT.

## சந்திரா அப்பளாம் டிப்போ.

உங்களுக்கு மணமும், குணமும், ருஜியும், சுத்தமும் வைதிகமும் விலை சகாயமுள்ள அப்பளாம் வேண்டுமென்றால் மேற்கண்ட விலாசத்திற்கெழுதுங்கள். ஏனெனில், நாங்கள்:

இவ்வியாபாரத்தில் 10-வருட பழக்கத்தோடு எங்கள் எல்லா வாடிக்கைக்காரர்களையும் திருப்தி செய்துவருகிறோம். விலையில் போட்டியிட்டு விற்கின்றோம். நயத்தில் நல்ல சாமான்களை தயார் செய்கின்றோம். பிராமணர்களே அப்பளாம் தயார்செய்வதால், வைதிகத்திற்கு ஏற்றதாயிருக்கின்றது. உங்கள் ஆர்டரை ஓர் தடவை தந்து எங்கள் வாடிக்கைக்காரர்கள் ஆகுங்கள்.

**R. S. & K. S. IYERS,**
Proprietors.

---

### இந்திர விலாஸ் காபி ஹோட்டல்.

கீழரதவீதி, அம்பாசமுத்திரம்.

1941-ம்வருஷ ஜூன்மீ 26உ முதல் மேற்கண்ட ஹோட்டலில் தற்கால நாகரிகத்திற்கு தகுந்தபடி சுத்தமாயும், ஆடம்பரத்துடனும் சேர்த்தியான காபி, சாப்பாடு முதலியவை கிடைக்கும்.

**A.** நரஸிங்க ராவ்,
புரோப்ரைட்டர்.

---

### கிருஷ்ணன் நாயர் & Co., போட்டோ கிரூபர்ஸ்,

மெயின்ரோடு, அம்பாசமுத்திரம்.

தற்கால நாகரிகத்திற்கு தகுந்தபடி போட்டோ, என்லார்ஜ் மெண்ட், வர்ணமிட்ட படங்கள், ஆயில்பெயிண்டு, ஸினிமா ஸ்லைட்கள் நயமாக செய்துகொடுக்கப்படும்.

*KRISHNA NAIR & Co.,*



Regd No. M. 4337. [15-10-41.] Vol. II. Bk. No. 1.

# பகவத் கீதை.

(வெளியீடுகள்)



ஆக்கியோன்,

மஹரிஷி கிருஷ்ணஜி,
பாரத்வாஜ குலோத்பவன்,
கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941.

சிவானந்தலஹரி (மகிமைத்துவம்) லக்ஷ்மீநாராயணன் (ஆசைத் துன்பம்) அடங்கியிருக்கிறது.

மாதசஞ்சிகை வருடசந்தா ரூ. 2—0—0

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

உ

சிவமயம்.

# சிவானந்தலஹரி

## பாக்கள், பொழிப்புரை.



1 சந்திரகலையோடு கலையனைத்தும் சிரந்தனில் சூடியோய்
மந்திரங்கொண்டு மாநிலத்தில் மாதவம் செய்வார்தமக்கும்
வந்திக்கும் பக்தர் தம்மின், வரமதையறிந்து மீவோய்
சிந்திக்கும் தன்மையுளாய் சிரமமிலறிந்து மருள்வாய்.

சந்திரகலையையும் உலகத்திலுள்ள இன்னும் 64-கலைகளையும் தன் சிரஸில்கொண்டவர். மந்திர உச்சாடனத்தால் பூவுலகில் பெரிய தவமியற்றுவோருக்கும் தம்மை நமஸ்கரிக்கும் பக்தர்களுக்கும் வேண்டும் வரங்களை தாமேயறிந்து கொடுப்பவரே பக்தர்களின் க்ஷேமத்தை மனதில் எப்போதும்கொண்டு அவர்களுக்கு வேண்டு பவற்றை சிரமமன்னியில் தெரிந்துகொண்டு அருள்பவன் தாமே யாவீர். சந்திரகலை, அழகும் குளர்ச்சியும் தருகிறது அதினால் மனதிற்கு சந்துஷ்டி உண்டாகின்றது அதேபோல் உலகத்தில் ஏற்பட்டுள்ள ஸங்கித ஸாஹித்யாதி 64-கலைகளை படிப்பதினால் ஏற்படக்கூடியது மனோ சந்துஷ்டி ஆகவே மனோ சந்துஷ்டிக்கு காரணமான எல்லாவற்றையும் பகவான் அங்கீகரிப்பதோடு தானே சிரஸில் வகிக்கிறார். மேலும் பெரியதவம் செய்வோர்க்கும் கேவலம் நமஸ்கரிப்பவர்களுக்கும் வேண்டும் வரங்களை அறிந்துகொடுப்பாய் பெரியதவம் செய்பவனுக்கு பெரிதாகவோ அல்லது சாதாரணநமஸ் காரம் செய்பவர்களுக்கு சிறியதாகவோ கொடுக்கக்கூடியவனல்ல நீ அவரவர்களுக்கு வேண்டுவதை கொடுக்கக்கூடியவன். ஆதலால் இயன்றளவு தவம் செய்தாலே சந்தோஷிக்கக்கூடியவன்.

"சிந்திக்கும் தன்மையுள்ளாய்" என்றால் பக்தர்களின் வேண்டுதலை நின்மனதில்கொண்டு அதினால் செய்யவேண்டியதை செய்யும் வல்லமையுடையாய்.

"சிரமமிலறிந்து மருள்வாய்" பக்தர்களின் கஷ்டத்தை அறிந்து கொள்வதில் நினக்குயாதொரு சிரமமுமில்லை. கஷ்டங்கள் நீங்குமாறு அருளும்புரிவாய்.

"மந்திரங்கொண்டு மாநிலத்தில் மாதவம் செய்வார்தமக்கும்
வந்திக்கும் பக்தர் தமக்கும் வரமதையளிந்தாயீவோய்."

மந்திர சாஸ்திரங்களை கற்று பெரியதவத்தை செய்ய பல கஷ்டங்கள் உண்டு. அப்படி அதிக கஷ்டத்தினால் தன்னை வருத்தி கொண்டவர்களுக்கும் நீ கொடுப்பது அவர்கள் வேண்டுவதுதான்.

அதேபோல் மனதில் உன்னை த்யானித்து வந்திப்பவர்களுக்கும் நீ கொடுப்பது அவர்கள் வேண்டுவதுதான். ஆதலால் மனதில் உன்னை த்யானித்தாலே போதுமென இங்கு குறிப்பிடல் பொருந்தும்.

2 சிரமமிலறிந்து மருள்வாய் சிவநாமப் பெருக்கதாலே
நரர் செய் பாவங்களை நீ நொடிதனில் தொலைத்துமேதான்
பிறப்பிறப்பென்றயிந்த பிறிவிலா சக்கிரமதினை
பரமனின் நாமமதால் போக்கிடுதல் எளிதேயன்றோ.

சிவநாமப் பெருக்கதாலே, சிவசிவாயென்று நாமம்செய்வதாலே
நரர் செய்பாவங்களை நீ, மனிதர்கள் செய்பாவங்களை நீ
நொடிதனில் தொலைத்துமேதான் க்ஷணநேரத்தில் போக்குவதை
சிரமமிலறிந்து மருள்வாய் கஷ்டமன்னியில் தெரிந்து அருள்வாய்.
பிறப்பிறப்பென்றயிந்த பிறப்பு இறப்பு என்ற இந்த
பிறிவிலா சக்கிரமதினை பிறியாத சக்ரத்தை
பரமனின் நாமமதால், பகவானின் நாமமதாலே
போக்கிடுதல் எளிதேயன்றோ போக்குவது எளிதாகவேகூடும்

1-வது பாவிலே. பெரியதவம், வந்தனம், இவைதரும் லாபம் கூறப்பட்டது. இப்பாவிலே சிவநாமமே போதும் பாவந்தீர்வதற்கும் பிறப்பிறப்பு தீர்ப்பதற்கும் என்று கூறப்படுகிறது. "நரர் செய்பாவங்களை நீ" என்று குறிப்பிடுவதிலிருந்து இங்கு மனிதன் தான் அறிவுபடைத்தவன் 'அறிவினால பாபங்களை விலக்கவேண்டி

யவனே பாபங்களே செய்திருந்தாலும்" நாமப்பெருக்கே போதும் மனித பாபங்கள் நீங்குவதற்கு, அப்படியிருக்க மனிதரல்லாத எத்தனேயோ ஜன்மங்கள்பற்றி யோஜிக்கவேவேண்டாம் தெரிந்து செய்த பாபங்கூட சிவநாமத்தால் நீங்கும் என்பது குறிப்பு.

ஸம்ஸார சக்கரம் ஜனனமரணம் இவ்விரண்டிலிருந்தும் பிரிவில்லாதது இதை தொலேப்பதற்கு வழி, நாமப்பெருக்கே.

3 போக்கிடுதல் எளிதேயன்ருே பாபமனேத்தியுமிங்கு
நோக்குடை வேத மூன்ரும் நோக்க கண்கள் மூன்றும்
திக்கியந்தபுரமும் மூன்ரும் ஜீவர்களுக்காதாரமானன்
வாக்கினல் நாமம் நவின்ருல் நன்மையேயளிக்குமன்ருே.

வேதம் மூன்றும் (ருக் எஜுர் ஸாம) நோக்குடை, உன்னேயே பார்க்கும், கண்கள் மூன்றும் அகக்கண் ஒன்றும் புறக்கண்கள் இரண்டும் உன்னேயே தேடும் நோக்குடையது, மேலும் நீயும் முக்கண்களுடையாய் முப்புரத்தையும் எரித்தாய் நீ, அதுவுமில்லாமல் ஸ்தூல, சூட்சும, காரண, சரீரத்தையும் நீயே எரிக்கின்ருய். எல்லா ஜீவர்களுக்கும் உத்பவஸ்தானம் நீயே அப்படிப்பட்ட உனது நாமம் சொன்னல் நன்மையே தருவதோடு பாபங்கள் எல்லாவற்றையும் போக்கிடுதலும் எளிதாகவே முடியும்.

4 நன்மையேயளிக்குமன்ருே நம்சிவனடியார் தமக்கு
வன்மையிலா தேவர்தமை வணங்குவதில் பயனே என்னே
உன் திருவடி காண்டலிங்கு உம்பர்க்கும் கடினமானல்
சிந்தையால் யாஜித்தலே நீ தெரிதலுமரிதாமோதான்

நன்மையையே தரும் சிவனடியார்களுக்கு யாதொரு பழுமில்லாத மற்ற வழிகளேயடைந்து பயனேயில்லே. மேலும் தேவர்கள் உன்பாதார விந்தத்தை பார்ப்பதற்கு கஷ்டமெடுத்துக்கொள்கின்ருர்களென்ருல் உன்னுடைய மனதிற்கு யாஜித்தல் அதாவது இறத்தலென்பதை தெரிந்துகொள்வதற்கு கஷ்டமாயிருக்குது. ஏனென்ருல் பிச்சை கேட்பவனுக்குத்தான் பிச்சை கிடையாத வருத்தம் தெரியும் நீயோ பிச்சை கேட்பவன் உனக்கு அன்பர் கஷ்டம் தெரியும். ஆதலால் உன்னிடம் பிச்சை கேட்டால் பிச்சைக்காரன் கேட்டதையடைந்துவிடுகிருன்.

5 தெரிதலு அரிதாமோதான் தேவநின் பாதமிங்கு
தெரிதல் சிறிதுமில்லான் சுருதி சாஸ்திர சகுனம்
பெரிதாம் புராணத்தோடு புண்ணிய கவியுமறியேன்
உரிதாய் உனை துதிப்பேன் உண்மையிலெனக்கருள்வாய்.

என்போன்ற பிச்சைக்காரர்களுக்கு உன் பாதமறிவது கஷ்டமில்லை ஏனென்றால் நீயுமெங்கள் கூட்டத்தில் ஒருவன். மேலும் சுருதி, சாஸ்திரம், சகுனசாஸ்திரம், புராணம், கவியியற்றுதல் முதலிய ஒன்றும் தெரியாத நான் உரிமைக்கொண்டு உன்னை துதிப்பேன் ஆகையால் உண்மையிலெனக்கருள் தருவாய்.

6 உண்மையிலெனக்கருள்வாய் உன்புகழ் புகழ்வேனிங்கு
தொண்டையை புண்ணேசெய்து தொடுத்திடும் வாதமதினால்
அண்டிவரும் நமபாசத்தை அகற்றுதல் கூடுமோதான்
கண்டிடும் பொருள்கள் கொண்டு காலனை வெல்லலாமோ

உண்மையாகவே எனக்கருள் தரும் கடவுளே உன்புகழ் தவிர வேறு ஒன்றும் செய்யேன். வீணாக தொண்டையை கஷ்டப்படுத்திக்கொண்டு செய்திடும் வாதமதினால் நமபாசத்தை விலக்க முடியாது. மேலும் கண்ணால்காணும் பொருள்களால் நமபாசம் விலக்கலரிது.

7 காலனை வெல்லலாமோ காலகாலன் கருணையின்றி
மூலமாம் உன்நாமமதையே முகநாவால் உச்சரிப்பேன்
சீலமாம் அர்ச்சனையதை சிறக்கவே கையால்செய்வேன்
ஞாலத்தில் எந்தன் கண்ணும் நின்னையே நண்ணுமன்றே.

காலனுக்கு காலனான உன்னுடைய கருணையில்லாமல் காலனை வெல்வது முடியாது. என்னுடைய நாவு சதா உன்நாமமதையே சொல்லிக்கொண்டிருக்கும் எனது கைகள் உன்னையே பூஜிக்கும். மேலும் பூமியில் எந்தனிருகண்களும் நினையே நோக்கி நிற்கும்.

8 நின்னையே நண்ணுமன்றே நீணிலயாந்தமெல்லாம்
மன்னுகாச்சி கல்லும் மாரத்னமாமோ
சின்ன சிப்பியிங்கு சிறக்கும் வெள்ளியாமோ
தன்னதல்லா தெய்வம் தடுமாறி திரிவதென்னே.

நீர்சூழ்ந்த உலகமாந்தரெல்லாம் உன்னையே நாடுவதன்றி காச்சிக்கல்லை இரத்னம்போலும் காக்கசிப்பியை வெள்ளியென்றும் மாற்றி நினைப்பதுபோல் தன்னதல்லாத தெய்வம் நோக்கி தடுமாறி திரிவது என்னே திரிவது எதற்காக தன்னதல்லாத தெய்வமென்றால் தான் சித்திரிக்கும் தன்மையில்லாததை வணங்குவதில் பயனில்லை என்றே தொனிக்கும்.

பூமியில் பிறந்துள மாந்தரெல்லாம், ஆறறிவுபடைத்த ஜீவர்களெல்லாம் உன்னையேதான் அண்டுவார்கள். ஏனென்றால், கேட்பதும் உடனே கொடுப்பது என்பதை உன்னிடந்தான் கண்டோம். பக்திக்குப்பலன் உண்டா? என்றகேள்விக்கு இடமில்லாமல் செய்துவிட்டாய். ஏனென்றால் உன்னை பஜித்தவர்கள் அவர்கள் கேட்பது, உலகநாச ஹேதுவான, வரமாயிருப்பினும் கொடுத்துவிடுவது உன் வழமை. ஆதலால் தன்முயற்சிக்கு பலனுண்டு என்றதை அறிந்துகொண்டே பக்தர்கள் எல்லோரும் உன்னையே பஜிக்கின்றார்கள். இப்படி உண்மைவஸ்துவாகவே நீயிருக்க காச்சிகல்லை. பெரிய ரத்னமாகவும் சிப்பியில்காணும் வெள்ளிநிறத்தை உண்மையாகவும் மதிக்க முடியுமா. மேலும் தெய்வமென்றால் தன்னது, தான் வேறு தெய்வம் வேறு என்றதல்லாமல் அமையவேண்டும். அதற்குரியவன் நீயேதான் ஆனாய். ஆதலால் உன்னையே தொழுகின்றேன் என்னை காப்பாற்று. எனக்கருள், மேலும் மகத்தான தவமுடையோர்களுக்கு நீ தவக்குறியாயிருக்கின்றாய். மகாதபஸ் செய்யவேண்டி எவ்வளவோ உலகசுகங்களை வெறுத்து, தான் அடையவேண்டியதை இத்தபோமுயற்சியினாலடையலாமென்ற எண்ணத்தின் பேரில் இப்பெருமுயற்சியை ஆரம்பிக்குமொருவனுக்கு முயற்சியின் பலன் திட்டமாகயடையலாம் என்றவிஷயத்தில் பூர்ண நம்பிக்கையிருந்தாலல்லவோ அம்முயற்சியை ஆரம்பிவிப்பான். அதை தவிர்த்து' நிஷ்காம கர்மம்செய். கருமபலத்தை எதிர்பாராதே என்று சொல்லப்படும் குறிமானத்திற்கு யார்தான் செவிசாய்ப்பார்கள். உண்மையை கூறுமிடத்து மனிதர்களுக்கு இகத்திலும் சுகம்வேண்டும் பரத்திலும் சுகம்வேண்டும். இகசுகத்தை இழந்து பரசுகத்தை கவனியென்றால் எதிர்பார்க்கப்படும் சுகத்தை காட்டிலும் கையில் கிடைக்கும் சுகம்நல்லதே என்பார்கள் ஆதலால் முயற்சிசெய்தால் பலன் நிச்சயம்

அதுவும் கோரும் பலம் நிச்சயம் என்பதை உணர்த்திய கடவுள் நீயல்லவா. ஆதலால் உன்னை.

"நின்னையே நண்ணுமன்றோ நீணிலமாந்தரெல்லாம்:, என்று கூறப்படுகின்றது.

9 தடுமாறி திரிவதென்னே தருமலர் தேடித்தேடி
மடுமாமலைகளிலே மலர்கள் கொய்யவேதான்
அடுத்த அகமனதாம் அழகு தாமரை கொண்டு
உடுத்த உலகிர்க்கீசன் உமாபதி சேவை செய்வை.

தெய்வ வணக்கத்திற்காக வேண்டி மடுக்களிலும் மலைகளிலும் மரங்களிலும் புஷ்பத்தை தேடியலைந்து தடுமாறுத்திரியவேண்டாம் உன்னிடமேயிருக்கப்பட்ட மனது என்ற தாமரை புஷ்பத்தாலேயே எங்கும் சூழ்ந்து இருக்கும் உமாபதியை வணங்கினாலே போதும் அதுதான் சிரேஷ்டம் அப்புஷ்பத்திலும் உயர்ந்ததொரு புஷ்பமில்லை.

தருமலர் தேடித்தேடி மரங்களில் புஷ்பங்களைத்தேடியும் மடுக்களிலுள்ள தாமரை புஷ்பத்தையும் மலைகளிலுள்ள தத்தி முதலான புஷ்பங்களையும் பகவான் அர்ச்சனைக்காக தேடிகொய்வதற்கு வீண் கஷ்டங்களை எடுத்துக்கொள்ளுகின்றாய் எதற்காக? இப்படிப்பட்ட வாசம்பொருந்திய அழகுபொருந்திய புஷ்பங்களால் பகவானின் பிரியத்தை பெற்றுவிடலாமென நினைக்கின்றாய். வாஸ்தவம்தான். புஷ்பத்தை கண்டதும் குழந்தைகள் முதல் பெரியோர்களும் சந்தோஷமடைவார்கள் அதேபோல் குழந்தையாயும் பெரியோராயுமிருக்கும் நான் சந்தோஷமடைவேன். ஆனால் குழந்தைகள் பெரியோர்கள் சந்தோஷத்துடன் எப்போதுமிருப்பதினால்தான் சந்தோஷமடைகின்றார்கள். அதற்கு காரணம் அவர்கள் மனது அதேபோல் நீயும் சந்தோஷத்துடனிருக்க வழியொன்றுண்டு. அதாவது உனது மனது என்ற தாமரைபுஷ்பம் சந்தோஷத்தையடைந்தால் அது அப்படியே திறந்துவிடும். உதாரணமாக சூரியனைக் கண்டவுடன் தாமரை சந்தோஷிக்கின்றது இப்படி சந்தோஷம் வெளிப்படுகின்றது. குவிந்திருக்கும் புஷ்பம் விரிகின்றது விரிந்தால் சூரியனை வரவேற்கின்றது. சூரியனும் அதினுடைய பூர்ண குணத்தையும் அறிந்துகொள்கிறான். அதேபோல்

உன்னுடைய மன்து என்ற தாமரை புஷ்பத்தையும் திறந்துவிடு எனக்கும் உன் மனதை நன்ருக தெரிந்துகொள்ள சந்தர்ப்பம் கிடைக்கும் என்று பகவான் சொல்லுகிருர். நீ உன் மனதை மூடி வைத்துக்கொண்டிருக்காதே. பக்தி என்ற சூரியன் உன் மனத் தாமரையில் பிரகாசிக்கவேண்டும் அப்போதுதான் உன் மனதிற்கு சுகம் சந்தோஷம் கிடைக்கும். பக்திக்கு முதன்முதல் வேண்டுவது மனச்சேர்க்கை. மனச்சேர்க்கையில்லாத, பக்தி கைங்கரியங்களெல் லாம் வீணுகவே முடியும். ஆதலால் உன் மனத்தாமரையை கொண்டு எனக்கு அர்ச்சனை முதலிய ஸேவைகளைச்செய்.

10 உமாபதி சேவை செய்ய உள்ளன்பு ஒன்றே போதும்
விமான யாத்திரைசெய்யும் விண்ணவர் ஜன்மத்தோடு
சமானமில்லாத எந்த ஜந்துவென பிறந்திட்டாலும்
நமாவென்ற சொல்லை நான் மறவாமை வேண்டும்.

உமாபதியை சேவிக்க உள்ளன்பு ஒன்றுதான் முக்கியம் கந்தர் வர்களாகவோ அல்லது ஜந்துவாகவோ உலகில் பிறப்பு எற்பட்ட போதிலும் உன்னை வணங்குதலென்ற தன்மை எனக்கு எற் பட்டாலே போதுமானது அதுவே என்னை ஈடேற்றும்.

11 நான் மறவாமை வேண்டும் நின்சுருபமாமதினை
நான்மறை பயில்புடனே நல் பிர்ம்மசாரியேனும்
ஞனிலா சன்யாசியேனும் சுகமிளிர் கிரஹஸ்தனேனும்
மேன்மையவனே யாவன் மனமதில் நினைநினைந்தால்

நின்சுருபத்தை நான் மறவாமையொன்றே போதும். நான் வேதங்கற்ற பிர்ம்மசாரியானுலும் சன்யாசியானுலும் கிரஹஸ் தனுனுலும் சரி. மனமதில் உன்னுடைய நினைவுடைவர்கள் தாம் மேன்மையானவர்களாவார்கள்.

10-வது பாவிலே. கந்தர்வர் முதலான உயரிய பிறப்பாக வோ அல்லது எந்த ஜந்துவாக வந்தாலும்சரி முக்கியமாக வேண்டு வது உன்திருவடி மறவாமை என்று கூறப்பட்டது. இங்கு 11-வது பாவில் பிர்ம்மசாரியானுலும் கிருஹஸ்தனுனுலும் சன்யாசியானுலும் எந்த ஆச்ரமத்தை கொண்டவனுயினும் பகவானுடைய திருவடியை

மறவாமலிருந்தால்தான் ஆச்ரமபலத்தோடு மோக்ஷமும் கிடைக்கும் என்று கூறப்படுகிறது. மேலும் மனங்கொண்டபடி வாழ்க்கையை நடத்திக்கொள். ஆனால் மனம் பூரா நிம்மதிபெறவேண்டுமென்றால் கடவுள் பக்திதான் முக்கியமாகவேண்டும். உலகியலில் எத்தனையோ நற்சம்பவம் துற்சம்பவங்கள் நடைபெறும். அப்படி நடைபெறும் சம்பவங்களை நடத்தி வைப்பவன், கடவுள்தான் என்றும் அப்படி நடப்பதை நம்மால் தடுக்கமுடியாதென்றும் கண்டுகொண்டு, எல்லா வல்ல இறைவன்பேரில் பக்தியைகொண்டுவிட்டால், நமது மனதிற்கு அப்போது கிடைக்கும் நிம்மதிக்கு சமானம், அதாவது மனோதுக்க நிவாரணம் வேறு கிடையாது. இவைகளை அடிப்படையாக கொண்டே எல்லாவிதமான வழிகளிலும் கடவுள் சுவரூபத்தை மறவாமை மேலென்று கூறப்படுகிறது.

ஓர் ஊரில் ஓர் பிரபு இருந்தார் உலக சுகத்தை காசால்பெற போதுமான பணம் இருந்தது எல்லாவற்றையும் காசால் பெறப் படுவதையும் நன்றாய் தெரிந்துகொண்டவர். காசை காப்பாற்றிக் கொண்டால் எல்லாம் பெற்றுவிடலாமென்ற எண்ணத்தின்பேரில் எந்தமார்க்கத்திலேயும் பணத்தை சேர்க்க ஆரம்பித்தார். ஏர்க் கனவேதான் ஓர் பிரபு என்பதை மறந்தார், போதுமான பணம் தன்னிடம் இல்லை என்ற எண்ணம் வரவும் தன்னைத்தானே தரித் திரனாக்கிக்கொண்டார். பணமோகம் பணம். சேர்ப்பதிலேயே சதா கவனம். வீட்டிலிருக்கும் பெண்டுபிள்ளைகளுக்கு உயிர்மாத்திரம் சரீரத்திலிருக்கத்தக்க போஷணைக்குறிய படித்தரம். தனக்கும், அதேபோல். பணம்சேர ஆரம்பவித்து முன்பணத்தைக் காட்டிலும் இரண்டுமடங்கு நாலுமடங்கு பத்துமடங்கு எல்லாவற்றையும் கூட்டிப்பார்த்தார். முன்னால் ரொக்கம் 1 லக்ஷம் பத்துமடங்கு கூடிவிட்டதைகண்டார் அவருடைய நண்பரொருவர் அடுத்த வீட்டுக்காரர் சொற்ப ஐவேஜியைகொண்டு குடும்ப பரணம் சரியாய் நடத்தப்பட்டவர் அவரை கண்டதும் என்ன அப்பு! இப்போது தான் கணக்கு பார்த்தேன் அப்பா விட்டுபோனதிலிருந்து 10 மடங்கு கூடுதல் என்றார். மேலும் பிரபு பணம், அப்பாவால் தரப் பட்டது 1-லக்ஷம் 1-லக்ஷத்தையும் முதல் வருடத்தில் இரண்டு மடங்கு கூட்டினேன் பிறகு 3-வருடத்தில் நாலுமடங்காக்கினேன் கழிந்த 3-வருடத்தில் பத்துமடங்கு ஆக்கினேன் இப்போது 1-லக்ஷத்திற்கு 10-லக்ஷம் என்றார்.

அப்பு, தாங்கள் பத்து லக்ஷம் சேர்த்திருக்கலாம். ஆனால் சொல்லும் கணக்கு சரியாயில்லை என்றார். பிரபு கணக்கு என்ன தவறிவிட்டதென்று கேட்க, அப்பு, பிதாவால் தரப்பட்டது ஒரு லக்ஷம். முதல் வருடத்தில் 2 மடங்கு கூட்ட மூன்று லக்ஷம். பின் 3 வருடங்களில் நான்கு மடங்காக $4\times3=12$ லக்ஷம். கழிந்த 3 வருடத்தில் 10 மடங்காக $12\times10=120$லக்ஷம், ஒரு கோடியே இருபது லக்ஷமல்லவோ ஆகவேண்டும். அப்போதுதானே தங்களுக்கு கோடீச்வரன் என்று பெயர் உண்டாகுமென்றார். பணத்தாசை பிடித்த பிரபுவும் தன் கணக்கு சரியில்லை என்பதையறிந்து கொண்டு அதுமுதல் தன்னை கோடீச்வரன் ஆக்கிக்கொள்ள பிரயத்னம் செய்துகொண்டே போனார். எப்படி பண ஆசை பிடித்த பிரபுவிற்கு பணம் பூர்த்தியாகாத நிலையில், எப்போதும் பணம் சேர்க்க மோஹமோ, அதேபோல் மோஹம் மோக்ஷமடைவதில், அதாவது, பகவத் சாம்ராஜ்யத்தில் சேருவதில் மனமிருக்கவேண்டும் இதையுணர்த்தவே 11-வது பாவில்,

"நான் மறவாமை வேண்டும் நின் சுவரூபமாமதினை"

உன் சுவரூபமதை நான் மறக்கவில்லாமலிருக்வேண்டும். நான் எந்த ஆச்ரமத்தை யனுசரிப்பினும் சரி. பிர்ம்மச்சாரியானாலும், கிரஹஸ்தனானாலும், சன்யாசியானாலும் ஆச்ரம வாழ்க்கைமட்டிலும் போதாது. உன்னுடைய சரணாரவிந்தங்களில் என் மனம் எப்போதும் அமையவேண்டும். மேலும் மனிதர்கள் சந்நியாசமே மோக்ஷம் தந்துவிடும் என்ற எண்ணங்கொண்டு காவி வேஷ்டி கட்டி. தலை மொட்டையிட்டு எல்லோராலும் வணங்கப்படுவதை பெற்றுக் கொண்டு மோக்ஷம் கிடைத்துவிடுமென்று நினைக்கின்றார்கள். இன்னும் சிலபேர்கள் பிர்ம்மச்சர்ய விரதமே போதுமென்றும், சிலர்கள் கிரஹஸ்ததர்மம் சிறந்ததென்றும், ஆகவே வர்ணாச்ரமமே மோக்ஷம் தரத்தக்கதென கூறுவாருமுளர். ஆனால் முக்கியமாக வேண்டுவது பகவத் த்யானமே த்விர வேறு ஆச்ரமம் வழிபாடுகள் முக்கியமல்ல என்று கூறப்படுகிறது. மேலும் எந்த ஆச்ரமியானாலும் சரி, அன்றேல் எந்த இடத்திலிருந்தாலும் சரி, எந்த ஜன்மத்தை யடைந்திருந்தாலும் சரி, கடவுளிடத்தில் பக்தியுடையோன் மேலானவனாகப்

பவிப்பான் என்று கூறப்படுவதையும் குறிப்பிடவேண்டும். பகவத் கீதையிலும் "என்னை யடைதலேயே எழில் ஸ்தானமாகக் கொள்" என்று கூறப்பட்டிருக்கிறது. மேலும் யோகாப்பியாசம் செய்தாலும் மனது பகவானிடம் இருக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. மேலும் முன் வாசித்தபடி சிவானந்த லஹரி பாவில்,

"காலனை வெல்லலாமோ காலகாலன் கருணையின்றி"

மரண காலத்தை வெல்வதென்றால் அந்த காலத்தை வென்றவன் அல்லது காலத்திற்கும், அகாலத்திற்கும் புறம்பே நிற்கும், ஈசுவரன் அருள்வேண்டும். அதையடையும் மார்க்கம் அவனையே ஸதாநினைத் தல் என்றே கொள்ளவேண்டும். மேலும் மோக்ஷமடைவதில் அந்த ஒரே எண்ணம் போதுமானது. அதுவே மோக்ஷமடைய செய்து விடும். ஆகலால் உலக தர்மாதர்மங்கள் நம்மைக் கட்டுப்படுத்தா தென சொல்லுதல் பொருந்தாது. இவைகளை நன்கு ஆலோஜித்தே நம் முன்னோர்கள் மனிதன் அடையவேண்டிய புருஷார்த்தங்கள் நான்கு யென்றும், அந்நான்கும், தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் யென்று கூறப்பட்டிருக்கிறது. தர்மமென்றால் உலகியல் தர்மம்; அர்த்தம் என்றால் பொருள்; காமமென்றால் இந்திரிய நுகர்ச்சி, மோக்ஷமென்றால் கடவுளிடம் ஐக்யம், இவைகளை ஔவை அம்மை யார் கீழ்க்கண்டபடி குறிப்பிடக் காண்க.

'ஈதலறம் தீவினை விட்டீட்டல் பொருள்—எஞ்ஞான்றும்
காதல் மனையாளும் காதலனும் தீதன்றிப்பட்டதே இன்பம்'

இம்மூன்றும் விட்டதே பேரின்பமெனும் வீடு. என்றருளி யிருக்கிறார். வடமொழியில் கூறப்பட்ட தர்மார்த்த காம மோக்ஷத் தையும் எடுத்துக்கொள்வோம். தர்மேன அர்த்தம், அர்த்தேன காமம், காமேன மோக்ஷம். தர்ம மார்க்கத்தில் பணம் சேகரிக்கப் படவேண்டும். அப்படிப்பட்ட பொருள்கொண்டு காமம் பூர்த்தி செய்யப்படவேண்டும். மேலும் காமம் என்றால் ஆசை. அந்த ஆசை மோக்ஷத்தில் வேண்டும். அதை நன்குணர்த்தலே தர்மம்' அர்த்தம் இவ்விரண்டும் ஓர் பகுதியும், காமம், மோக்ஷம் இவ்விரண் டும் ஓர்பகுதியாகவும் கொள்ளவேண்டும் ஆகவே தனமுடையாரெல் லாம் தனமுடையாரல்லர். ஏனெனில் அந்த தனம் தர்மமார்க்கத்தில் சம்பாதிக்கப் படாவிடில். இதை உத்தேசித்தே ஔவை, தீவினைவிட்டு

ஈட்டல் "பொருள்" என்று உரைக்க காண்க. மேலும் ஈதல் அறம், கொடுப்பதே தர்மம் என்று உரைத்திருப்பதை கவனிக்க, காமத்தைப்பற்றி கூறும்போது. காதல் மனையாளும், காதலனும் தி தன்றிப்பட்டதே இன்பம் என்று எவ்வளவு தர்மபொருத்தமாக உரைத்திருக்கிறார். இம்மூன்றும் மேல்சொன்ன அறம், பொருள், இன்பம் இம் மூன்றையும் "விடல்" "விட்டு விடலே" "வீடு" என்றும் அவ்வீடு அடைதலே கடவுளையடைதல் எனக்கொள்ள வேண்டும். ஆகவே கடவுள் பக்தியென்றால் தர்மமார்க்கத்திலாசக்தி கொண்டு இருக்கவேண்டுமென தாத்பிரியம்.

12 மனமதில் நினை நினைப்பான் மலையின் குகைதனிலோ
தனமுடை வீடதனிலோ தனிக்காடதனிலோ
வனமதிமன் மத்திபிலோ வான் சிகரமதிலோ
அனலிலோ அப்புவிலோ அவனிருந்தாலென்னே

மனதில் கடவுளின் பக்தியுள்ளவர்கள் எந்த இடத்திலிருந்து தபம் செய்தாலும் போதும். அவர்களுக்கு கடவுளருள்வார். விசேஷமாக தனியிடந் தேடியோ அல்லது கஷ்டந்தரும் இடமோ வேண்டுவதில்லை. முக்கியமாக வேண்டுவது மனதில் பக்தி ஒன்றுதான்.

13. அவனிருந்தால் என்னே அவனியில் கஷ்டம் வரினும்
எவனினும் மெளியவனும் எஞ்ஞானமுமிலா எனை
அவமென ஆக்காமல் நீ அஞ்ஞானமதைத் தருவாய்
இவனைங்கு ஏழைதானும் எனினும் வேறு உண்டோ.

இப்பூமியில் என்ன கஷ்டம் வந்தாலும் அங்கு இருந்தால் என்ன? நானோ எளியவன், ஞானமிலாதவன்; என் முயற்சியை பயனில்லா நிலையில் ஆக்காமல் அந்த ஞானத்தைத் தருவாய். மேலும் இங்கு ஞானத்தில் பரம ஏழை வேறு யார் இருக்கின்றார்கள்.

14. எனினும் வேறு உண்டோ எளியவர் தோழனென
அனல் பரப்பும் கண்ணாய் அறை கூவல் உண்டு
இனமதில் சேர்ந்த என்னை ஏழை பந்துவாய்க்கொண்டு
மனமதில் பொருத்தருள்வாய் மரபின் குற்றமெல்லாம்

எளியவர் என்னைத் தவிர வேறுண்டோ? மேலும் நெற்றியில் நெருப்பை வெளியிடும் கண்ணுடையாய்! நீ எளியவர்களுக்கு

தோழனென பந்தயங் கூறலுண்டு. அப்படியிருக்கும்போது எளியவர் இனத்தில் சேர்ந்த என்னை ஏழைகளின் பந்துவாய் எடுத்துக் கொண்டு, என் குற்றத்தை எளியவர் கூட்டம் செய்யும் குற்றமாகக் கொண்டு பொருத்தருள். ஸர்வ சாதாரணமாக எளியவர்கள் சில காரியங்கள் செய்வது உலகியலில் குற்றமாகவே கருதப்படுவது வழக்கம். உதாரணமாக, ஓர் பழவியாபாரி வீதியில் சில பழங்கள் விற்றுக்கொண்டிருந்தான். வீதியிலே ஒரு கனவான் நல்ல உடைகள் தரித்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தார். பழம் விற்போன் அவரை யண்டி, ஐயா, புது மாதிரியான பழம் வாங்குங்கள். இந் தாருங்கள்; மாதிரி பாருங்கள் என்று கொடுத்தான். மாதிரி பழத்தைச் சாப்பிட்ட கனவான் பழம் வாங்காமல் போய்விட்டார். அதைப்பார்த்துக்கொண்டிருந்த ஓர் எளியவர் என்ன பழம் என்று கேட்கவும் மாதிரி கொடுக்கப்பட்டது. எளியவர் பழம் நன்று; வாங்க பணம் தன்னிடமில்லையே என்று வருத்தப்பட்டார். பழம் விற்பவன் மாதிரி பழம் சக்காத்துக்கா? என்று கோபங்கொண்டான். இரண்டு பேர்களும் பழம் வாங்கவில்லை. ஆனால் இரண்டாமவன் உண்மையைக் கூறி வருத்தப்பட்டான். இதுபோன்ற குற்றங்கள் எளியவர்களிடையுண்டு இப்படிப்பட்ட குற்றமெல்லாம் எங்கள் மரபின் குற்றம் இதை பொருத்தருள்,

15 மரபின் குற்றமெல்லாம் மாற்றியமைக்க வல்லாய்
பிரமன் சிரமதினை பிய்த்து எறிந்த நீயும்
பிரமனெழுத்தையிங்கு பேதிக்கவலியிலாயோ
சிரமமேயன்றி எந்தன் சிந்தை கவலை தீர்ப்பாய்.

எங்கள் கூட்டத்தின் குற்றத்தையெல்லாம் மாறும்படி செய் தருள், பிர்ம்மாவின் சிரத்தை கையினாலேயே பிய்த்துவிட்ட நீ அந்த பிர்ம்மாவினால் என் சிரசில் எழுதப்பட்டத் தலை எழுத்தை மாற்ற சக்தியில்லாமலா போய்விட்டாய். யாதொரு கஷ்டமுமில் லாமல் என்மனதின் கவலையைமாற்று (குறிப்பு) என்மனதில் கஷ்டப்படவேண்டுமென்ற "என் தலையெழுத்தையும்" மாற்றி யமைக்க சக்தி உனக்குண்டு.

16 சிந்தைகவலை தீர்ப்பாய் சிரஸானாலும் கார்த்து
அந்த பிர்ம்மாவை நீயும் அவிஞசியாக்கிவைப்பாய்
எந்தன் சிரஸிலென்றும் எளிமை எழுதிவைத்து
உந்தன் தினைவையென்றும் ஒழியாதமைத்தலாலே

அந்தப் பிர்ம்மலிபியைக்கூட மாற்றக்கூடியவன் நீ, ஆனால் அந்த பிர்ம்மாவின் மீதியான சிரங்கள் நான்கும் உன்னால் காப்பாற்ற படவேண்டும் ஏனெனில், எனக்கு இந்த எளிமையை தந்ததால் அன்றோ, நான் எப்போதும் உன்பேரில் நினைவோடு பக்தியை செலுத்த சமயங்கிடைத்தது. (குறிப்பு) பணக்காரர்கள் கடவுளை மறந்து விடுவார்கள். எளியவர்களுக்குத்தான் சதா பகவானுடைய சிந்தனையிருந்து கொண்டிருக்கும்.

17 ஒழியாதமைத்தலாலே உன் திருவடி ஸேவை தன்னில்
அழியா அத்தேவர்குழாம் அணிந்த கிரீடமதோடு
நுழைவதற்கிடமும் தாரார் நோக்கியுனையடைவதற்கு
வழியெனக்கு தந்து வந்தனைக் குரியோனுக்கு

உன்னுடைய திருவடி ஸேவையிலே தேவர்கள் தங்கள் கிரீடத்தோடு நிரம்பியிருப்பர். என்போன்ற எளியவர்கள் உட்புகுவதற்கு இடமும் தரமாட்டார்கள், நீ தான் எனக்கு வழிக்காட்டவேண்டும். வழிகாட்டி எங்களையும் வந்தனை செய்வதற்கு உரியவன் ஆக்க வேண்டும் ("அழியா அத்தேவர் குழாம்" அமிர்தம் உண்டதாலே அழிவில்லாத தேவர்கள் கூட்டம்.)

18 வந்தனைக்குறியனாக்கி வானுலகு தருவாயெனக்கு
பந்திக்கும் தன்மை வேண்டேன், பேரருள் புரியவேண்டும்
நிந்தன் ஸேவைசெய்த நிர்மல விஷ்ணுவிற்கு
முன்னம் கொடுத்தாய் நீயும் முழுவைகுண்டமதை நீ

மேலான இருப்பிடம் தந்து என்னை உன்வந்தனைக்கு உரியவனுக்கு முன்பாவில் கூறியதுபோல் தேவர்கள் கூட்டத்தில் கலந்து தொழுவதற்கு இடம் தரவேண்டும்; உலக சுகங்களில் பந்தப்படும் எண்ணம் எனக்கில்லை. உன்னுடைய அருளேவேண்டும். நின் ஸேவையில் ஈடுப்பட்டிருந்த விஷ்ணுவிற்கு "வைகுண்டம்" சகல பாக்கியமுமுள்ள, வைகுண்டத்தை கொடுத்திருக்கிறாய்.

19 முழுவைகுண்டமீய்ந்து மோஹத்திலிடர செய்தே
எழுமோக்ஷமதையும் இலையென்றுயங்கு
வழமையில் படைத்தருளும் விரிஞ்சன் என் தலையில்
எழுதிய எழுத்தை நீயும் மாற்றியருள்வாயிங்கு.

வைகுண்டத்திலும் முழு வைகுண்டம் என்று குறிப்பிடும் போது சகல சௌபாக்கியங்கொண்டது என்பதை குறிக்கின்றது. அதைக்கொடுத்து மோஹத்திலிடரசெய்தாய் சுகானுபவமே மோக்ஷமென்றும் நினைக்கும் துவைத விசிஷ்டாத்வைத சித்தாந்தப்படி மோக்ஷமென்றால் "ஈசுவர ஐக்யத்தை" இல்லையென்று செய்திருக்கிறீர்கள். எல்லார் தலையிலும் தலையெழுத்து என்று முன்கர்மப்படி பிர்ம்மா என் தலையிலும் வழக்கம்போல் எழுதிவிட்டார். அதை மாற்றியருள்வாய் எனக்கு.

(குறிப்பு) அத்வைத சித்தாந்தப்படி பிர்ம்ம ஐக்யமே மோக்ஷமெனக் கூறப்படுகின்றது. பிறப்பு, இறப்பு அற்ற "அகண்ட சேர்க்கை" துவைத விசிஷ்டாத்வைத சித்தாந்தம் பகவத் சன்னதியில் ஆனந்த பரிதாளாய் பகவத் சேவை செய்துகொண்டிருத்தல் தான் ஜீவர்களுக்கு ஸாத்யம், பரமாத்ம ஜீவாத்ம ஐக்யம் கிடையாது என்று கூறப்படுகிறது. இவைபோன்ற வாதங்களினால் ஒன்று என்ற தன்மை மாறி, "இரண்டு பாவம்" கற்பிக்கப்படுவதை குறிக்கவே, சகல பாக்கியத்தையுங்கொண்ட ஸ்ரீ வைகுண்டமாநகர் முழுவதையும் விஷ்ணுவிற்கு கொடுத்து பாக்கிய மோஹத்திலிடரச் செய்தாய். அதுபோல சௌபாக்கிய மோஹம் எனக்கில்லை. ஜீவேசுவர ஐக்யமென்ற மோக்ஷமே எனக்கு வேண்டுமென்ற அத்வைத நிலைகாட்டப்படுகின்றது. மேலும் இங்கு சில விரிவாக கூற ஸ்ரீ சங்கரர் "எழுதும் காலத்திலுள்ளவை" இம்மூன்று வகை மத சித்தாந்தங்களே இன்று உலகம் முழுவதும் இருக்கக்காணலாம். மகம்மதிய மதத்தின் சித்தாந்தத்திற்கும் வைஷ்ணவ சித்தாந்தத்திற்கும் அதிக வித்தியாசமில்லை. ஜீவர்கள் கடைசியில் அடையும் நிலைபற்றி ஜீவ ஈசுவர ஐக்யம் என்பதை ஒப்புக்கொள்வது இல்லை. அதேபோல்தான். கிருஸ்துவ மதத்திலும் ஜீவர்களுடைய நிலையும். துவைத சித்தாந்தபடி கடவுள் வேறு ஜீவர்கள் வேறு என்கிற நிலையிருந்தாலன்றோ சுகானுபவத்தின் பொருட்டு ஓர் நிலை கற்பித்துக் கொள்ளமுடியும். ஆகவே சுகமோ அசுகமோ எனக்குவேண்டாம் உன்னுடைய அகண்ட சேர்க்கையே போதுமென கூறப்படுகிறது. இதுபோன்ற வாக்கியங்களால் அத்வைத நிலையிலுள்ள உன்னிடம் விஷ்ணுபோன்ற தேவர் குழாமிருக்கக் காரணமென்ன என்று கேள்வி உண்டாகலாம். முதல் பாவிலேயே வந்திக்கும் பக்தர்

தம்மின் வரங்களை யறிந்துமீவோய்'' கேட்கப்பட்டவர்கள் மன மறிந்துகொடுக்கும் சங்கல்பம் உன்னிடமுண்டல்லவா? ஆதலால் தான் பக்தர்கள் விரும்புவதுபோல் ஸாலோகம் ஸாமீப, ஸாரூப, ஜாயுஜ்யமாலும் அளிக்கும்வள்ளல் நீதானென்றும் குறிப்பிடுகின்றார்.

மேலும் கிருஷ்ண பரமாத்வால் உபதேசிக்கப்பட்ட பகவத் கீதாப்படி, எல்லாம் தானேஎன்றும் தன் சுவரூபமே எங்கும் பரிண மிக்கிறதென்றும் பொருந்தும்.

20 மாற்றியருள்வாயிங்கு மனக்குரங்கமாதினை
ஏற்றமுடைவதன பார்வை எழிலுடை பெண்கள் தம்மின்
தேற்றமுள தனங்களூடே தொத்திக் குதிப்பதென்னோ
தோற்றத்தில் பிச்சைக்கார, தொல்வினை தீர்ப்பாய் நீயும்

எனது மனமென்றகுரங்கு, அழகுடை ஸ்திரீகளின் முகப் பார்வையிலும் அவர்களுடைய திரண்ட ஸ்தனங்கள் மத்தியில் தொத்திக் குதிக்கின்றது அதை மாற்றியருள் பார்வைக்கு நீ பிச் சைக்காரன் ஆனால் ஜன்மாந்திர வினைகளெல்லாம் நீயே தீர்ப்பாய்,

குரங்கின் சுபாவம் பற்றி பற்றி குதிக்கும் தன்மையுடைத்து அதேபோல் என்மனமென்ற குரங்கு விஷய ஆசைகளிலேயும் ஸ்திரீ மோஹத்திலேயும் ஈடுபட்டு ஆனந்தப்படுவதாக நினைத்து குதிக்கின்றது. நீயோ தோற்றத்தில், பார்வைக்கு பிச்சைக்காரனாய் தோன்றுவாய் ஆனால் எல்லோருக்கும் பிக்ஷை கொடுக்கப்பட்டவன் நீ பிக்ஷைக்காரனாக தோன்றுகின்றாய், ஏன் தோன்றவேண்டும்? ஏன் தோன்றுவதாக உன்னை சித்திரிக்கவேண்டும்? ஜீவர்கள் உன்னுடை பிரதிபிம்பமென்றால் நீயும் ஜீவர்களுடைய பிரதி பிம்பமாகின்றாய் ஜீவர்கள் உன்னுடைய ஐக்யபாவத்தை யாஜித்தால் (பிக்ஷைகேட் டால்) அதே பிரதிபிம்பம் அங்கே தோன்றிவிடுகின்றது. ஆதலால் உன்னை பிச்சைக்காரன் எனவே சித்திரிக்கின்றார்கள். ஆகவே நீயும் பிச்சைக்காரனானாய். ஓர் சமயம் பகவான் கிருஷ்ணமூர்த்தி ஸ்ரீ ராதாஜிக்கு பிரேமவிலாபம் தீர்க்கவேண்டி தன் பட்டமகிஷி ருக்மணி, சத்தியபாமா சகிதம் 16000 கோபிகைகளோடும் ரஷி முனிவர்களோடும் மாசிப் பௌர்ணமியையில் யமுனா தீர்த்தமாட சென்றார். ஸ்ரீ ராதாஜி எம்பெருமான் கிருஷ்ணனுடன் வந்திருந்த

சகலத்ராளுக்கும் நல்ல போஜனமளித்து உபசரித்தாள். ஸ்ரீ ராதாஜியும் எல்லோரும் உல்லாசமாக பேசிக்கொண்டிருக்கும் சமயம் கிழ்கண்ட கீதம் பாடினுள்.

21 சந்திரன் நிலவு ஒன்றேனும் சகோரப் புள்ளாயிரம்
தன் தன் தாகமதை தீர்த்து கொள்வனேபோல்
சுந்தரவதன குமாரன் சுந்தரனொருவனே தான்
வந்திக்கும் பக்தரினம் வளர்ந்துளதையறியார் யார்.

இந்த கீதத்தை கேட்டும் எல்லோரும் அவரவர் கூடாரத்திற்கு (ஜாகைக்கு) சென்ருர்கள். ஸ்ரீ ராதாஜியின். பிரேம குணத்தைக் கண்டு எல்லோரும் ஆச்ரஹம் கொண்டார்கள்.. எம்பெருமான் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நம் எல்லோருக்கும் நல்லதொரு போஜனத்துடன் இன்பமளித்த ராதாவிற்கு உன் கையினுலே பால் கொண்டு கொடுக்க ருக்மணிக்கு ஆக்ஞையிட்டார். ருக்மணி தானே பாலை கொண்டு ராதாவிற்கு கொடுத்து பாலை அருந்தச்செய்து, திரும்ப பகவானின் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தாள். தின நியமப்படி ருக்மணிதேவி அன்று எம்பெருமான் திருவடி பக்கம் பாதசேவை செய்ய உட்கார்ந்தாள். பாதத்தை தொட்டதும் பாதங்களில் பெரிய கொப்புளங்கள் இரண்டு மூன்று இருந்தன, ருக்மணி கைபட்டதும் எம்பெருமான் வலி சகிக்காதவராய் எழுந்து உட்கார்ந்து மறுபடியும் படுத்துக்கொண்டார். பகவான் காலிலிருக்கும் கொப்பளங்களை சத்யபாமா எல்லோருக்கும் காட்டி இதற்குக் காரணமறியவேண்டி ருக்மணியே வினய பூர்வம், பகவானை பிரார்த்தித்து பிரபோ! தாங்கள் கொஞ்சங்கூட சூடு என்பதை அனுபவிக்கவில்லையே! மாசி நிலவு தங்களுக்கு பொறுக்கமுடியா உஷ்ணமாக மாறிவிட்டதா? எனக்கேட்டாள். பகவான், ருக்மணி! நான் உன்னை ராதாவிற்கு பால் கொடுக்கச் சொன்னேனல்லவா? ஆமென்ருள் ருக்மணி. பகவான் கோபத்தோடு, பாலை கொதிக்கக் கொதிக்கவா கொண்டு கொடுப்பதா? என்ன சூடு! பாபம்! ராதை என் பேரிலுள்ள பிரேமையினுல் சூட்டைகூட தெரிந்துகொள்ளாமல் பாலைக் குடித்தாள். அதினுலேதான் என் கால்கள் கொப்பளித்துவிட்டது என்ருர். பகவானுடைய இவ்வார்த்தைகளை கேட்டதும் எல்லோருக்கும் அசூயை ஜாஸ்தியாகி கோபங்கொண்டார்கள்.

## பாரத் ரெடிமேட் எம்போரியம்,

முனிஸீப் கோர்ட்டுக்கு எதிர்புரம், அம்பாசமுத்திரம்.

ஆண், பெண், பாலர் யாவருமணியும் எல்லாவித அழகான ஸில்க், செக் சீட்டித்துணிகளில் புதுமாதிரி தையல்வேலைப்பாடுள்ள ஆடை உடைகளும், வேஷ்டி, துவாலை டவல் ஜவுளி தினுசுகளும் எங்களிடம் சகாய விலைக்கு கிடைக்கும்.

தயாராகுமிடம்:—
**T. S.** சங்கய்யா ஸ்டோர்ஸ்,
மதுரை.

**R.** நாருயணன்,
புரோப்ரைட்டர்.



## மஹரிஷியின் 3 சூர்ணங்கள்.

பேதி சூர்ணம்:— இந்தப் பொடியை காலைவேளையில் ஜலத்தில் போட்டு சாப்பிட்டால் சுகபேதி 3 தடவையாகும். யாதொரு அருஜியோ, பத்தியமோ கிடையாது. மலக்கட்டுடையவர்களுக்கு அபூர்வமான ஓர் நிவிர்த்திதரும் சூர்ணம். ஒரு தடவைக்கு அணு 2.

சுக சூர்ணம்:— இந்தப் பொடியை ஒரு சிமிட்டா வாயில் போட்டுக்கொண்டால் பித்தம், ஜலதோஷம், தலைவலி, அஜீர்ணம் முதலிய எல்லாவித நோய்களையும் தீர்க்கும். மோட்டார், ரயில்பிரயாணம் செய்பவர்களுக்கு நிரம்ப நல்லது.

பாக்கெட் 1-க்கு விலை அணு 2.

பலசூர்ணம்:— இந்தப் பொடியை ஒரு தேக்கரண்டி நல்ல பாலோடு கலந்து தினம் ஒருமுறை காலையில் சாப்பிட்டால் தேகத்திற்கு நல்ல ஆரோக்யம், சுறுசுறுப்பு, ஊக்கம் இவைகள் தந்து இளமையையும் உண்டுபண்ணும். காப்பிக்கு பதிலாக ஓர் மறு அவுஷதம். 40 நாட்கள் சாப்பிட்டால் பிறகு காப்பியோ, டீயோ ஒன்றும் தேவையில்லை. 40 வேளை மருந்து ரூ. 3 மட்டும்,

மஹரிஷி கிருஷ்ணஜி,
கல்லிடைக்குறிச்சி.

Regd. No. M. 4337. [1-6-'42] Vol. II Bk. No. 3

# பகவத் கீதை.

(வெளியீடுகள்.)



ஆக்கியோன்,

மஹாரிஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved ) 1942.

சிவானந்தலஹரி (மனோதத்துவம்) லக்ஷ்மிநாராயணன் (ஆசைத்துன்பம்) அடங்கியிருக்கிறது.

மாத சஞ்சிகை. வருட சந்தா ரூ. 2/-

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

ருக்மணிமட்டிலும் கோபங்கொள்ளாமல் நான் சூடோடே கொடுக்கவில்லையே. அப்படியிருப்பினும் தங்கள் கால்களின் கொப்பளங்களுக்கும் ராதைக்கும் என்ன சம்பந்தமென்றாள். பகவான் சொல்லுகிறார். சம்பந்தமா கேட்கின்றாய் சொல்கிறேன்.

பக்தர்கள் எப்பொழுதும் என் பாதத்தை தங்களுக்கு சுகமளிக்க வல்லது என்று நினைத்து அரைவினாடி நேரம் உள்ளன்போடு நினைவு கொண்டால் என்னை அறியாமலே என் பாதங்கள் அவர்கள் மனத்தாமரையில் பதிந்துவிடுகின்றது. என் பாதங்களிரண்டினையும் மனதில்கொண்டே ராதா பாலருந்தினாள். பால்சூடு, காலில் தாக்குண்டது. அவளுக்கு ஓர் நோவும் கொடுக்கவில்லை. பக்தர்களின் கஷ்டங்களை நானே பொறுப்பதாக வாக்களித்திருக்கிறேன் என்றார். உண்மைதத்துவமறிந்த ருக்மணியும் பகவானை துதிசெய்தாள்.

22 தொல்வினை தீர்ப்பாய் நீயும் தோழனு மெந்தனுக்கே
வல்விரோதியானாய் மதனன் அழகனுக்கும்
சொல்லுடை கூடாரமதில் சேர்ந்த பிரபுவே போன்று
நல்லவைகள் சேர்ந்த எந்தன் நல் மனத்தமர்வாய் நீயும்.

முன் ஜன்மாவில் செய்திருக்கும் வினைகள் தீர்ப்பாய் ஏனெனில் நான் உனக்கு தோழனல்லவா? மேலும் மன்மதன் உன்னிடம் தோழமைகொள்ளாமல் போனதாலல்லவோ, அவனுக்கு விரோதியானாய் நீ பிரபுக்கள் எந்த காட்டிலும் கூடாரமடித்து அதில் வசிப்பார்கள். அதேபோல் என மனதிலும் பிரபுவாகிய நீ அமரவேண்டும்.

(குறிப்பு) நான் உன்னை எப்போதும் மறவாமலிக்க நீயே என் மனத்திலமர்ந்துவிடு.

23 நல்மனத்தமர்வாய் நீயும் நல்லிருள் போக்கவல்லாய்
பல்விதத்தென்மனது பேராசை யுற்றோயிங்கு
எல்லாவிதத்து மென்னை ஏமாற்றி திரிதல்காண்பாய்
சொல்விதம் தெரிந்தநீயும் சொல்லுதல் நலமேயாகும்.

என்னுடைய மனதில் நீ அமர்ந்துவிட்டால் என் மனதின் இருள் (அக்ஞானம்) போய்விடும். மேலும் எல்லாவிதத்தாலுமென்

மனதும் பேருசையடைந்திருப்பதால், இங்கு என்னை பலவிதமாக ஏமாற்றி திரிகின்றது. இதையறிவாய்நீயும். எப்படி மனதுக்கு சொன்னால் மனது ஏற்றுக்கொள்ளுமோ அப்படிப்பட்ட சொல் விதம் உனக்கே தெரியுமாதலால் நீயே சொல்வது நல்லது.

(குறிப்பு) என் மன மடங்கவேண்டுமானால் உன்னுதவி யில்லாமல் முடியாது.

24 சொல்லுதல் நலமேயாகும் சுயரூபம் காணவேண்டி
நல்லதொரு பன்றியாகி நாநிலம் புதந்தான்விட்டுணு
பல்லிற அன்னமாகி பறத்தலும் கொண்டான் பிரமன்
இல்லல்தரும் கருமமதை இங்கு எனக்கு தருவதென்னே.

பகவானுடைய சுய ரூபத்தைக் காணவேண்டுமென்றால் மனம் விட்டு சொல்லுதல் நலமாகமுடியும், ஏனெனில் முன்னொருக் கால் உன் ரூபங்காணவேண்டி, விஷ்ணு பன்றிஉருக்கொண்டு பூமியி னுட்சென்றான். பிர்மாவும் அன்னபக்ஷியாகி ஆகாசமதில் பறந்தான். அதுபோல் கஷ்டமான வேலை எனக்குத் தருவது வேண்டாம்.

25 இங்கு எனக்குத் தருவதொன்று இணங்கியே தந்திடல் வே
தங்கமோடு மணிகள்கொண்ட திருக்கைலாயமதிலே [ண்டும்
உன்கருணைக்காளான என்னை ஊழிக்காலங்களெல்லாம்
தங்கியே சேவைசெய்ய திருவருள் புரிதல்வேண்டும்.

இங்கு இணக்கத்துடன் தருவது ஒன்றுண்டு, தங்க மணி களோடு ரத்ன மணிகளால் பிரகாசிக்கும் அழகுடை கைலாயத் திலே உன் கருணைக்காளான எனக்கு எல்லா காலங்களிலேயும் அங்கு (கைலாயத்திலிருந்து) உனக்கு சேவைசெய்ய உன் திரு அருள் செய்யவேண்டும்.

(குறிப்பு) உன்னருகிலிருந்து உனக்கு சேவை செய்ய லுந்தான் நான் வேண்டுவது.

26 திருவருள் புரிதல்வேண்டும் திருக்காக்ஷி காண்பதற்கு
பிரமனோடு பலபேர்கள் பலவாய் பணிவாருன்னை
எருதுவினோடு கூடி எங்கும் சூழ்கணங்களோடு
பாசுவை கொன்ற ஈசா பக்தர்கள் நேசனன்றோ.

அழகிய கைலாய காக்ஷியை காண்பதற்கு உன்னருள்தா, பிரம்மாவோடு பல தேவர்கள் உன்னையே பலமார்க்கத்திலும் தொழுவார். மேலும் எருது உன் வாகனம். எத்தனையோ கணங்கள் உன்னை சூழ்ந்து நிற்பர். பரசு என்ற ராக்ஷதனை கொன்ற யீசன் நீ, பக்தர்களுக்கு நேசனேயாவாய்.

27 பக்தர்கள் நேசனன்றோ பார்வதிபதியே நீயும்
முக்தர்கள் வேண்டுவதுவும் முதன்மை தெய்வமாம்நின்
பக்கத்திலமர்ந்து தானும் பலதொண்டு நினக்கேயாற்றி
எக்காலத்திலும் நின்மயத்தை நீங்காதிருப்பதென்னே.

பார்வதியின் நாயகனே நீ பக்தர்களுக்கு தோழனல்லவா? முக்தியடையவேண்டுவர்கள் முதல் தெய்வமான நின்பக்கத்திலிருந்துகொண்டு பலவிதமான உபசாரங்கள் செய்வதோடு எந்தக் காலத்திலும் உனது சேர்க்கையைப் பிரியாமலிருப்பதுதானல்லவா?

(குறிப்பு) முக்தி யென்றால் எப்போதும் பகவானிடம் சேர்ந்திருப்பது என்று பொருள் தருகிறது.

28 நீங்காதிருப்பதென்னே நின் செல்வ மெல்லாம்
ஓங்கிவளர்மலைதனிலே ஒருமையோடு வாழ்பவனே
தாங்கிய செல்வமெலாம் தரித்திரனேனறிவன்
எங்கும் என் மனமொன்றே இங்கு நான் தரவல்லது.

உன்னுடைய செல்வமெலாம் உன்னைவிட்டு எப்போதும் நீங்காதது. உலகத்தில் பெரிய மலையிலே நீ தனியே வாழுகின்றாய் அந்த மலைச்செல்வம் தரித்திரனாகிய எனக்குத் தெரியாது. எங்கும் என் மனதுதான் நான் உனக்குத் தரக்கூடியது. நீங்காச் செல்வம் படைத்தாய் என்றால், செல்வம் வேறு, நீ வேறு, என்று சொல்வதற்கில்லை. நீயே செல்வம் என்று குறிக்கும். ஓங்கிவளர் மலைதனிலே என்றால், உலகத்தில் இன்றும் வளர்ந்து கொண்டிருக்கும் மலையில் வசிப்பவன் நீயொருவன்தான் என்று குறிக்கும். அம் மலையில் உள்ள செல்வமெலாம் என்னால் அறிந்து கொள்ளக்கூடாத நிலையிலுள்ளது. அம் மலைச்செல்வத்தைக் கண்டு ஏங்குகின்றேன் என்றால் பிரமித்துப் போய்விட்டேன். அப்படி பிரமித்து நிற்கும் மனதைத உன்பால் தருகிறேன், உன்பேரில் எனக்குப்பிரமை ஜாஸ்தி என்று குறிக்கவேண்டும்.

29 இங்கு நான் தரவல்லது என்மனத்யானமேதான்
தங்கு மத்தியானமதால் சாயுஜ்யமும் வந்திடுமே
பங்கமில் நின் ஸரூபம் பக்தர் சம்பாஷணைத்தால்
சங்கீதப் பூஜையினால் சாலோகம் சாமீபமாம்.

மனத்யானமதாலே சாயுஜ்யம் கிடைக்கும் ஈசுவரஸ்வரூபம் பக்தர்களுடைய சம்பாஷணைத்தால் கிடைக்கும். சங்கீதம் சாலோகத்தையும் பூஜை சாமீபத்தையும் தரவல்லது. ஆனால் நான் செய்வது மனத்யானம் ஆகலால் சாயுஜ்யமே எனக்குக் கிடைக்கும்.

(குறிப்பு) நான் உன்னை எப்போதும் த்யானிப்பதால். சாயுஜ்யமெனக்களிப்பாய் த்யானம், சம்பாஷணை, சங்கீதம், பூஜை இவை நான்கால் தனித்தனி நிலை கிடைக்கவல்லது. ஈசுவர பூஜை செய்யும் ஒருவனுக்கு அவனருகிலிருக்கும் பாக்யம் அதாவது சாமீபம் கிடைக்கின்றது. சங்கீதத்தால் சாலோகம் கிடைக்கின்றது. ஈசுவர சம்பாஷணத்தால் ஸரூபம் கிடைக்கின்றது. ஈசுவரத்யானத்தால் சாயுஜ்யம் (அகண்ட சேர்க்கை) ஏற்படுகின்றது. ஆகையால் மோக்ஷத்தை விரும்புமொருவன் த்யானயோகத்தை முக்யமாய்க்கொள்ளவேண்டும்.

30 ஸாலோகம் ஸமீபமாம் சர்வனை நினைந்தால்
பூலோக வாஸனையில் பாபி நான் உழல்கின்றேன்
ஆலோகனைச் செய்வதும் அருமையோ உந்தனுக்கு
ஸாலோகம் தந்திடுவாய் தத்துவமும் தருவாயன்னே.

சர்வனாயிருக்கப்பட்ட உன்னை நினைத்தால் உன் லோகமடைவது சமீபத்தில் வந்துவிடும். நான் பூலோகத்தில் காணும் அழியும் சுகங்களில் உழன்று கொண்டிருக்கிறேன். அப்படிப்பட்ட என்னை புத்திமானாக்கி காப்பாற்றுவது கடினமோ உந்தனுக்கு மேலும் ஸாலோகம் அளிக்கும் நீ உண்மை தத்துவமும் அளிப்பாயன்னே?

(குறிப்பு) பகவானை நினைப்பவர்களுக்கு அவன் உலகு நிச்சியமாய் கிடைக்கும். மேலும் பூலோக சுகத்தைப் பெரிதென மதிக்கும் எந்தனுக்கு அதை மாற்றியமைத்து புத்தியையளிப்பது உனக்குக் கடினமில்லை. ஸாலோகம் தந்துவிட்டால் மேல் அடைய

வேண்டியது திட்டமாய் எனக்குக் கிடைத்துவிடும். 28-வது பாராவில் பூஜை சங்கீதம், சம்பாஷணம், த்யானம் இவைகளால் அடையதக்கது சொல்லப்பட்டது. இங்கு 29-வது பாராவில் உன்னை பஜிப்போர்களுக்கு ஸாலோகம் நிச்சியம் அதாவது உன்னுடைய உலகத்தில் வஸித்தல். மேலும் உன்னுலகு வந்துவிட்டால் சதா உன் த்யானமே ஏற்படும். த்யானபலன் ஸாயுஜ்யமல்லவா?

ஸாயுஜ்யம் அதாவது தெய்வமயத்தை விசிஷ்டாத்வைதிகளும் இஸ்லாம் மதத்தவர்களும் த்வைதிகளும் கிருஸ்துவர்களும் ஒப்புக்கொள்வதில்லை. இவர்கள் கிட்டதட்ட தெய்வம் வேறு, சிருஷ்டிவேறு என்றும் சிருஷ்டிக்கும் தெய்வம் அன்யமென்றும் அவர்கள் சித்தாந்தம். இங்கு அத்வைதத்தில் தெய்வத்தின் தோற்றமே சகல பிரபஞ்சமும் சிருஷ்டியும் ஆதலால் ஜீவர்கள் தெய்வமயமே ஆகலாமென்ற சித்தாந்தம். உதாரணமாக ஓர் ஊரில் பிரபு ஒருவர் சகல சௌபாக்யத்தோடு வாழ்ந்துவந்தார். அவர் வாழ்கையின் இன்பமயத்தை அனுபவிக்ககோரும் ஒருவன் அவர் சமீபத்தில் (ஸாமீபம்) இருந்தாலும் அனுபவம் கிடைப்பதில்லை. அதேபோல் (ஸாலோகம்) அவனிருக்கு மிடத்திலிருந்தாலும் கிடைக்கிறதில்லை. அவன் போல் வேஷமிட்டாலும் (ஸரூபம்) கிடைக்கிறதில்லை. ஸாயுஜ்யம், அவனே நான், நானே அவனென்றால்தான், உணர்ச்சி முழுவதும் அனுபவிக்கமுடியும். ஆதலால் ஜீவர்கள் தனியேயிருந்து எவ்வித சுகத்தையும் அடைதல் முடியாது. பரமாத்மா ஐக்யம் (மோக்ஷம்) என்பதினாலேதான் நாம் அடையமுடியும். இன்னும் ஓர் உதாரணம் இந்திய ராஜ்யவாழ்வில் எடுத்துக்கொள்ளுவோம். நம் இந்தியா அன்யர்கள் ஆக்ஷி உட்பட்டதும் நமது ஜனங்கள் அன்யர்களை பரிபாலன கர்த்தர்களாக ஒப்புக்கொண்டார்கள். முதன் முதலில் வெள்ளையர்கள்கூட உட்கார்ந்தாலே போதுமென நினைத்தார்கள் (ஸாமீபம்). இரண்டாவதாக அவர்கள் நாட்டிற்கு போய் வந்தார்கள் (ஸாலோகம்) மூன்றாவதாக (ஸாரூபம்) அவர்கள் போல் வேஷந்தரித்தார்கள். இம் மூன்று அவஸ்தையாலும் நாம் ஒரு படிகூட முன்னேற முடியவில்லை. நாலாவதாக ஸாயுஜ்யம் அவர்கள் அம்சங்கள் எல்லாவற்றிலும் அதாவது அவர்கள் எப்படி சுயேச்சையை விரும்புகிறார்களோ, காப்பாற்றுகிறார்களோ, நினைக்கிறார்களோ அதேபோல் நாமும் அடைய நினைப்பதே இந்தியராஜ்ய வாழ்கையின்

உன்னத (இண்டிபெண்டன்ஸ்) என்ற சப்தமே நமக்கு ஆச்வாஸத்தைத் தருகிறது.

31 தத்துவமும் தருவாயன்றோ ஸர்வனே பூஜித்தால்
இத்திசையும் பரந்துளாய் நீ இச்சிறியேன் செய்வதென்னே
உத்தம விட்ணு தேட உலவா நமைந்தாயன்றோ
எத்தனை கரங்கள் வேண்டும் ஏழையேன் தொழவே வேண்டின்

ஸர்வ, எல்லாம் உள்ளவா! உன்னை பூஜிக்க தொடங்கினால் தத்துவமும் தருவாய் அல்லவா? மேலும் பூஜை செய்வதென்றால் நீ சிறியதோர் வஸ்துவா? எல்லா திக்குகளும் பரந்து நிறைந்திருக்கும் உன்னை இச்சிறியவன் எப்படி பூஜிக்க முடியும். உன்னைக் கண்டுவிட முடியுமென்று விட்ணு தேட அவராலேயே முடியவில்லை. ஆதலால் எத்தனை கைகள் வேண்டும் உன்னை தொழுவதற்கு

(குறிப்பு) நான்கு கைகள்கொண்ட விட்ணு, எந்த ரூபமும் எடுத்து முடிக்கவல்ல விட்ணு அவரின் கதியே அதுவானால் சாதாரணமான இச்சிறியேன், ஒருவித சக்தியுமில்லாதவன் உன்னைத் தொழுவதெப்படி? த்யானயோகமே என்னால் செய்யக் கூடியது என்று கூறவேண்டும். மேலும் த்யானம் செய்வதற்கு நினைத்தல் என்ற சக்தி யொன்றே போதுமானது. ஆதலால் என் மனதால் உன்னை த்யானம் செய்கிறேன். எனக்கு அருள்தா என் குறைகளை நீக்கி நீ ஆட்கொள்ளவேண்டும். எங்கும் பரந்துள உனை சிந்தனையினாலேயேதான் காணமுடியும்.

32 ஏழையேன் தொழவே வேண்டி எழுந்த விஷமதாலே
கோழையரு யெல்லோரும் கோடிகளிலோட கண்டு
பேழைபோல் நின் தொண்டையதில் பொருந்த செய்து நீயும்
வாழவே செய்தாயன்னே வானுடனிப்பு விதனையும்.

ஏழையாகிய நான் தொழுவதற்கு, (முன்பு அமிர்த பந்தனத்தில் விஷமும் வந்தது. விஷத்தைக் கண்டதும் எல்லோரும் பயந்தவர்களாய் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள ஒவ்வொரு கோடிகளிலும் ஓடினார்கள் நீ மட்டும் தைரியமாய் நின்றதோடல்லாமல் அவ்விஷத்தை உன் தொண்டையென்ற பெட்டியில் அமைத்துக் கொண்டுவிட்டனை அதினாலன்றோ வானும் இந்தப் பூமியும் வாழ்கின்றது. நானும் உன்னைத் தொழுகின்றேன்.)

33 வானுடனிப்புவிதனையும் வாழ்விக்கவேயன்றோ
தேனென விடமதை நீ தொண்டையதில் கொண்டாய்
ஊனெல்லா மெரிக்கவல்ல ஊழ் அக்கினி சான்றை
யானுமேன் தரிப்பதற்கு எனக்கூறும் செய்கையென்னே.

வானுலகு இந்த பூமி இவைகளை வாழ்விப்பதற்காக விஷத்தை தேன் எனக்கருதி உன் தொண்டையில் அமைத்துக் கொண்டாய் சரீர மெல்லாமெரிக்கும் சக்தியுள்ளது. ஊழ் கால நெருப்பை யொத்ததை, அணிவதற்கு நான் இருக்கிறேன் என்று கூறும் செய்கை என்ன ஆச்சரியம் தருகின்றது.

34 எனகூறும் செய்கை யென்னே என் பிறப்பு தீர்க்கவல்லாய்
மன மொன்றால் செய்கை யொன்று மதிக்கவல்ல தென்றால்
தனந்தரும் தேவர் சேவை தனிமையில் பெறுவதேனோ
உன் சேவை யொன்றே போதும் உத்தமருலகமெய்ய.

உன் செய்கை ஆச்சரியமானது, என்னுடைய பிறப்பை தீர்க்கவல்லாய். ஏதாவது ஓர் செய்கை மனதினால் மதிப்பிட்டுப் பார்த்தால் தேவர்களைத் தொழுது பணம் பெறுவதைக் காட்டிலும் உன் சேவை செய்வதினால் உத்தமர்கள் உலகம் கிடைக்கும் அதுவே மேல்.

(குறிப்பு) பணம் தருகிறேன் பாக்கியம் தருகிறேன் என்று கூறப்படும் சித்தாந்தங்களைக் காட்டிலும் உன் திருவடிசேவை யனுபவமே முக்தி தரவல்லது மனச்சாந்தி தரவல்லது. மேலும் தெய்வம் தொழல் என்பது கேவலம் உலக ஆசையை நிறைவேற்றிக் கொள்ள அல்ல. உலகாசையை தீர்ப்பதற்கு தெய்வ அருள் வேண்டும் என்ற கூற்றுக்கு அடிப்படையும் கிடையாது. உலக சிருஷ்டிக்குள்பட்ட ஜீவர்களுக்கு ஓர் மனச்சாந்தி கிடைக்குமானால் அதுவே போற்றத்தகுந்தது.

35 உத்தமருலகமெய்ய உன் துணிவு வேண்டுமெனில்
அத்துணிவு என்பக்கலில் அமைந்ததை யறிவேணனும்
எத்துணையு மில்லாதமை இப்பிரபஞ்ச ஊழிதனில்
உத்தம நினையேயன்றி ஊழிவெல்வார்யாவர்.

மனதினால் மேன்மையான உலகையடைய எண்ணுவோர்களுக்கு உள் துணிவு அதாவது தீர்மான முடிவு ஒன்று வேண்டும் அப்படிப்பட்ட துணிவு என் பக்கலிலிருக்கக் காண்கிறேன் மேலும் இப்பிரபஞ்சம் ஊழிகால நாசமதிலே எல்லா ஜீவர்களுக்கும் ஓர் விதத்துணையுமில்லாமல் போய்விடும். அப்படிப்பட்ட காலத்தும் இந்தஊழியை ஜயிப்பது நினையன்றி வேறொருவருமிருக்கமாட்டார்.

(குறிப்பு) நல்ல காரியமென ஒன்றை தீர்மானிக்கவேண்டும். தீர்மானித்ததை அடைய முயலவேண்டும். முயற்சி ஆரம்பவித்துவிட்டு முயலும் காரியம் நல்லதோ, தீயதோ என்ற சம்சியம் கொள்ளல் நல்லதன்று அப்படி சம்சியமேற்பட்டால் பாதிவழியில் நின்று அவஸ்தைப்படவேண்டியதுதான். இங்கு பகவத் பக்தியினால் பகவானின் உலகையடையாலாம் என்ற எண்ணங்கொண்டு அம்மார்க்கத்தில் இறங்கிவிட்டேன். இனி திரும்பிப் போவதில்லை அதற்கான துணிவும் கொண்டுளேன் ஊழிகாலத்தில் உன்னையே நாசமூர்த்தி யென சொல்லப்படுகிறது. நாசமூர்த்தியான உன்னுலது நாசம்தான் என நானறிவேன். நானும் அந்நாசஉலகையே அடையவிரும்புகிறேன். உலகத்தில் ஆக்கலில் ஓர் இன்பமுண்டென்று சொல்லப்படுவதுண்டு ஆக்கியவஸ்துக்கள் அழிக்கப்படுமென்றும் அழிவதுதான் இயல்பென உணர்ந்தார்கள், அழிவதிலேயே ஆனந்தம்கொள்வார்கள். நீ ஸம்ஹார மூர்த்தி உன்னை அழிப்பவனென்றும், அழிப்பதில் ஆசக்தியுடையவனென்றும் சித்திரித்துவிட்டு, அழிப்பதில், அழிவதை அழித்துவிட்டு, நீ அழிவினின்றும் விலகி நிற்கின்றாயல்லவா. ஆகவே அழியா நின்னுடன் கலந்தால்தான் என்னை அழியாதிருக்கச்செய்யும். ஆகவே நான் இந்நாசத்திலேயே நானிருக்க காண்கின்றேன். அதுவே எனக்கு இப்போது சாந்தி தருகிறது. அச்சாந்தியே மேலான சாந்தி. இச்சாந்தியே எனக்குப் போதுமானதென துணிவும் கொண்டுளேன்.

36 ஊழிவெல்வார் யாவர் உமாபதி நினையன்றி
சூழும் துன்பமெல்லாம் தொலைத்திடவல்லாய் நீயும்
வாழ்வில் வேண்டுவதை நீ வகையறிந்தளிப்பாயன்றோ
தாழ்வுடன் நினைப்பணிதல் சர்வா ஒன்றேபோதும்.

உமாபதி உன்னையில்லாமல் யார் ஊழிக்காலம் வெல்வார் எந்த துன்பங்கள்சூழ்ந்தபோதிலும் அவைகளைவிலக்க உன்னால்முடியும் மேலும் பக்தர்களாகிய எங்கள் வாழ்விற்கு நீ தருவது. அதை முன்னறிந்தே தருகின்றாய். அப்படி எங்கள் தேவையறிந்து தரும் உன்னை பணிதல் ஒன்றே எங்கு நிறைந்தவா எனக்குப்போதும்.

உலகப்பிரயத்னத்தில் நல்லது கெட்டதுவரும். இது சுபாவிகம். நல்லதைமட்டும் கிரகித்துக்கொண்டு கெட்டவைகளை ஒப்புக்கொள்ளமாட்டேனென்றால் கெட்டவைகளுக்கும் ஓர்போக்குவேண்டுமே. அமிர்தபந்தனத்தின்போது விஷம் ஊழித்தீ இவைபோன்ற கெட்டவைகளை நீ பெற்றுக்கொண்டு அடக்கிக்கொண்டாய். மற்றத் தேவர்களோ நல்லவைகளை பெற்றுக்கொண்டு தீ விஷமென்றால் ஓட்டமெடுத்தார்கள். ஆகவே பிரயத்னமார்க்கத்தில் நேருந் துன்பங்களை சகிக்கவல்லவன் நீயேயன்றோ. மேலும் மாந்தர், தேவர், அசுரர் இவர்கள் வாழ்விற்கு வேண்டுவதையறிந்து லக்ஷ்மியை விஷ்ணுவிற்கும் இதுபோல அமிர்தம் முதலியவைகளை சேரவேண்டியவர்களுக்கும் சேர்ப்பிக்கச்செய்து ஓர் குடும்பத் தலைவன் கஷ்டங்களை தான் பொறுத்துக்கொண்டு குடும்ப நபர்களுக்கு நன்மையை செய்துகொண்டிருப்பதுபோல நீயும் நடந்துகொண்டாய் ஆதலால் நீயேஉலகநாயகனுனாய். உன்னைப் பணிதலென்பதுதான் ஜீவர்களுக்கு நல்லது என்பதை உலகம் உணர்ந்திருக்கிறது. ஆகவேபணிகின்றது. நானும் பணிகின்றேன் அதுவொன்றே எனக்கு போதுமானது. அதிலேயே என் மனம் திருப்திகொண்டுவிட்டது. அதுவே எனக்கு மனச்சாந்தி தருகின்றது. எல்லாம் அழிந்துவிடக்கூடியது. நம் உலக வாழ்வு ஓர் விடைகூடாயில்லை என்ற உணர்ச்சியோடுகூடி உலக அமைப்பில் கலந்து கொள்ளும்மட்டும் கலந்துகொண்டு வீண் ஆசாபாசங்களுக்கு தன்னை ஆளாக்கிக்கொள்ளாமல் உலக ஜீவியத்தை நடத்திக்கொண்டு போவதே மேலென்ற உணர்ச்சியை யடைவதே ஜீவர்களுக்கு மேன்மையையும், மனச்சாந்தியையும் தருமென்பது குறிப்புரையாகும்.

36 ஸர்வா ஒன்றே போதும் ஸாதனை பெறுவதற்கு
நிர்மல மனத்தோடிங்கு நின் துதி செயலேவேண்டும்
திருமந்திர மொன்றினாலே திருவருள் கிட்டுமன்றோ
அருப் தந்திரம் வேண்டாம் அருமை ஸேவை தனக்கு.

ஜயமடைவதற்கு ஸர்வா, 'ஒன்றே போதும். அதாவது சுத்தமான மனத்தோடு கடவுளாகிய உன் துதி செய்தலே. அப்படி உன்னுடைய அழகிய நாமாவின் மந்திரங்களே நல்ல அருள்சுரக்கும் இதைவிட வேறு தந்திரம் ஒன்றும் வேண்டாம் ஸேவை செய்வதற்கு

37 அரும் ஸேவை தனக்கு அமிர்தமும் கிடைத்ததேபோல்
பெருமைபெறு வேதந்தனை பிழிந்து பிழிந்து நோக்கி
சுருதிப் பொருளாமந்த சிவா சிவா என்ற மந்திரம்
உருதியுடை மாந்தருக்கு உரிதாயிற்றன்றோ.

தேவர்களும், அஸுரர்களும் ஸேவை செய்ததினால் அமிர்தம் கிடைத்தது. வேதத்தை ஊன்றிப் படித்துபார்த்தால் 'சிவா' என்னும் மந்திரந்தான் வேதப்பொருளென்றும் மாந்தர்களுக்கு அம் மந்திரமே ஸகல ஸம்பத்தும் தருவன என்றும் உரிதாயிற்று.

38 உரியதாயிற்றன்றோ உம்பர்கள் உவப்பதற்கு
பெரிதாம் பெருங்கடலும் பேரிரை திரைகளோடு
அரிதாம் மதியைக் கண்டால் அலங்கி அழகுறுவதேபோல்
விரிவாம் நின்பக்தர்கள் விக்ஞானம் பெறுவாறன்றோ.

தேவர்கள் சந்தோஷிக்க உன்நாமம் அவர்கள் உரியதாயிற்று அலைகளோடுகூடிய பெரிய கடல் சந்திரனைக்கண்டால் கெம்பீரமாக மோதுதல்கொண்டு அழகையடைவதேபோல் நின் பக்தர்கள் உன் நாமாவளியிலே அதிக சந்தோஷத்தை யடைகின்றார்கள்.

39 விக்ஞானம் பெறுவாறன்றோ வீரியனுனை நினைந்தால்
அக்ஞானமது நீங்கி அகமனதும் அன்புபெற்று
எக்காலமும் சுகந்தரும் எழில் செங்கோலதினால்
அக்காலமதுபோலிந்த ஆனந்தமும் பெருகுமன்றே.

சர்வ வீர்யவானான உனை பஜிப்பவர்களுக்கு நல்ல ஞானமுண்டாகும். அக்ஞானம் நீங்கி மனது அன்பைப் பெறும். நீயே மனதிலிருந்து பரிபாலனம் செய்வதால் சுகம், ஆனந்தம் இவைகள் காலாகாலத்தில் மனது பெறுகின்றது.

குறிப்பு:— மனதின்கண் உன் பக்தியும், உன் பரிபாலனையும் உண்டானால் அன்பு, சுகம், ஆனந்தம் இவைகள் மனதினிடம் அமைந்திருக்கும். ஆதலால் உன் நாம ஸ்மரணையே எனக்கு நன்மை தரத்தக்கது.

40 ஆனந்தம் பெருகுமன்னே அபரிமித பயிர் விளைந்தால்
தானறி சக்தியதினல் தன் மன பக்தியதினல்
ஆனதொரு நிலை பெரிதாம் அரிஞர் கவலை தீர்க்கும்
ஏனினி கவலை வேண்டும் என் பக்தி பலித்துவிட்டால்

உலகத்தில் பயிர் விளைந்தால் ஆனந்தம் உண்டாகும். தன் மன பக்தி அதனல் ஏற்படும் தானறியும் சக்தி இவைகளால் ஏற்படும் நிலை பெரிதேயாகும். புத்திசாலிகளின் கவலையும் நீங்கும். இப்படி நான் செய்த பக்தி பலித்துவிட்டால் பலன்பெற்றுவிட்டால் எனக்கு கவலையினி கிடையாது.

41 என்பக்தி பலித்துவிட்டால் எப்பொருளும் நான் வேண்டேன்
நன்மை தருமென்றெந்த நானிலப்பொருளும் வேண்டேன்
வன்மை தந்ததுவும் வளராசை தனைபெருக்கும்
பன்மையும் நான் வேண்டுவது பக்தியுடை த்யானமேயாம்.

பக்தி பலனடைந்தால் எப்பொருளும் எனக்கு வேண்டாம். மேலும் நன்மையை தருமென்றாலும் அந்தப்பொருளும் நான் வேண்டேன். ஒருவேளை அந்தப்பொருளை நானடைந்தால் பலம் பெற்று ஆசையை உலகத்தில் வளர்க்கும், ஆகையால் நான்வேண்டுவதெல்லாம் உலகாசை பொருளல்ல. உன் த்யானம்தான்.

42 பக்தியுடை த்யானமேதாம் பகரொணு இன்பம்தரும்
சக்தியுடை இந்திரியங்கள் சர்வதா காற்றுநிற்கும்
முக்தி பலிக்கவல்லாய் முடிவுமென்பதில்லாய்
பக்தனுமென்மனதில் பார்வதியுடனமர்வாய் நீயும்.

எனக்கு இன்பதரவல்லது பக்திபோடுகூடிய த்யானந்தான். அப்படி என்னல் செய்யப்படும் த்யானமே என் இந்திரியங்கள் எவ்வளவு சக்திபெற்றிருப்பினும் என் ஆக்ஞைக்கு அடங்கிநிற்கும் முக்திதரும் சக்தியுடையோய்! முடிவு இல்லாதவனே ! பக்தனுகிய என் மனதில் பார்வதிதேவியோடு அமர்ந்துகொள்.

குறிப்பு:– பார்வதியைவிட்டுப்பிரியாத அர்த்தநாரீசுவரன் நீ. நான் உன்னை என் மனதில் பதிந்துகொள்ளென்றால் பார்வதியும் நீயுமாக என் மனதிலமர்ந்துகொள் என்றுதான் கூப்பிடுகிறேன்.

ஆகவே அர்த்தநாரீசுவரனை நீ என்மனதில் எப்போதும் தோன்ற வேண்டும் என்று கருத்து, மேலும் சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இம்மூன்று தொழிலையும் நடத்தும் கடவுள் நீ. சிருஷ்டியைகாண் பிக்க பார்வதியுடனிருக்கிறாய். ஸ்திதி என்றபொருளை உணர்த்த அர்த்தநாரியாய் உலகஸம்ஸாரத்தை நடத்திக்காட்டுகிறாய். ஸம்ஹார மூர்த்தியென உன்னைக் கொண்டாடுபவர்களுக்குத்தகுந்தபடி உன் வாஸஸ்தலம் இவைகள் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

43 பார்வதியுடனமர்வாய் நீயும் பக்தியுடை என்மனமதிலே
ஆர்வமுடன் ஆசைதீர ஆசாகோசமாமந்த
நேரில்லா செய்கைதந்து நினைக்கும் விஷயங்கள் தனை
போர்செய்து வெல்வதற்கு போதிய யிடமும்காண்பாய்.

பக்தியுடன்கூடிய என் மனதிலே பார்வதிதேவியோடு அமர்ந்துகொண்டு உன் கௌரவம் ஆசைகளை தீர்த்துக்கொள். அப்படிசெய்யும்போது என் மனதில் நினைக்கும் ஆசைமுதலியதும் அதைபின்பற்றியதுமான நேரில்லா செய்கைகளோடு எனக்காக போர்செய்துவெல்வதற்கு நல்லதோரிடமும் காண்பாய்.

குறிப்பு:— என் மனது ஆசாபாசங்களான, முறை கேடான மார்க்கங்களில்போகின்றது. அதை தடுக்க சக்தியற்ற வன் நான். ஆனால் பக்திபூர்வமாக உன்னை மனதிலிருத்திக்கொண்டு விட்டேன். நீயும் என் மனமதிலமர்ந்துவிட்டாய். இனிமேல் நீயே என் மனதில்தோன்றும் ஆசாபாசங்களை போக்குவதற்கு போர் செய்யவேண்டும். அப்படி போர்செய்து வெற்றிகொள்வதற்கு போதிய ஸ்தானமுமிருக்கிறது. போதிய ஸ்தானமும் உண்டு என்று சொல்லக்காரணம் ஆசாபாசங்களை நானும் தொலைக்க நருது கிறேன். அச்சத்துருவை தொலைக்க என்னால் முடியாதபடி அவ் வளவு பலங்கொண்டதாயிருக்கிறது என்னுடன் நீயும் கலந்து கொண்டால் சீக்கிரம் வெற்றிகொள்ளலாம். ஆதலால் வெற்றிக் குறிய ஸ்தானமுமிருக்கிறது என கூறப்பட்டது.

44 போதிய யிடமும்காண்பாய் புண்ய நீ வஸிப்பதற்கு
ஆதியந்தமில்லாய் ஆரண்யவாஸஞ்செய்வாய்
நீதியானீயிங்கிருந்தால் நிர்மலமனமுமாகும்
ஜாதியாம் சிங்கம் நின்னின் தனிக்குகை இதுவேயன்றோ.

# லக்ஷ்மி, நாராயணன்

## (ஆசைத்துன்பம்)

---

பகல் 12-மணி சமயம் 1080-ம்ளு தை-மீ 13-உ பண்ணை சுப்பய்யர் வீட்டில் அவர் பெண் லக்ஷ்மிக்கும் மேலப்பண்ணை ராமய்யர் பிள்ளை நாராயணனுக்கும் கல்யாணம், நிரம்பகாலமாக இக்கிராமத்தில் இரண்டு பண்ணையார் குடும்பத்திற்கும் சம்பந்த எற்படாமல் பலகாரணங்களால் தடைபட்டு வந்துக்கொண்டிருந்தது. பொருத்தமான குழந்தைகள் கல்யாண வயதில் இருக்கும். ஆனால் ஜோஸியர்கள் ஜாதகத்தை பொருந்தவில்லை என்பார்கள். இப்படி பலகாலம் தள்ளினாலும் எதோ லக்ஷ்மீபதி கிருபையால் இக்குடும்ப மிரண்டும் பரஸ்பரம் சம்பந்தம் செய்துகொள்ள ஓர் சந்தர்ப்பமேற் பட்டதுபற்றி அவ்வூரில் எல்லோருக்கும் சந்தோஷம். கேட்க வேண்டுமா லக்ஷ்மீபுரத்தில் இரண்டு பண்ணைகளும் சம்பந்தத் தாலிணைக்கப்படுகின்றார்களென்றால், பக்கத்து கிராமத்திலிருக்கும் சில துக்கடா பண்ணையார்களும் இந்த கல்யாணத்தைபற்றி பேசி கொண்டிருந்தார்கள். எதாவது ஒரு விதத்தினால் இரண்டில் ஒரு பண்ணை வீட்டில் இவர்களுக்கு சினேகமிருந்தது. தை-மீ 13-உ பெரிய தெருவில் பண்ணை சுப்பய்யர் வீட்டில் எங்கே பார்த்தாலும் விருந்தாளிகள், தமாஷ் பேச்சு! வேடிக்கை பேச்சு!! மதுரை புட்பவனம் மேளம். ஜமாய்க்கிறான். ஓர் பக்கத்தில் பிராமண போஜனம் நடந்துகொண்டிருக்கிறது. எல்லோருக்கும் வெற்றிலை பாக்கு, சந்தனம் முதலிய உபசாரம். ஸர்வத்திராளுக்கும் இட்டலி, பொங்கல் சகிதம் காப்பி உபசாரம். சுப்பய்யர் தனதுக்கிருஹத்திற்கு வந்திருக்கும் எல்லா விருந்தாளிகளையும் உபசரித்து வரவேற்கிறார். ராமய்யர் புன்னகையோடுகூடி கடவுளனுக்ரஹத்தால் இச்சம்பந்தம் எற்பட்டதைப்பற்றி மகிழ்கிறார். வந்தவர்கள் எல்லோரும் பந்தலில் அவரவர்கள் இடத்தில் உட்கார்ந்தவண்ணம் கல்யாண சம்பந்தமான வைதிக கைங்கிர்யம் நடந்துகொண்டிருககிறதை கவனித்து கொண்டிருக்கிறார்கள். மங்கல்யதாரண சமயம். வாத்தியம் கொவிக்கும் சப்தம் கேட்கிறது. எல்லோரும் தம்பதிகளை ஆசிர்வதிக்கிறார்கள். ஜயாவிஜீபவாஎன்ற சப்தத்தோடு மங்களம் வாத்தியக்

தோடு நமது கதாநாயகனை நாராயணனுக்தும், லக்ஷ்மீக்கும் கல்யாணம் நடந்த வைபவத்தை உங்களுக்கு 36-வருடம் கழிந்து தான் நான் எழுத முடிந்ததைபற்றி கதாவாசகர்களிடம் மன்னிப்பு கேட்டுகொண்டு இக்கதையை துடங்குகின்றேன். இக்கதையானது கேவலம் நவீன நாவலல்ல உலகியியலில் நடந்ததோர் சம்பவம். எத்தனையோ சுப, அசுப, சௌக்கிய, அசௌக்கிய காரியங்களை நடத்தி கொண்டுபோகும் ஜீவர்களுடைய வாழ்க்கைக்கு ஓர் நல்வாழ்க்கையைத்தர ஓர் கைகாட்டி மரம்போல் இருக்க இக்கதையை எழுதுகின்றேன் அன்பர்கள் படிப்பார்களாக. உண்மையான கதாநாயகர் யாரென்று சிந்திக்க புரப்படாமல் கதைபோக்கால் கிடைக்கும் நன்மையை மட்டும் அடையவேண்டுமென்று வாசகர்களை கேட்டுக் கொண்டு மேல்சம்பவத்தை குறிப்பிடுகின்றேன்.

பிராமண குடும்ப சம்பிரதயப்படி 51 பக்ஷணங்களும் அதாவது 51 வித பக்ஷணங்களில் தினுசுக்கு 100 வீதம் ஒழுங்காக பிள்ளை வீட்டார்கள் பெற்றுக்கொண்டார்கள். கன்யாதான சமயத்தில் 300 பவன்கள் பிள்ளை வீட்டாரிடம் கொடுக்கப்பட்டது ரூ. 3000 வெள்ளி சாமான்கள். தங்க பஞ்சபாத்திரம், பவன் 30-இடைகொண்ட தங்கதட்டு, இவைகளெல்லாம் பெண் வீட்டாரிடம் நாகரீக முறையில் பெற்றுக்கொள்ளப்பட்டன. இவைகளெல்லாம் கிராமசம்பிரதாயத்தில் ஜாஸ்தியாக தோன்றினதே தவிர தஞ்சாவூரிலிருந்து வந்திருந்த மாது ஒருத்தி இந்த சீர்சிலத்திகளை பார்த்துவிட்டு பக்ஷண வகையருக்கள் அதிகமே தவிர மற்ற எதிர்ஜாமீனே வெள்ளி தங்க சாமான்கள் பிள்ளை வீட்டாருக்கு கொடுக்கப்பட்டது சாதாரணந்தான் என்று சொன்னதை நாராயணன் தாயார் கேட்டதும் அவளுக்கு சம்பந்தத்தின் தாழ்வை உணர்ந்துகொண்டு பிள்ளைக்கு திரகூதி சமயத்தில் தஞ்சாவூர் முறையை அனுசரிக்கவேண்டுமென்று முடிவுசெய்துகொண்டாள். பக்ஷண தினுசுகளெல்லாம் கிருமம் முழுவதும் கிருமப்பெண்டுகளால் வீடுவீடாக கொடுக்கப்பட்டது. நாராயணன் தாயாருக்கு தஞ்சா ஊரம்மா கொடுத்த நஞ்சினாலே மனோவேதனை ஜாஸ்தியாகி மண்டையிடி எற்பட்டு கலியாணம் கழிந்த வீடாக தன்வீட்டை ஆக்கி கொள்ளாமல் எதோ ஓர் அசுபம் எற்பட்ட வீடுபோல் சோபிக்க செய்தாள். ஐயோ ஆசையே பேராசையே நீ எப்படி நல்லோரிடம்

புகுந்து உன்னை அவர்களுக்கு அடிமையாக்கி அவர்களை கஷ்டப் படுத்துகின்றாய்! நாராயணன் தாயாரான ருக்மணியம்மாள் குடும்பத் தால் பெரியவளும், பழக்கத்தால் நல்ல சுபாவமுடையவளாயுமிருந் தவளை, தஞ்சாவூரம்மா சொல்வதற்கு முன்னால் தனக்கு பெண் வீட்டார் செய்வது எவ்வளவு பெரிது என்று நினைத்திருந்தது மல்லாமல் பெண் வீட்டார்களை எவ்வளவோ மதிப்போடு கூடி பார்த்திருந்த மனமெல்லாம் பறந்துபோய்விட்டதே! ஒரே ஊரில் பழகி ஒரே நடையுடை பாவனைகள்கொண்ட சம்பந்தி வீட்டிற்கு எதற்காக தஞ்சாவூரம்மா வந்துசேர்ந்தாள்? வந்தால்தான் என்ன அவளும் அவர்கள் ஊர் சம்பிரதாயத்தைத்தானே சொன்னாள், இதில் என்ன தவறு இருக்கின்றது? நஞ்சு இருக்கின்றது அந்த ஊர் பக்கம் அப்படி, இந்த ஊர்பக்கம் இப்படி என்று தொலைத்துவிடலா காதா, ருக்மணி அம்மாள்? மனம்நிரம்ப கஷ்டமடைந்து திபகூதி வரட்டும் பார்த்துக்கொள்ளுகிறேன் என்று சங்கல்பங்கொள்ள வேண்டும். ஓ பேராசை நஞ்சே! உனக்கு ஸ்வரூபம் இல்லையா? அரூபியா ஓர்முடிவு என்பதில்லையா கல்யாணம் கழிந்து 7 நாட்கள் ஆகவில்லையே! ருக்மணியம்மாள் உடம்பு பாதியாய்விட்டதே! இது தானா கல்யாண சாப்பாட்டின் பலன்? மண்டையிடி என்றால் மருந்து போடலாம் மனையிடிக்கு என்னசெய்வது? கல்யாணம் கழிந்தது முதல் ருக்மணி அம்மாளுக்கு உடம்பு சௌக்யமில்லையென்ற பெயர் கிராமமுழுவதும் பரவிவிட்டது. அவ்வூர் ஜோஸியர்களில் இருவரில் ஒருவரான கிருஷ்ண ஜோஸியர்மட்டும் ருக்மணி அம்மாளின் உடம்பு அசௌக்கியத்தை லக்ஷ்மீ நாராயணன் இவர்களின் பொருத்தம் சரியாகயில்லையென்று சொல்லி ஒப்பிட பின்னடைய வில்லை.

(2)

படுக்கையறை: உங்களைத்தானே, தூக்கம் வந்துவிட்டதா அல்லது தூங்கியே போய்விட்டீர்களா? கல்யாணத்திற்கு தஞ்சாவூரி லிருந்து ஸேல்டாக்ஸ் (Sale Tax) இனிஸ்பக்டர் மனைவி வந்திருந் தாளே, அவள் என்ன சொன்னாள்? உங்களுக்கு தெரியுமோ நம் மாத்து கல்யாணத்தைபற்றி என்றாள் ருக்மணி அம்மாள்.

ஶ்ரீமய்யர்: என்ன சொன்னாள் இதுமாதிரியாக பரீக்ஷை வகைகளேது தஞ்சாவூர் பக்கம் குண்டுசட்டியிலே பாயஸம்வைத்து பரிமாறப்பட்ட ஊர் அது. நம்முடைய வாரிலே வத்திய பிரதமனைப் பார்த்து பிரமித்து போயிருப்பாள்.

ருக்மணி அம்மாள்: அப்படியொன்றும் பிரமித்துபோய்விடவில்லை. நீங்கள்தான் மெச்சிக்கொள்ளவேண்டும் உங்கசம்பந்தி ஆத்தை. தஞ்சாவூர் பக்கம் நமது பிள்ளைக்கு பெண்ணெடுத்திருந்தால் ரூ. 10,000-த்துக்குமேல் எதிர்ஜாமீன் தருவாளாம் ரூ. 10,000-த்துக்கு தங்கப், வெள்ளி, பித்தளை சாமான்கள், 300 பவன் தந்ததற்கு நீங்களே கல்யாண பூஷணம் ரூ. 3000 த்துக்கு போட்டிருக்கயளே நமக்கு என்னலாபம்? நீங்கள்தான் இந்த சம்பந்தத்தை ஒசத்திக்கணும்.

ஶ்ரீமய்யர்: ரூ. 3000 நாம் பூஷணம்போட்டால் நம்பாத்துக்கு தானேயடி அது. அதுமட்டிலுமா ரூ. 5000-த்துக்கு நகைபோட்டு அனுப்புவானேன் நாளைக்கு, போதும்போதும் தஞ்சாவூர் சமாசாரம். பெண்ணைகொடுப்பான் பிடுங்கவருவான். நமது பக்கத்திலே நாம் பெண் வீட்டிலிருந்து வாங்கிக்கொண்டிருக்கலாம். அவர்களும் அருமை பெருமை தெரிந்து செய்துகொண்டேயிருப்பார்கள்.

ருக்மணி அம்மாள்: என்னத்தை வேணுமானாலும் சொல்லுங்கோ திரக்ஷியை யொட்டியாவது வெள்ளி பாத்திரங்கள் ஜாஸ்தியாக் வாங்கவேண்டும். எதிர்ஜாமீன் ரூ. 10,000 இல்லாவிட்டாலும் ரூ. 5000 மாவது தரட்டுமே.

ஶ்ரீமய்யர்: அடிபைத்தியமே! நானென்ன ஜீவேஜு இல்லாதவனு, என் பிள்ளைக்குப் பணம்கேட்பதற்கு? அவனும் ஓர் கிரஹஸ்தன். நானும் ஓர் கிரஹஸ்தன் ஏதோ ஈசுவர சங்கல்பத்தால் நமக்குள் சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. அதினுல் சந்தோஷம் நட்பு ஜாஸ்தியாக வேண்டுமே தவிர மனக்கசப்பை உண்டாக்கி தானம் தந்த புண்ணியவான் வீட்டை தரைமட்டமாக்க நினையாதே.

ருக்மணி அம்மாள்: நன்றாயிருக்கு தானமாம், தரைமட்டமாம் யார் தானம்வாங்கினு? அப்படிக்கென்ன நமக்குக் குறைந்துவிட்டது? தானம் தந்ததை வேணுமானல் திரும்ப வாங்கிக்கொள்ளட்டுமே.

ஸ்ரீமய்யர்: போடீ அவிவேகம், மறுபடியும் உன்னிடம் தானம் வாங்க சுப்பய்யர் வீட்டுக்காரர்கள் தஞ்சாவூரார் அல்ல. நீ மறு படியும் ஏதாவது கேட்டால் தருவானே தவிர வேறு பேசமாட்டான். நாம்தான் நம் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும்.

ருக்மணி அம்மாள்: என்ன வேணுமானுல் சொல்லுங்கோ நாம்பாத்து நகையை பூட்டிக்கொண்டு சுப்பய்யர் பெண் இலங்க நான் சம்மதிக்கமாட்டேன். போட்ட நகைக்காவது ரூபாயை திரக்ஷி வரும்போது வாங்கவேணும்.

ஸ்ரீமய்யர்: சரிசரி திரக்ஷி வரும்போது பார்த்துக்கொள்வோம். தூக்கம்வருகின்றது என்று தூங்கிவிட்டார். ஸ்ரீமய்யருக்கு தன் ஸம்ஸாரம் சொல்வதில் யாதொரு சிரத்தையுங் கிடையாது. மேலும் ஸ்திரீ ஜாதிகளைப் பற்றியே அவருக்கு "அவர்கள் எப்போதும் குற்றங்குறை சொல்லித்திரிவார்கள்" என்ற அபிப்பிராயம். ருக்மணி அம்மாளுக்கு மனதில் எவ்வளவு ஆத்திரம், அதையனுசரித்த பேச்சு இவைகளெல்லாம், ஸ்ரீமய்யர், மனதில் கொள்ளவேயில்லை. ஆதலால் தான் சுகமே நித்திரை போய்விட்டார். ருக்மணியம்மாள், பெண் ணுக்கு வயது 12 நிரம்பியாச்சுது இன்னமும் ரெதுவாகவில்லையே, திரக்ஷியை முன்னிட்டுத்தானே, வெள்ளி தங்க பாத்திரங்கள் அதிகம் கேட்கலாம் என்ற எண்ணம். மேலும் தன்பர்த்தா, தன் எண்ணம்போல் ரொக்கபணம் கேட்கமாட்டாரே என்ற விசாரம். கடைசியாக ஓர் யோசனை பண்ணினுள். ரொக்கப்பணம் கேட் படோ கௌரவமில்லை நமது வீட்டில்போட்ட நகையை திரும்ப கேட்பது மரியாதைக்கு நிரம்ப கேவலம்வரும். இப்போது தஞ்சாவூர் பக்கம் வயிர அட்டிகை என்றதோர் ஆபரணம் புதிதாக உலாவு கின்றது. சுமார் ரூ. 15,000-த்துக்கு குறைந்துவாங்க முடியாது. நாமும் கௌரவமாக அவர்கள் பெண்ணுக்கு வாங்கிபோட சொல்லி விடலாம். சம்பந்தி வீட்டார் நம்மை மரியாதையாகத்தான் மதிப் பார்கள். அதுவே சரி என்று ஓர் தீர்மானத்திற்கு வந்தாள். தான் சொல்லவேண்டியதுதான் நாம்தம் அவர்கள் அப்படியே கேட்டுவிடு வார்கள் என்றே எண்ணங்கொண்டாள். ஒருவாறு மனதை திருப்தி பண்ணிக்கொண்டு தூங்க ஆரம்பித்தாள். தூக்கம்வரவில்லை மறு படியும். ஏனென்றுல் பேராசையென்ற கள்வன் மனதில் புகுந்து

விட்டால் எங்கே தூங்குவது. இப்படிபட்ட கள்ளன் உட்புகவொட்டாமல் தடுக்க அநேக பிரயத்னங்கள் செய்வதுபோலிருக்கும் உள்ளிருக்கும் அந்திராத்மா. ஓ கொடிய பேராசையே! உனக்கு எல்லை என்பது கிடையாதா? உலகத்தில் எத்தனை சக்கரவர்த்திகளை தொலைத்தாய், எத்தனை சாதாரண குடும்பங்களை நாசம்செய்தாய் நீ வந்து புகுந்ததும் உன்னை "தூ" என்ற தள்ளாத தபோதனர்கள் ரிஷிகள்கூட எவ்வளவு கஷ்டத்தையும் அவமரியாதையும் அடைந்திருக்கின்றார்கள் அப்படியிருக்க கேவலம் அபலையான ருக்மணியம்மாளை பிடித்துக்கொண்டால் நீ சும்மா விடுவாயா இரவு ருக்மணி அம்மாள் தன் சம்பந்த வீட்டுக்காரர்கள் வயிர அட்டிகை வாங்க மாட்டேனென்று சொன்னதுபோலவும் தன் பிள்ளைக்கு தஞ்சாவூர் அம்மாமி மூலம் இரண்டாந்தாரமாக ஓர் பெண் கல்யாணமானது போலவும் துர்சுவப்னம் கண்டு காலையில் பதறி எழுந்தாள்.

2 வருடங்கள் கழிந்தன லக்ஷ்மி ரெதுவானுளென்ற சோபனம் ருக்மணி அம்மாளுக்கு சொல்லப்பட்டது. நிரம்ப நாளாக தன் மனதை வருத்திக்கொண்டிருக்கும் விஷயத்திற்கு ஓர் முடிவு காலம் வந்துவிட்டதை யுணர்ந்தாள், தென்னாடு சம்பிரதாயப்படி நாலுநாட்கள் பிராமண சந்தர்ப்பணையோடு ரெதுசோபனம் கொண்டாடப்பட்டது. நாலாம் நாள் பூப்பல்லக்கில் பட்டணபிரவேசம் நடந்தது. லக்ஷ்மீ தன் மாமியான ருக்மணி அம்மாளை சேவிக்க வந்த சமயத்து "எல்லா கர்நாடக நகையாயிருக்கே நீ போட்டுக் கொண்டிருப்பது" வயிரத்தோடும் வயிர அட்டியனும் திரக்ஷிக்கு முன்னாலே பண்ணிப்போட சொல்லு என்று மாமி மருகியிடம் மந்திரபோதினுள். இப்போது லக்ஷ்மிக்கு 14 வயது மாமி சொல்வதை நன்றாக தெரிந்துகொண்டாள். லக்ஷ்மிக்கும் மாமி சொன்ன வயிர அட்டிகையும் வயிரத்தோடும் கண்கள்முன்னே தோன்றின. அப்பாவிடம் சொல்லி வயிரத்தோடு வாங்கித்தர சொல்லணும் பிறகு மதராஸ் மாமாவிற்கு எழுதி வயிர அட்டிகை வரவழைக்க சொல்லணும் என எண்ணினுள். மேலும் ருக்மணி அம்மாள் லக்ஷ்மியைப் பார்த்து லக்ஷ்மீ நீ சமத்தாயிருக்கிறாய் அதுபோல் எல்லாக் காரியமும் செய்துக்கணும் அப்பா அம்மாவோடு சொல்லி எப்படியாவது அட்டிகை தோடு வயிரத்திலே போடச்சொல்லு என்றாள். பட்டணப்பிரவேசம் வீடுவந்து இறங்கிற்று. எல்லோரும் குழந்தை

லக்ஷ்மியை ஆசிர்வதித்தார்கள். சிலபேர்கள் சோபனமாக்கும் என்று சுப்பய்யரிடம் கேட்டார்கள் இன்னும் சிலபேர்கள் "பேரன் பிறந்தானுக்கும் என்றூர்கள்". லக்ஷ்மிக்கு தூக்கம் கண்ணில் வழி யறது தூங்கசொல்லு, குழந்தையை என்றூர் சுப்பய்யர் மறுநாள், அந்நாள், பல்லக்கு வீடுவந்து இறங்கவும் ஹாரத்தி எடுக்கப்பட்டு குழந்தை லக்ஷ்மீ மங்களகரமாக வீட்டில் வரவேற்கப்பட்டாள். குழந்தை லக்ஷ்மீயிடம் மாமியார் ருக்மணி அம்மாள் போட்ட வயிர அட்டிகை விதை துளிர்க்கவில்லை என்பதை ருக்மணி அம்மாள் அன்றே கண்டுகொண்டாள். அன்று பலவிதமான சித்ரான்னங் களுடன் சாப்பாடு நடந்தது. எவ்வளவோ தமாஷ் பேச்சுக்கள். சிறு பெண்டுகள் முதல் நகைசுவை ஆனந்தமும் பெரிய பெண்டுகளின் சல்லாப வார்த்தைகளோடுகூடி அன்றைய சுப்பய்யர் வீட்டு கூடமே சந்தோஷமாயிருந்தன. ஆனல் ஓ பேராசைப் பேயே நீ மட்டும் ருக்மணி அம்மாளை இச்சந்தோஷத்தில் கலந்துகொள்ள செய்யாமல் என் தடுத்திருக்கின்றூய், உனக்கு ஜீவர்களிடத்தில் இறக்கமென்பது கிடையாது. இருந்ததென்றூல் நீ ஜீவர்களை பிடித்துக்கொண்டு இப்படி ஆட்டிவைக்கமாட்டாய். ருக்மணி அம்மாளை வந்திருந்த பெண்டுக ளெல்லோரும் இவளுக்கு தன் மாட்டுப்பெண் வீட்டிற்கு வருவது இஷ்டமில்லை போலிருக்கு, இருந்தால் சந்தோஷமாக எல்லோரிடமும் பேசிகொண்டிருக்கமாட்டாளா என்று குறை கூறினூர்கள். லக்ஷ்மீயின் தாயார் ஓர் பெரிய வைதிக வீட்டுப்பெண் சுப்பய்யருக்கு உள்ளூர் அகப்பத்தில் 25-கோட்டை விதைப்பாடு நிலத்தோடு 60-கோட்டை விதைப்பாடுகொண்ட ஓர் குளப்புரவும் உண்டு. கையில் ரொக்கம் ரூ 25000-க்கு குறைவில்லை. லக்ஷிமீ கல் யாணத்தை முன்னிட்டு ரூ 15000 செலவு செய்துவிட்டார். தன் னுடைய ஒரே பெண்ணுன லக்ஷிமிக்கு எவ்வளவு சீர் சிறப்பு செய்யவேண்டுமோ அவ்வளவும் சிறப்பாக செய்யப்பட்டவர். மேலும் தனக்கு உள்ளூரிலேயே பண்ணை ராமய்யர் வீட்டு சம்பந்தம் கிடைத்ததைப்பற்றி நிரம்ப சந்தோஷத்துடன் லக்ஷிமீயின் ஜாத கத்தை எல்லா ஜோஸியரிடம் காட்டி பெண்ணின் அதியோக நிலையைக்கண்டு சந்தோஷங்கொள்வார். பெதுசாந்தி முகூர்த்தத்தை 16-நாட்களிலே நடத்துவதென்று உத்தமோத்தம பாகத்தை நடத்து வதற்கு சில அசந்தர்ப்பங்களிருந்தன. ராமய்யருக்கு தன் நாட்டுப் பெண்ணை உடனே வீட்டுக்கழைக்கவேண்டுமென்ற விருப்பமுண்டு.

நாராயணன் அந்த வருடந்தான் மதராஸ் கிருஸ்துவ காலேஜில் B. A., பரிக்ஷை முதல் வருடம் படித்துக்கொண்டிருக்கிறான். எல்லாம் சித்திரை பிறந்து பார்த்துக்கொள்ளலாமென இருந்தார். போதாக் குறைக்கு ராமய்யர் ஸம்ஸாரம் வீட்டில் நடக்கவேண்டிய ரெது சாந்தி முகூர்த்தத்திற்கு முன்னால் வயிர அட்டிகை, வயிரத்தோடு போடுகின்றார்களாவென்று கவனித்துக்கொண்டே வந்தாள். ஓர் நாள் லக்ஷ்மீயின் தாயார் சுப்புஅம்மாள் தன் சம்பந்த ருக்மணி அம்மாள் கிருஹத்திற்கு வந்து சிலசமாச்சாரம் பேசிக்கொண்டிருந்தாள்.

ருக்மணி அம்மாள்: (சுப்பு அம்மாள் வீட்டிற்கு வந்ததும்) வாருங்கோ! உட்காருங்கோ!! சம்பந்தியாக ஆவதற்கு முன்னால் ஆற்றங்கரைக்கு போகும்போதும் வரும்போதும், கூடவே பேசிக் கொண்டு போவோம், வருவோம். இப்போது சந்தித்து பேசவே முடியாதில்லே, எப்போ பார்த்தாலும் நாலுபேர் கூடயிருக்கும்போது தான் சந்தித்துகொள்ள சமயம் கிடைக்கிறது. நீங்கள் இன்னிக்கி தனியே வந்திருக்கிறதுபற்றி எனக்கு நிரம்ப சந்தோஷம். குழந்தை லக்ஷ்மீ சௌக்யம்தானே 40 நாட்கள் ஆச்சுபோலிருக்கு இன்னும் இரண்டாம் பேஷ்டையாகவில்லே. காலகாலத்திலே இந்த காலத்துப் பெண்களுக்கு வருவதில்லே யென்றாள்.

சுப்பு அம்மாள்: இப்போதான் குழந்தை பேஷ்டையானாள். அவா செங்குளம் அறப்பு தீரவில்லே, இராத்ரி 9 மணிக்குத்தான் வருவா, சொல்லியனுப்பவதற்கு வீட்டு வேலைக்காரனும் இல்லே. ஒரே தெருத்தானே உங்களிடம்வந்து தகவல் சொல்லிக்கொண்டு மேலால் வேண்டுவதை நடத்தலாமென்று நினைத்துத்தான் இங்கே வந்தேன் அவாளெங்கே வெளியிலே போய்விட்டார்களோ?

ருக்மணி அம்மாள்: இப்போதான் சந்தியாவந்தனம் செய்து விட்டு வீடு திரும்புவதாக சொல்லிப்போனார்கள். உட்காரு சுப்பு உன்னிடம் நிரம்பநாளா சொல்லணம் என்று இருக்கேன். போன வருடம் கிறிஸ்துமஸ் வேடிக்கைபார்க்க மதராஸ் போயிருந்தோம். அங்கே கும்பகோணம் பக்கத்திலிருந்து யாரோ போலீஸ் இனிஸ் பெக்டர் ஆம்புடையாளாம் ஒருத்தி வந்திருந்தா விசாரித்ததிலே அவள் பிறந்த வீட்டுக்காரர்கள் அவ்வளவு பணக்காரர்களுமில்லே

## பாரத் ரெடிமேட் எம்போரியம்,

முனிஸீப் கோர்ட்டுக்கு எதிர்புரம், அம்பாசமுத்திரம்.

ஆண், பெண், பாலர் யாவருமணியும் எல்லாவித அழகான ஸில்க், செக் சீட்டித்துணிகளில், புதுமாதிரி தையல்வேலைப்பாடுள்ள ஆடை உடைகளும், வேஷ்டி, துவாலை, டவல் ஜவுளி தினுசுகளும் எங்களிடம் சகாயவிலைக்கு கிடைக்கும்.

| | |
|---|---|
| தயாராகுமிடம் :- T. S. சங்கய்யா ஸ்டோர்ஸ், மதுரை. | R. நாராயணன். புரோப்ரைட்டர். |



## மஹரிஷியின் 3 சூர்ணங்கள்.

பேதிசூர்ணம்:- இந்தப் பொடியை காலைவேளையில் ஜலத்தில் போட்டு சாப்பிட்டால் சுகபேதி 3 தடவையாகும். யாதொரு அருசியோ, பத்தியமோ கிடையாது. மலக்கட்டுடையவர்களுக்கு அபூர்வமான ஓர் நிவிர்த்திதரும் சூர்ணம். ஒரு தடவைக்கு ரூ. 0—2—0.

சுகசூர்ணம்:- இந்த பொடியை ஒரு சிமிட்டா வாயில் போட்டுக்கொண்டால் பித்தம், ஜலதோஷம், தலைவலி, அஜீர்ணம் முதலிய எல்லாவித நோய்களையும் தீர்க்கும். மோட்டார் ரயில் பிரயாணம் செய்பவர்களுக்கு ரொம்ப நல்லது.

பாக்கெட் 1-க்கு விலை ரூ. 0—2—0.

பலசூர்ணம்:- இந்த பொடியை ஒரு தேக்கரண்டி நல்ல பாலோடு கலந்து தினம் ஒருமுறை காலையில் சாப்பிட்டால் தேகத்திற்கு நல்ல ஆரோக்யம், சுறுசுறுப்பு, ஊக்கம் இவைகள் தந்து இளமையையும் உண்டுபண்ணும். காப்பிக்கு பதிலாக ஓர் மறு அவுஷதம். 40 நாட்கள் சாப்பிட்டால் பிறகு காப்பியோ, டீயோ ஒன்றும் தேவையில்லை. 40 வேளை மருந்து ரூ. 3—0—0 மட்டும்.

மஹரிஷி கிருஷ்ணஜி,
கல்லிடைக்குறிச்சி.

Regd. No. M. 4337. [15-11-'41] Vol. II. Bk. No. 2.

# பகவத் கீதை.

(வெளியீடுகள்.)



அக்கிரோன்,

மஹரெஷி கிருஷ்ணஜி,

பாரத்வாஜ குலோத்பவன்,

கல்லிடைக்குறிச்சி.

All Rights Reserved) 1941.

சிவானந்தலஹரி (மனோதத்துவம்) லக்ஷ்மீ நாராயணன் (ஆசைத்துன்பம்) அடங்கியிருக்கிறது.

மாதசஞ்சிகை. வருடசந்தா ரூ. 2—0—0.

ராஜலக்ஷ்மி பிரஸ், கல்லிடைக்குறிச்சி.

ருக்மணி அம்மாள்:- குடும்பத்திலும் அதிக பணமில்லே. ஆனல் வயிர அட்டிகை ஒன்று போட்டுக்கொண்டிருக்கா. என்ன ஜ்வலிப்பு என்கிருய். நம் கிருமத்திலே நமக்கு எவ்வளவு தனம், பணமிருந்தாலும் நாகரீகமான நகையே இல்லே. நம் குழந்தை லக்ஷ்மீக்கு ஒரு அட்டிகை திரக்ஷிக்கு முன்னலே போடவேண்டுமென்று ஆசை. நீயும் சம்பந்தி பிராமணரிடம் சொல்லி செய்யச் சொல்லு.

சுப்பு அம்மாள்:- நம்ம லக்ஷ்மீக்கு அட்டிகை பண்ணியாச்சு. நல்ல சிகப்பு பதக்கமும் உண்டாக்கியிருக்கா. மேலும் வயிர அட்டிகையென்ருல் ரூ. 15000 வேண்டும், அது மட்டிலுமா? பிராமண குடும்பங்களுக்கு வயிரம் போடுவது நல்லது இல்லே. வயிரத்திலே ஒரு கருப்பு இருந்தால் போதும் குடும்ப நாசமேற்பட்டுவிடுமென்று பெரியவாள் சொல்ல கேட்டிருக்கேன். மூக்குத் தளுக்கு ஒன்றுக்கே, நூறு பேரை கேட்டு கருப்பு இல்லாமல் போட்டிருப்பதாக அவா சொன்ன. அதுகூட எனக்கு சம்மதமில்லே.

ருக்மணியம்மாள்:- நன்னயிருக்கு, ஆன தளுக்குக்கூட வயிரம் வேண்டாமென்கிறையா? கோடிப்பேர் கோடிக்கணக்கா வயிரம் வாங்குகிரு, அவாளெல்லாம் கெட்டா போய்விட்டாள்.

சுப்பு அம்மாள்:- வயிரம் சாத்விக குணமுடையார்க்கு நல்லதில்லே ராஜஸ குணமுடையார்களுக்கு நல்லது. ராஜாக்கள், வியாபாரிகள் இவர்களெல்லாம் போட்டுக்கொள்ளலாம். நம்முடைய பிராமண குடும்பங்களுக்கு தங்கம், சிகப்பு, பச்சை இவைகளெல்லாம் நல்லது என்று எங்கப்பா ரத்ன சாஸ்திரம் படித்தவர், சொல்வார்.

ருக்மணியம்மாள்:- ஒங்கப்பாவோடே அதிருக்கட்டும். ஒங்கப்பா ஒரு வைதீகர். அவரிடம் வாங்குவதற்கு ரூபாயும் கிடையாது. நாகரீகமும் கிடையாது.

சுப்பு அம்மாள்:- அவா வர சமயம் ஆய்விட்டது. குழந்தை வீட்டில் தனியா யிருக்கிருள். அப்புறம் பேசிக்கொள்வோம்.

என்று சொல்லி எழுந்து வீட்டுக்கு திரும்பி வந்துவிட்டாள்.

## 3. வீண்டம்பம்.

அன்ய தர்மமதை அவாக்கொண்டனுஷ்டித்தல்
மன்னுமுயிருக்கு மாக்ஷிதனை தந்தாலும்
பின்னை மதினுல் நீ பீடையுருவாய் காண்
தன்னதாம் தருமமே சிரேஷ்டமாம் மரணத்தேயும்.
(பகவத் கீதை By Mahareshi Krishnaji.)

வீடு திரும்பிய சுப்பு அம்மாளுக்கு தன் சம்பந்தி அம்மாள் சொன்ன சொல் கேவலமாகப்பட்டது. தன்னை ஓர் வைதிகன் பெண்ணென்றும், நாகரீகம் தெரியாதவளென்றும் சொன்னதை நினைத்து நினைத்து பார்த்தாள். வைதிகன் பெண்ணு யிருந்தால் என்ன? வைதிகமென்பதும் ஓர் பெரிய நாகரீகத்தின் சின்னம்தானே அதில் என்ன நாகரீகக் குறை யிருக்கிறது என்று ஆலோஜித்தாள் நாகரீகமென்ற பெயருடன் ஓர் வயிர அட்டிகை வாங்கி பெண்ணிற்கு போட்டுவிட்டால் வைதீகர் பெண்ணில்லாமல் ஆய்விடப் போகிறேனு என்ன? அப்போதும் நான் வைதீகர் பெண்தான். நம்ம வைதீக நாகரீகம் அவர்களுக்கு பிடிக்கவில்லையானல் அவர்களுடைய லௌகிக பிசாசு நாகரீகமும் எனக்கு பிடிக்கவில்லை என்று சொல்லிக்கொண்டாள். தனது பர்த்தா வீடு வந்ததும் வீட்டில் தன் லக்ஷ்மீ இரண்டாவது ருது பற்றி பேசிக்கொண்டார்கள். சரி, சம்பந்தி ஆத்துக்கு சொல்லி பனுப்பிவித்தாயா என்று தன் பர்த்தா கேட்கவும், தான் சம்பந்தியை கண்டதும் சம்பந்தி சொன்ன சமாசாரம் ஒன்றும், சுப்பு அம்மாள் தன் பர்த்தாவிற்குச் சொல்லாமல் எதற்கும் நீங்கள் வரட்டும் என்று இருந்தேன் என்று மட்டும் சொன்னுள். அடுத்த நாள் முறையே செய்யவேண்டியதெல்லாம் செய்யப்பட்டது. இப்பொழுது பண்ணின பிட்டு நிரம்ப நன்ருகயிருந்தது என்று சம்பந்தி ருக்மணியம்மாளே ஒப்புக்கொண்டாளென்ருல், பிறகு என்ன வேண்டும். கூடிய சீக்கிரம் நல்ல நாள் பார்த்து ருதுசாந்தி வைக்கவேண்டுமென்று சம்பந்தி சுப்பய்யர் பிரேரணை செய்தார். ஆனுல் ருக்மணியம்மாள் சரி என்று சொல்லவில்லை. ஏதாவது நொண்டி சாக்குகள் சொல்லி நாள் கடத்தி வந்தாள். ஒருநாள் சுப்பு அம்மாள் தனது பர்த்தாவிடம் உங்களுக்கு சம்பந்தியம்மா எதற்காக இரக்ஷி கல்யாணத்தை தள்ளிபோடுகிருள் தெரியுமோ என்ருள்.

சுப்பய்யர்:— ஏதோ அவள்சொல்லும் காரணம் எனக்கு பிடிக்க வில்லே. ஒருவேளே பையன் படிப்பு முடியவேண்டுமென்கிருள். இன்னொரு சமயம் கொஞ்சம் நாளாகட்டுமே என்கிருள். சம்பந்தி ருமய்யரும் சரியாக பதில் சொல்லுவதில்லே.

சுப்பு அம்மாள்:— நமது பெண் லக்ஷிமிக்கு வயிரத்தோடும், வயிர அட்டியலும் போடவேண்டுமாம்.

சுப்பய்யர்:— வயிரத்தோடு, வயிர அட்டியல் ரூ 20,000 வேண்டுமே. இந்த காலத்தில் ரூபாய் இருபதாயிரத்திற்கு எங்கு போவது. மேலும் ஒரு வயிரம் கொல்லும், ஒருவயிரம் வெல்லு மென்பார்களே.

சுப்பு அம்மாள்:— வெல்லர வயிரமாகவே கொள்ள வேண்டும்.

சுப்பய்யர்:— நீ சொல்வது சரிதான், பணம் ரூ 20,000.

சுப்பு அம்மாள்:— வயிர அட்டியல் போடாவிட்டால் திரக்ஷி கல்யாணம் உண்டாகாது.

சுப்பய்யர்:— திரக்ஷி கல்யாணம் கழிந்தபின் பார்த்து வாங்கி கொள்ளலாம். மேலும் குழந்தைக்கு நகை போடவேண்டியது நமது பொறுப்பா? அவர்கள் பொறுப்பா?

சுப்பு அம்மாள்:— பொறுப்பு நமதாயிருந்தால் அதை இப் போதே செய்துவிடுவது நல்லது தானே. ஒரே பெண். செய்வதை செய்துவிட்டால் கண் கசக்கமன்னியில் புக்காத்திலே வளரும் ஏதாவது குறைந்த விலேக்கு பார்த்து வாங்குங்களேன்.

சுப்பய்யர்:— பொறுப்பு என்ருல், வயிரத்தில் பணம் பொறுப்பு மட்டுமா? வயிரம் தெரிந்தெடுப்பதில் நல்லதாகவும், கருப்பு ரக்த பிந்து இல்லாமலும் தெரிந்தெடுக்கவேண்டும். மதுரையில் என்னுடைய சினேகிதர் ஓர் வயிரத்தோடு வாங்கி தன் பெண்ணிற்கு போட்டார், போட்ட வருடத்திலேயே மாப்பிள்ளே இறந்து போய்விட்டான். அந்த தோட்டை வேருெருவர் வாங்கினர் வாங்கின வருடம் இன்ஸால்வென்டானர்.

சுப்பு அம்மாள்:- அப்படியானல் என்னவேணுமானுலும் வரட்டும் நம்முடைய வீட்டிற்கு வயிரத்தோடுவேண்டவே வேண்டாம். வயிர அட்டியல் என்றுல் எத்தனை வயிரம் வேண்டும்.

சுப்பய்யர்:- எதற்கும் சம்பந்தி ருமய்யரைக்கண்டு பேசி முடிவு செய்கிறேன் என்று கூறி அப்போதே ருமய்யரை பார்க்க புறப்பட்டு விட்டார். சம்பந்தி சுப்பய்யர் தனது வீட்டிற்கு வந்ததும் ருமய்யர் வாருங்கோ வாருங்கோ உட்காருங்கோ என்று சொல்லி உபசாரம் செய்தார். அன்று செய்த பேணியில் இரண்டு சிறுமலை பழம் 8-ம் கொண்டுவைத்து காப்பியும் கொடுத்து உபசரித்தார்.

ருமய்யர்:- பையன் மதருஸிலிருந்து கடிதம் எழுதிருக்கிருன். உடம்பு சௌக்யந்தான்.

சுப்பய்யர்:- நல்லது குழந்தை ரெதுசாந்தி முகூர்த்தம்.

ருமய்யர்:- வருகிற தை மாதத்திலே நடத்திவிடலாமென்று உத்தேசிக்கிறேன், வீட்டுப் பெண்பிள்ளைகளும் அதுதான் சௌகரியமாயிருக்குமென்கிருர்கள்.

சுப்பய்யர்:- அப்படியே செய்துவிடுகிறது. நீங்களே மதருஸ் போய் கட்டில் முதலான சாமான்கள் நவநாகரீகத்திற்குத் தகுந்தபடி வாங்கி கொண்டு வந்து விடுகிறீர்களா? அதற்கு செலவாகும் தொகையை நான் இங்கு ஏற்பவித்து விடுகிறேன்.

ருக்மணி அம்மாள்:- கட்டில் மெத்தையில்தான் நவநாகரீகமிருக்கும்போலிருக்கு வயிர அட்டிகை தோடுகள் குழந்தைக்கு இல்லை. நாகரீகமான நகைகள் போட்டிருந்தாலல்லவோ, நாகரீக கட்டில் மெத்தை வேண்டும். இந்த வார்த்தையை சுப்பய்யரோ, ருமய்யரோ ருக்மணி அம்மாளிடமிருந்து திடீரென எதிர்பார்க்க வில்லை. சுப்பய்யருக்கும், ருமய்யருக்கும் இந்த வார்த்தைக்கு பிறகு ஒருவரை யொருவர் பார்த்துகொள்ளவும், பேசிக்கொள்ளவும் நிரம்ப கஷ்டமாயிருந்தது. கிரஹஸ்தாச்ரமத்தை நடத்தும் புருடர்களுக்கு இதுபோன்ற சங்கடங்கள் ஏற்பட்டால் அவர்களால் மேலால் ஒன்று செய்துகொள்ள முடியாத நிலை ஏற்பட்டுவிடும்.

ருக்மணி அம்மாள் போன்ற கிரஹணிகள் கேவலம் தன் மனதை தன் நாட்டுப்பெண் பூஷணத்திற்காக விற்றுவிட்டால் கிரஹதர்மமே அழிந்துவிட ஆக்ஷேபனை என்ன. தான் ஓர் பெரிய தனிகர் வீட்டில் வாழ்க்கைபட்டிருந்தும் கடவுளனுக்ரஹத்தால் தனக்கு நல் வாழ்வுயிருந்தும் தன் பிள்ளையின் கிருஹஸ்தாச்ரமத்திற்கு நல்ல அடிகோலிபோடவேண்டியயிடத்தில் சந்தோஷமற்ற வார்த்தைகள் பேசவும் அதற்குமேல் தன் புருஷன் முதல் எல்லோருக்கும் மனோ கஷ்டம் வரவும் ஓர் அசந்தர்ப்பத்தை உண்டாக்கிகொண்டால் ருக்மணி அம்மாள் செய்வதை அவள் புருஷன்கூட ஒப்புக்கொள்ள மாட்டார். சுப்பய்யர் ஒன்றும் பேசாமலேயே எழுந்து வீடுபோய் விட்டார். சுப்பய்யரை தடுப்பதற்கோ அல்லது பிரிவு உபசாரம் சொல்வதற்கோ ராமய்யருக்கு மனந்துணியவில்லை. ஓ வயிரமே! நீ எத்தனை குடும்பத்தை கெடுத்தாய்? கெடுத்துக் கொண்டிருக்கிறாய்? கெடுக்கப்போகிறாய்? அன்று ஓர் வயிரம் ராஜ்யத்தையே கெடுத்துக்கொண்டிருந்தது. அது ஓரளவில் இந்தியாவைவிட்டு இங்கிலாந்து சென்றது. சென்ற வைரம் ஒன்று. வரும் வைரம் கணக்கிலடங்கவில்லையே! ஓ, இந்தியப் பெண்மணிகாள்! நீங்கள் உங்கள் தருமத்திற்கு வைரங்களை அணியாதீர்கள். முதன்முதலாக கவனியுங்கள். வயிரச் சுரங்கம் இந்தியாவில் இல்லை. நீங்கள் கொடுக்கும் பணம் முழுவதும் அன்னியர்களுக்கே போய்ச்சேருகிறது. இரண்டு, கொடுக்கும் பணம் திரும்பப் பெறப்போகும் காலமே வரப்போவதில்லை. மூன்று, இந்தியர்கள் வைர நகை யணியக்கூடிய பணக்காரர்களுமில்லை. நான்கு, நாம் அடிமைகள். அன்னிய நாடு வயிரங்கள். வாரிக்கட்டைக்கு பட்டுக் குஞ்சம் கட்டியது போலாகும். நமது தர்ம சாஸ்திரக்காரர்களும் நிரம்ப வரையறை ஏற்படுத்தியிருக்கிறார்கள் வைரத்தைப்பற்றி. வைரத்தினால் ஏற்பட்ட தொல்லை அதிகம். ஏற்படப்போகும் தொல்லையும் அதிகம். இந்த வைரங்களினால் நமது தேசம் அடைந்திருக்கும் எளிமை கொஞ்சமல்ல. அநேக குடும்பங்கள் வைர நகை யாசையினால் நஞ்சை நிலங்கள் விற்று குடும்ப வாரீஸ்கள் சோற்றுக்கில்லாமல் திண்டாடுகின்றார்கள். ஸ்திரீகள்தான் வைர நகை பேரில் ஆசை கொண்டிருக்கிறார்களென சொல்லுவதற்கில்லை. எத்தனையோ புருடர்களும் கடுக்கன், மோதிரம் கைகொலுசாக அணிந்துகொள்வதில் பின்னடைவதில்லை. அடா, மோஹமே! உன்னை யார் எப்

படி வளர்க்கின்றார்களோ? அதன்படி நீயும் வளைந்து கொடுத்துக்கொண்டு உன்னை அண்டுபவர்களை உன் வசமாக்கிக் கொள்ளுகிறாய். உன்னை யடைந்தவர்கள் திரும்ப நல்ல நிலை யடைவது முடியாததே. என்று பலவாறான சிந்தனைகள் ஒன்றின்பின் ஒன்று தோன்ற மெள்ள மெள்ள தன் வீடு திரும்ப வந்து சேர்ந்தார் சுப்பய்யர்.

(4)

மறுநாள் சுப்பு அம்மாள் தனது பர்த்தாவிடம் நேற்றைக்கு சம்பந்தியை கண்டு பேசப் போயிருந்தீர்களே, என்ன சொன்னார்? என்று கேட்டாள்.

சுப்பய்யர்: சம்பந்திப் பிராமணர் ஒன்றும் சொல்லவில்லை. எல்லாம் உங்கள் வர்க்கந்தான் சொல்லிற்று.

சுப்பு அம்மாள்: என்றால்.

எல்லாம் பெண் வர்க்கந்தான். பின் யோஜனையில்லாமல் சொல்லவேண்டுமென்றால் பெண்கள்தானே சொல்லுவார்கள். காட்டில் கண்ட மானைப் பிடி. காவற்கார்க்கும் லக்ஷ்மணனை விரட்டியடி. இவைகள் எல்லாம் பெண்கள் கூற்றுதானே?

சுப்பு அம்மாள்: இந்த ராமாயணம் உங்களிடம் கேட்கவரவில்லை.

சுப்பய்யர்: ரூபாய் இருபதாயிரத்துக்கு வழி போடுறா, வயிர அட்டிகை, வயிரத்தோடு வேண்டுமாம்.

சுப்பு அம்மாள்: நல்ல முண்டு இது. நல்ல காலத்திற்கு இது மாதிரி சொல்லமாட்டாள். நீங்களும் நல்லதாக கிடைத்தால் வாங்கிப் போடுறேன் என்று சொல்லுங்களேன்.

சுப்பய்யர்: வைரத்தில் நல்லது வேறு, கெட்டது வேறு இருக் இருக்கிறதா என்ன? வாங்கிய வீடும் பாழ். வாழ்வும் பாழ்.

சுப்பு ம்மாள்: ஆனால், வேறு வழி.

சுப்பய்யர்: எல்லாவற்றிற்கும் ராமய்யர் என்ன வழி விடுகிறார் பார்ப்போம்.

சுப்பு அம்மாள்: ராமய்யர் வழி வேறு, ருக்மணி வழி வேறா? எல்லாம் ஒரே வழிதான்.

சுப்பய்யர்: நீ அப்படிச் சொல்லாதே. அப்படியானால் அவரே நேரில் வைர அட்டிகை வேண்டுமென்று சொல்லமாட்டாரா?

சுப்பு அம்மாள்: சரிதான், பாருங்களேன். எப்படியானாலும் வரும் தை மாதத்திற்குள் ருதுசாந்தி முகூர்த்தம் நடத்தித்தீர வேண்டும்.

சுப்பய்யர்: பிள்ளை வீட்டார் செய்யவேண்டிய விசேஷத்தைப் பற்றி நான் எப்படி உறுதிசொல்ல முடியும். சரி, எல்லாவற்றிற்கும் இன்று நான் உன் தம்பிக்கு ஓர் கடிதம் எழுதப்போகிறேன். அவன் மதராஸிலே மாப்பிள்ளை பையன் அபிப்பிராயத்தை அறிந்து எழுதட்டும், என்று சொல்லி ஸ்நானத்திற்கு நதிக்குப் போய் விட்டார்.

அன்றே சுப்பய்யர் தனது மைத்துனன் சேஷனுக்கு ஓர் கடிதம் எழுதிவிட்டார்.

(5)

மதராஸில் பணத்தின் வறுமை தெரியாமல் தன் கிராமத்திலிருந்து மாதந்தோறும் ரூ. 100-வீதம் பெற்றுக்கொண்டு தனது B. A. பரீக்ஷைக்கு படித்துக்கொண்டிருக்கும் மாணவர்களில் நமது நாராயணனும் ஒருவனல்லவா ?

தினசரி பேப்பர்கள் வாசிப்பதும், ஓய்வு நாட்களில் ஸினிமா நாடகம் முதலிய காக்ஷி சாலைக்குச் செல்வதும், டென்னிஸ் பந்தாடுவதும் முதலான நவீன நாகரீகத்தில் ஈடுபட்ட மாணவர்களில் நமது நாராயணனும் ஒருவன்.

வெத்திலை, பாக்கு, புகையிலையை வேண்டாமென்று வைத்துவிட்டு, நல்ல ஸிகிரட் வாங்கி உபயோகிப்பதிலும், நவீன தலை கிராப், அதற்குறிய நவநாகரீக வஸ்துக்கள் வாங்கி உபயோகிப்பதிலும் சேர்ந்த மாணவர்களில் நமது நாராயணனும் ஒருவன்தானே !

B. A. பட்டம் கிடைத்துவிட்டால் உடனே வேலைதான் போலிருக்கு. பிராமணர்கள் என்றால் வேலைக்கு வேண்டாமென்பார்கள். எதற்கும் படிப்பு என்றால் ஓர் அறிவு விர்த்திக்குத்தானே அதற்குத்தான் என் தகப்பனார் என்னை படிக்கச் சொல்லுகிறார் என்று அடிக்கடி தன் சிநேகிதர்களிடம் சொல்லிக்கொள்வான். மேலும் தனக்கு நல்ல தனவந்தன் வீட்டில் கல்யாணமாயிருப்பதையும் தன் மாமனாருக்கு தன் மனைவி ஒரே பெண் என்பதையும் அதனால் மாமனார் சொத்தும் தன்னைச் சேருமென்ற எண்ணங்

கொண்டவனில்லை யென்று நாராயணனைச் சொல்ல முடியாது. ஆகவே தனக்கு B. A. தோற்றுவிட்டாலும் சம்பாத்தியமில்லாமை தன்னை அதிக கஷ்டப்படுத்தாது என்று தெரிந்துகொண்டிருந்தான். மேலும் தன் தகப்பனுருக்கு தான் ஒரே பிள்ளை. மற்ற இரு சகோதரிகளும் சிறு குழந்தைகள்தான். ஒரு சகோதரி பார்வதி, 10 வயது. இரண்டாவது சகோதரி கோமதி, வயது 8. இரண்டு பேர்களும் கிராமப் பள்ளிக்கூடத்திலேயே படித்துக்கொண்டிருக்கிறார்கள். தனது தகப்பனுர் தனக்கு வரும் தை மாதத்திலேயே ருதுசாந்தி முகூர்த்தம் நடத்துவதை எதிர்பார்த்திருந்தான் தன்னுடைய சகாக்களிடம் ஜனவரி 1ஸ் தான் கட்டாயம் ஊர்போவேன் என்றும் சொல்லிவந்தான். ஏர்க்கனவே 16-நாட்களுக்குள் தன்னுடைய அருமை நாயகியை தனி அறையில் சந்திக்க முடியாததைப் பற்றி வருத்தப்பட்டான். சில சில ஸினிமா படங்களை பார்த்து திரும்பியதும் என்னவெல்லாமோ மனதில் நினைத்து இரவு தூக்கம் வராமல் கஷ்டப்படுவான், முக்கியமாக நாயக நாயகி பாவம் முற்றும் ததும்பும் ஸினிமாப்படங்கள் இவனுக்கு அதிக கஷ்டத்தைக் கொடுத்தது படங்கள் பார்த்து திரும்பவந்து கஷ்டப்படுவதைக் காட்டிலும், அடிபுடி சண்டை நடத்தும் சில ஸினிமா காக்ஷிகளுக்குப் போகத்துடங்கினன். எந்தப் படங்களிலும் ஏதாவது ஓர் காதல் காக்ஷி இல்லாமலிருப்பதில்லை. எந்தப் படந்தான் காதலர்களில்லாமலிருக்கும். இப்படிப்பட்ட நிலையில் நமது நாராயணன் எப்படி தனது நாயகியை சந்திக்க எண்ணமலிருக்கமுடியும் மேலும் நமது லக்ஷ்மியும் சாதாரண அழகுள்ள ஸ்திரீகளில் ஒருவளாக அமையவில்லை. அகன்ற நெற்றி, கூறியமூக்கு, அகன்ற கண்கள், வட்டமுகம் கருண்டு சுருண்ட கூந்தல், நல்ல தங்கநிறம் இவைகளெல்லாங் கொண்ட அழகிய உருவமுடையவள். நல்ல சாரீரத்தோடு சுகசாரீரங்கொண்டபாடகி கல்யாணத்திலேயே வேடிக்கையாக ஓர் பாட்டு பாடினள், அந்த மதுரதொனியே இன்னும் நாராயணனை விட்டு அகன்றபாடில்லை. எப்போதும் அப்பாட்டின் வசனத்தை மனதால் நினைத்து நினைத்து சந்தோஷப்படுவான். தன் அருமை நாயகியின் பாட்டின் மூலம் இவன் கற்றுக்கொண்ட வார்த்தைகள் இரண்டே அதுவும் "நாதன்வரக் காணேனே" என்பதுதான் அதே பதங்களை திரும்ப திரும்ப எண்ணிப்பார்த்தும், சொல்லிப்பார்த்

தும் சந்தோஷமடைவான். தன் அருமை நாயகியை கூடிய சீக்கிரம் பார்க்கவேண்டுமென்று நினைப்பான். கல்யாணத்தில் பாடியது போல், தன் நாயகியும் "நாதன் வரக்காணேனே" என்றிருப்பா ளென்று நினைப்பான். ஒவ்வொரு ஸினிமாப் படத்திலும் தான் தன் நாயகியுடன் உல்லாசமாக யிருக்கவேண்டியதற்கான பூர்வ பீடி கைகள் போடுவான். மேலும் இன்றைய ஸினிமாப் படத்தில் மரு மகள் மாமியால் கஷ்டப்படுத்தப்படுவதை பார்த்து இப்படியும் மாமிகள் செய்வார்களா? என்று எண்ணி கதைக்காக மனதின் ஜோடனையே தவிர உண்மையிலிராது என்றெண்ணுவான். இப் படி யெல்லாம் அவன் எண்ணங்கள் சிதறுண்டும் ஒன்றும் உருப் படாமலிருக்கும்போது யாரோ ஒருவர் கதவு தட்டும் சப்தம் கேட் டது. தன்னுடைய எண்ணங்களை யெல்லாம் தூரத்தள்ளிவிட்டு கதவைத் திறக்கவும் தனது வேட்டகத்து மாமா சேஷய்யர் கையில் ஒரு கடிதத்துடன் வரக்கண்டதும் "மாமாவா, வாருங்கோ! வாருங்கோ! என்று கூப்பிட்டு இருவருமாக அறையில் புகுந்து ஆசனத்திலமர்ந்தார்கள்.

மாமா சேஷய்யர் நாராயணன் படிக்கும் அறையை நாலு புறமும் பார்த்தார். புஸ்தகங்கள் வரிசையாக வைக்கப்பட்டிருப் பதைக் காட்டிலும் ஸினிமாஸ்டார்களின் படங்கள் ஒழுங்காக தொங் கவிடப்பட்டிருந்தது. நாராயணன் முழுக்கவனங்களும் ஸினிமா ஸ்டார் படங்களில் ஒவ்வோர் படத்திற்கும் ஒவ்வோர் கவிதை கீழே வரையப்படுவதில் செலுத்தப்பட்டிருந்தது. சகுந்தலா படத்தின்கீழ் "அவசர விவாகம் அபாயமளிக்கும்" என்றும், சீதாவும் பொன் மானும் என்ற படத்தின்கீழ் "பொன்னிறத்தாளே உனக்கேன் பொன்மான்?" என்றும் இப்படி பல பல வாசகங்கள் பல பல படங் களின் கீழ்வரையப்பட்டிருந்தன. எல்லாப் படங்களுக்கும் நல்ல தொரு பிரதான இடத்தில் லக்ஷ்மியின் படமும் தொங்கவிடப்பட் டிருந்தது. அந்த படத்தின்கீழ் "நாதன் வரக்காணேனே" என்று எழுதிவிட்டு "நாதன் நான் வருவேன் நாடியுனை தேடி" என்றும் சேர்க்கப்பட்டிருந்தது. இவைகளெல்லாம் மாமா கண்ணில் படா மலிருக்கவில்லை. மேலும் மாமா அறையில் புகுந்ததும் நாராயண னுக்கு தன் அறையின் படங்களை மாமா கவனிப்பாரோ என அச்சமும்கொண்டான்.

(6)

லக்ஷ்மீபுரம்,
1084 தை-ஸ்ரீ 3-உ

ஸ்ரீமது அத்திம்பேர் சிரஞ்சீவி சேஷனுக்காசிர்வாதம். உபய க்ஷேமம். குழந்தை லக்ஷ்மீயின் ரெதுசாந்தி முகூர்த்தம் இந்த மாசத்திலேயே நடத்தலாமென நினைத்திருக்கேன்; சம்பந்தி அம்மாள் வயிர அட்டிகை வயிரத் தோடு பெண்ணுக்கு போடவேண்டுமென்கின்றாள். எனக்கு வயிரமென்றாலே மனம் பதருகிறது. எப்படியானாலும் "வயிர அட்டிகையில்லாவிடில் குழந்தை லக்ஷ்மீயின் ரெது சாந்திநடைபெறாதென்று தான் தெரிகிறது" எதற்கும் அவ்விடம் பக்கங்களில் நல்லதொரு வயிர அட்டிகை தோடு விசாரித்து எழுதவும். மாப்பிள்ளை நாராயணனையும் அடிக்கடி பார்ப்பாயே அவன் சௌக்கியத்திற்கெழுதவும்.

இப்படிக்கு,
சுப்பய்யர்.

மாமா சேஷய்யரும் நாராயணனும் பேசிக்கொண்டிருந்த மத்தியில் மேற்கண்ட கடிதமும் நாராயணனுக்கு காட்டப்பட்டது. "வயிர அட்டிகையில்லாவிடில் குழந்தை லக்ஷ்மீயின் ரெது சாந்தி நடைபெறாதென்றுதான் தெரிகிறது" என்ற வாசகம் அவன் நெஞ்சை பிளக்கச்செய்தது. எதற்கும் மாமா சேஷய்யரை பின்னால் சந்திப்பதாக சொல்லி அனுப்பிவிட்டு உடனே கடைபக்கம் புறப்பட்டான். எவ்வளவோ வயிர அட்டிகைகள் கடைகளில் தொங்கவிடப்பட்டிருந்த கடைக்குவந்து சேர்ந்தான். வயிர அட்டிகையும் தோடும் நல்ல சவரப்பொன்னில் வேலைசெய்தது ரூ 250 விலைக்கு கிடைத்தது. தன்னுடைய நாயகி லக்ஷ்மீக்கு தானே நேரில் அனுப்பிவிட எண்ணினான். ஆனால் தன் தாயார் அட்டிகை தோடு லக்ஷ்மீக்குப் போடவேண்டுமென்று ஆசைப்படுவதை பூர்த்தி செய்ய தன் மாமனாருக்கே இந்த நகைகளை அனுப்பிவிட்டான். தோடு வயிர வட்டிகை லக்ஷ்மீபுரம் வந்ததும் அக்கிராம ஜனங்கள் அதை நல்ல வயிரமென்றே எண்ணினார்கள். பண்ணை சுப்பய்யர் பெண் காதில் கழுத்தில் அணிந்திருப்பதை போலி வயிரமென்று சொல்லத்துணிவார் அக்கிராமத்தில் யாருமில்லை. ருக்மணி அம்மாள் தைமாத கடைசியிலே ரெது சாந்தி முகூர்த்தம் புன்னகையோடு தீர்மானம் செய்துவிட்டாள். மாமா சேஷன் தான்

மதறுஸில் வைர நகை வாங்கியிருக்கவேண்டுமென்றும் தன் மனதில் எண்ணிக்கொண்டாள். அதுபோல தன் பெண்ணிற்கும் வாங்க வேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டாள். இப்போது ருக்மணி அம்மாள் தன் சம்பந்தி சுப்பு அம்மாளை அதிகம் உபசரிக்கத்தொடங்கினாள். வைதிகவீட்டுப் பெண்ணுக்கு புது நாகரீகம் தெரியாதென்று சொன்னதையும். வைதிகவீட்டுக்காரர்கள் தன் பெண்ணுக்கு வைர நகைகள் போட்டிருப்பதையும் தன் பெண்ணுக்கு தான் வைர நகை போடாமலிருப்பதையும் மனதிற்கு கொண்டுவந்து தன்னை நாகரீக குறைவென்று எண்ணலாகாதென ஓர் அச்சமும் தோன்றிற்று. தன் பர்த்தாவிடம் எப்படியாவது சொல்லி தன் பெண்களிரண்டுக்கும் தோடுகள் வைரத்தில் வரவழைக்கச் செய்யவேண்டுமென்றும் அதுவும் முகூர்த்த காலத்திற்கு முன்னாலேயே இருக்கவேண்டுமென்றும் எண்ணம் தோன்றிற்று. தன் பர்த்தா அதுசமயம் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்.

ருக்மணி அம்மாள்: நாட்டுப் பெண்ணுக்கு வயிர அட்டிகை வயிர தோடுகள் வந்தாய்விட்டது. நீங்கள் மதறுஸ் நமது அம்பிக்கு எழுதி வயிர தோடு ஜதை 2 கொண்டுவர செய்யுங்கோ என்றாள்.

ராமய்யர்: இந்த வருடம் ஏகச்செலவு. விளைச்சல் குறைவு. குளப்புறவில் 1 மணி நெல்கூடகிடைக்கவில்லை. ரெதுசாந்தி செலவு ரூ 1000 ஆகும். போதாக்குறைக்கு இரண்டு பெண்ணுக்கு வயிர தோடு ரூ 3000-த்துக்கு நான் எங்கே போவது. இப்போது அதைப்பற்றி யோஜிக்க சமயமில்லை. பின்னால் பார்த்துக்கொள்வோமென்றார்.

ருக்மணி அம்மாள்: தன் பெண்கள் காதில் வைர தோடுகளில்லாமலும் தன்-நாட்டுப்பெண் வைரதோடு வைர நகைகளோடு இலங்குவதைக்காண மனங்கசிந்தாள். அன்று 12 மணி ரயிலுக்கு எதிர்பாராமலேயே நாராயணன் மதறுஸிலிருந்து வந்து விட்டான். ஊர் பெண்கள் திரக்ஷிக்கு மாப்பிள்ளை வந்தாய்விட்டது என்று சொல்லிக்கொண்டார்கள். நாராயணன் வந்ததும் அம்மாவிடம் மாமா சேஷன் வைர அட்டிகை தோடுவாங்கினான். நானும் நம்மாத்து குழந்தைக்கு இரண்டு ஜதை வாங்கியிருக்கிறேன் என்று சொல்லி

அம்மாவிடம் தோட்டைக்கொடுத்தான். தோடு ஜிலு ஜிலு என்று இருந்தது. குழந்தைகளை கூப்பிட்டு காதிலிட்டாள். விலைக்கு பில் (Bill) பின்னால் வருமென்று நாராயணன் சொன்னான். ருக்மணியம்மாளுக்கு பரமசந்தோஷமுண்டாகிவிட்டது.

1084-ம் ஆண்டு தை-மீ 26-உ கோலாகலமாக லக்ஷ்மீக்கும் நாராயணனுக்கும் ரெது சாந்தி முகூர்த்தம் நடைபெற்றது.



இனிமேல் வெளிவரும் கதைகள் தொடர் கதையாயிருக்கும். ஆனால் தனிக்கதைகள் சம்பிரதாயத்தையும் அனுசரித்திருக்கும். ஆதலால் வாசகர்கள் தொடர்கதை ருஜியோடு தனிக்கதை வாசிக்கும் இன்பத்தையுமனுபவிக்கலாம்.

——○○——

# விவாஹம்.

மஹரிஷியின் புத்ரி சௌபாக்யவதி:
லக்ஷ்மிக்கும்

சேலம், காலேஜ் ப்ரொபஸர் K. S. கிருஷ்ணய்யர் புத்ரன் சிரஞ்சீவி:
K. சுப்பிரமணியனுக்கும்

நாளது வருஷம் சித்திரை-மீ 25-உ (7-5-42) குருவாரத்தன்று
அரியலூரடுத்த சித்தழி என்ற சுகவாஸஸ்தலத்தில்
விவாஹம் நடந்தேறியது.

மேற்கண்ட விவாஹத்தை நடத்தித்தருவதில் பூர்ணமுயற்சியும், உதவியும்
செய்து தந்த
திருச்சிராப்பள்ளி, மைன்ஸ் லிமிடெட்.,
கனம் ஸ்ரீ: அ. லக்ஷ்மப்பய்யர் அவர்களுக்கு
மஹரிஷி தனது பத்னியோடு தங்கள் நன்றியை தெரிவிப்பதுடன்
ஏனைய மற்ற நண்பர்களுக்கும் அவர்களுடைய பக்ஷமுள்ள
ஆதரவுகளுக்கு இதன்மூலம் வந்தனம் சொல்லப்படுகிறது.

---

ஆச்ரம பழக்கம்: அதாவது சுசீலை, சுபாஷணம், தெய்வபக்தி, பெரியோர்களுக்கு தொண்டாற்றல் என்ற உத்தம தர்மத்தில் பழகியிருக்கும் பெண்கள் விவாஹத்திற்குரிய வயது வந்தவர்களாயிருக்கிறார்கள். ஆச்ரமத்திலேயே ஆர்ய சம்பிரதாயத்தை ஒட்டி விவாஹம் செய்துகொள்ளலாம். ஆர்ய தர்மத்தை அனுஷ்டிக்கும் ஆடவர்கள் தேவை.

பாரத்வாஜ ஆச்ரமத்தில் வஸிக்க விரும்புவோர்களுக்கு இனாமாக பூமி, வீடு கட்டிக்கொள்ள கொடுக்கமுடியும். அவர்கள் ஆச்ரம சம்பிரதாயங்களை ஒப்புக்கொண்டவர்களாயிருக்கவேண்டும். கிராமவாஸம், தாம்பரவர்ணீநதிக்கரை, சுத்த ஜலம், நல்ல காற்று, அடர்ந்த விருக்ஷங்கள், மலைவளகாக்ஷி, நல்ல பஸ்தா. விபரத்திற்கு எழுதி கேளுங்கள். ரூ. 3000-த்துக்கு ஓர் வீடும், வருடத்தில் எட்டுக் கோட்டை நெல்லும் கிடைக்கும்.

மஹரிஷி கிருஷ்ணஜீ, கல்லிடைக்குறிச்சி.